# A LARGER GRAMMAR

OF THE

# TAMIL LANGUAGE



IN BOTH ITS DIALECTS;

TO WHICH ARE ADDED

THE NANNUL, YAPPARUNGALAM,

AND OTHER

NATIVE AUTHORITIES;

With copious exercises taken from the best authors, and an Analytical Index.

BY THE

REV. G. U. POPE.

"GRAMMAR, though a difficult study, is absolutely necessary in the search after philosophical truth ..... and is no less necessary in the most important questions concerning religion and civil society."—HORNE TOOKE.

Madras:
PRINTED AND PUBLISHED BY P. R. HUNT,
AT THE AMERICAN MISSION PRESS, 167 POPHAM'S BROADWAY.
1858.

TO

THE RIGHT HONORABLE

# GEORGE FRANCIS ROBERT LORD HARRIS,

GOVERNOR OF MADRAS,

FIRST CHANCELLOR OF THE

## Madras University.

MY LORD,

I have sought permission to inscribe to you this work, prepared at the request of the Director of Public Instruction, chiefly for the use of the students in the University over which your Lordship presides, because I believe you share in the conviction that to the majority of those who shall be trained there, the *accurate and scientific study of their own language*,—a language hardly inferior to any in sweetness, flexibility, copiousness and force,—is calculated to be as useful as any other secular study, while its tendency to train the mind to habits of patient research and close analysis must render it as beneficial a discipline to the young as the study even of the mathematics themselves.

That your Lordship may be permitted to see the increasing prosperity of the University of which you are the founder, as well as of the other many undertakings by which you are seeking to promote the good of those under your controul, is the fervent wish and prayer of,

My Lord,

Your Lordship's

Faithful and obedient servant,

G. U. POPE.

POPE'S THIRD

# TAMIL GRAMMAR.

PART I. CATECHISM.



# இலக்கண நூல்

முதலாம் பங்கு.

இலக்கண வினாவிடை.



இஃது

தஞ்சையிலுள்ள

ஜீ. யூ. போப்பையரால்

செய்யப்பட்டது.

MADRAS:

PRINTED AND PUBLISHED BY P. R. HUNT,

AT THE AMERICAN MISSION PRESS, 167, POPHAM'S BROADWAY.

1857.

# Advertisement.

THIS work is designed to be a complete Grammar of the Tamil language in both its dialects. It is hoped that nothing of importance has been omitted.

It is divided into two parts, the first being a full exposition in question and answer, of the Grammar of the language, with copious examples so arranged as to form a series of reading lessons. The second part consists of the Native authorities, to which appeal is commonly made in doubtful cases.

A Grammatical Vocabulary has been added. The work is intended for private Students, Indian and European, as well as for the highest Classes in Colleges and Schools.

TANJORE, *February*, 1857.

# ERRATA.

# பிழை திருத்தல்.

[...e errors should be corrected before the book is put into the hands of the student. It will ... observed that in many cases *transmutations* required by rule have not been attended to.]

| | வினா. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| விடை. | 6 | 13 | நின்கூறலர் | நின்றவர் |
| | 6 | 15 | தம்முடையார் | தம்முடையான் |
| | 33 | 15 | நயப்பாரு, | நயப்பாரு’ |
| | 34 | 18 | கட்ட | கட் |
| | 37 | 18 | 109 | omit. |
| | 40 | 15 | ஐயத்தைநீங் | ஐயத்தி னீங் |
| | 40 | ,, | தெரி | தெளி |
| | 63 | 29 | சரன் | சுரன் |
| | 64 | 8 | 303, 304 | 303–314 |
| | 70 | அப். | | |
| | | 11 | உண்டமே | உண்டாமே |
| | 74 | 29 | நிலையினா.’ | நிலையினா’ |
| | 74 | 32 | கொண்டார் | கொண்டாற் |
| | 77 | 1 | 146 | 140 |
| | 78 | 6 | 382 | 423. 133 |
| | 82 | அப். | | |
| | | 16 | பா ..... வீ | நா ...... வி |
| | 86 | அப். | | |
| | | (௫) | கருணை | கருணை |
| | 89 | 5 | 354 | 395 |
| | 93 | 31 | 353 | 394 |
| | 96 | 45 | புணை | புணை |
| | 96 | (o)8 | அவர் | அவா |
| | 98 | 5 | 321 | 320. |
| | 107 | TIT. | II. (IV)...420-441. | II. (III) ... 352-373 |
| | 107 | 8 | 420 | 352 |
| | 110 | 7 | 421 | 353 |
| | 112 | 4 | 423 | 355 |
| | 112 | 25 | பினாஞ் | பீனாஞ் |
| | 113 | 4 | 425. 428 | 357–361 |
| | 114 | 4 | 424. 429. 430 | 356. 360. 361 |
| | 115 | 5 | 436 | 368 |
| | 117 | 9 | 438 | 372 |
| | 118 | TIT. | 442. 460 | 374–392 |
| | 118 | 4 | 442 | 374 |

| | சூத். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| நன்னூல். | 79 | 4 | 414 | 455 |
| | 84 | 5 | 414 | 455 |
| | 196 | 2 | பஃதரதி | பஃதாதி |
| | 244 | 2 | அற்றி,ற் | அற்றிற் |
| | 276 | 13 | ஆகும். | ஆகும் |
| | 280 | 18 | பொருள் | பொருள |
| | 391 | 29 | அர்த்த | ஆர்த்த |
| | 393 | 5 | சொல்லும். | சொல்லும்; |
| | 455 | (உ-ம்.) | Insert: | |

"கொடி, குவளை, கொட்டை; நுசுப்புண் கண், மேனி;
மதிபவளம், முத்தம்; முகம், வாய், முறுவல்;
பிடி, பிணை, மஞ்ஞை; நடை, நோக்குச், சாயல்;
வடிவினளே வஞ்சி மகள்."

| | | | | |
|---|---|---|---|---|
| யாப்பருங். | 38 | | Consonants | Consonance. |

# முகவுரை.

காப்பு.

இலங்கு புகழ் சேர்பல இலக்கணம் உடையோன்,
சொல்லரும் முதலவன், சொற்குக் காரணன்
மலரடி இறைஞ்சி அறைகுவன் நற்றமிழ்
இலக்கண வினு விடை இளையோர் பொருட்டே.

தமிழ்ப்பாஷை ஆவது எது?

தட்சணத்தில் வழங்கிய திரவட பாஷைகளில் ஒன்று. அது கன்னடம், தெலுங்கு, மலையாளம் முதலியவைகளுக்கு இனமானது.

தமிழ்ப்பாஷையானது எவ்விடங்களில் வழங்கும்?

பெரும்பான்மையாய்த் திருநெல்வேலி, மதுரை, திருசிருப்பள்ளி, தஞ்சாவூர், வட ஆறுகாடு, தென் ஆறுகாடு, சேலம் கோயம்புத்தூர், செங்கற்பட்டு, சென்னபட்டணம் என்னுஞ் சில்லாக்களிலும் இலங்கைத்தீவின் வடபுறத்திலும் வழங்கும்.

"குணகடல் குமரி குடகம் வெங்கடம்
என நான் கெல்லையின் இருந்தமிழ்க் கடல்." [நன்னூல்.]

அந்தப்பாஷை எத்தனைவகை ஆம்?

செந்தமிழ் என்றும், கொடுந்தமிழ் என்றும் இருவகை ஆம். செந்தமிழ் என்பது செய்யுள் தமிழ். கொடுந்தமிழ் என்பது வழக்கமான வாசகத்தமிழ்.

தமிழ்நூல்கள் எத்தனைவகை ஆம்?

இலக்கியம், இலக்கணம் என இருவகை ஆம். இலக்கியம் என்பது வழுவின்றி இயற்றப்பட்ட பலவகைப் பிரபந்தங்கள் ஆம். இலக்கணம் என்பது இலக்கியத்துக்குரிய விதிகளை உணர்த்துவதாம்.

"இலக்கியம் என்பதிலக்கணர்சான்றாய்
வழங்கி அவ்விலக்கணை மல்கியதாமே."

---

"இலக்கணம் என்பதிலக்கிய முறை உற
வைத்ததென்று வழங்கப்படுமே." [பேர் அகத்.]

அவ்விலக்கியங்களில் பிரதானமானவைகள் எவை?

திருவள்ளுவர் குறள், நாலடி நானூறு, சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், அவ்வைசெய்தபாடல், கம்பன் இராமாயணம், அதி

வீரராமன்பாடிய நைடதம் முதலியவைகளே. இவைதவிர இத்தேசத்தாரும் பரதேசத்தாருஞ்செய்த வாசகநூல்கள் பலஉண்டு.

இலக்கணநூல்களில் பிரதானமானவைகள் எவை?

பேர் அகத்தியம், தொல்காப்பியம், நன்னூல், இலக்கணவிளக்கம், இலக்கணக்கொத்து, தொன்னூல்விளக்கம், காரிகை, தண்டியலங்காரம் முதலியவைகளே.

தமிழ்ப்பாஷையில் கலந்துவரும் மொழிகள் எவை?

மற்றைய திரவிடபாஷைகளின் மொழிகளும், துருக்கபாஷையின் மொழிகளும், இங்கிலீஸ் பாஷையின் மொழிகளும் கலந்துவருவதன்றியும், முக்கியமாய் சமஸ்கிருத பாஷையின் மொழிகள் அநேகம்வரும்.

தமிழ்ப்பாஷையைப் பேசுவோரும், எழுதுவோரும் அதைப் பிரயோகப்படுத்துவதில் கவனிக்கத்தக்க முக்கியமான விதிகள் எவை?

[க.] தாங்கருதிய பொருளை யாவரும் ஐயமின்றி எளிதில் அறியும்பொருட்டுத் தெளிவாய் எழுதவேண்டும்.

[உ.] தமிழ்ப்பாஷையின் நடைப்படிக்கு இலக்கிய உதாரணங்களுக்கு இசையாய்ப் படிப்போர்க்கு இன்பந்தோன்ற எழுதவேண்டும்.

[ங.] இயன்றமாத்திரம் அந்நியபாஷையின் மொழிகளை நீக்கி இயற்றமிழ்ச் சொற்களைத்தெரிந்து எழுதவேண்டும்.

[ச.] பயன்படாத சந்திவிகாரங்களை நீக்கிவிடவேண்டும். பின்வரும் வினாவிடையில் விளக்கிய விகாரங்கள் செய்யுளில் வழங்கி இருப்பதால் அவற்றை அறியவேண்டும்; ஆகிலும், நாம் எழுதுவதில் பெரும்பான்மையாய் அவ்விதிகளைக் கவனிக்கவேண்டாம்.

இந்நூலில் தமிழ் ஆசிரியர்கள் உணர்த்தாத பலவற்றை விதிப்பதற்குக் காரணம் என்ன?

நன்னூலின் கடைசிச் சூத்திரத்தில்

"பழையன கழிதலும், புதியன புகுதலும்,
வழுவல கால வகையினானே"

என்றபடி இக்காலத்தில் வழங்காதவற்றை ஒழிப்பதும், நூதன கல்விகளை ஆராய்கிறவர்களுக்கு வேண்டியவைகளைக் கூட்டுவதும் நூலோர் கடமை.

முகவுரை முற்றிற்று.

# இலக்கண வினாவிடை.[A]

## I. ORTHOGRAPHY.

## முதலாவது: எழுத்ததிகாரம்.[B]

[கவனிப்பு.—அதிக முக்கியமாயிராத சில குறிப்புகளை அடியில் சிறு எழுத்தாற் காட்டி இருக்கும் என்றறிக.]

### (I.) LETTERS.

### (I.) எழுத்தியல்.

**1.** CLASSES OF LETTERS.

க.—தமிழ்ப் பாஷையின் எழுத்துக்கள் எத்தனைவகைப்படும்?

உயிர் எழுத்து, மெய் எழுத்து, ஆய்த எழுத்து, உயிர்மெய் எழுத்து என நான்குவகைப்படும்.

[நன்னூல் 59. 63. 90.]

---

GRAMMAR IN GENERAL.

(A.) இலக்கணம் ஆவதென்ன?
இலக்கியத்தின் அமைதி ஆம்.

"இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே
எள்ளின்றாகில் எண்ணெயும் இன்றே;
எள்ளினின் றெண்ணெய் எடுப்பதுபோல
இலக்கியத்தினின் றெடுபடும் இலக்கணம்." [பேர் ஆசி.]

இலக்கண நூல் என்பதென்ன?
இலக்கணத்தின்படி பிழை இன்றிப் பாஷையின் நடையை விளக்குவதாம்.

இலக்கணம் என்பது எத்தனை பகுதியுள்ளது?
எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், யாப்பதிகாரம், பொருளதிகாரம், அணி அதிகாரம் என ஐந்து பங்குள்ளதென்று கூறுவார்கள்; இவற்றொடு சொற்பொருள் அதிகாரம் என்பதைக் கூட்டினால் ஆறுபங்காகும்.

ORTHOGRAPHY.

(B.) எழுத்ததிகாரம் எத்தனை இயலால் அறியப்படும்?
எழுத்தியல், எழுத்துப்புணரியல் என இரண்டியலால் அறியப்படும்.

DEF. OF LETTER.

எழுத்தாவதென்ன?
மொழிக்கு முதற்காரணம் ஆகிய ஓசை எழுத்தாம். அது ஒலிவடிவும் வரிவடிவும் ஆகிய இருவகை ஆம். உச்சரிக்கப்படுவது ஒலிவடிவு. எழுதப்படுவது வரி வடிவு.

[செவிப்புலனால் உணரப்படுவது ஒலிவடிவு. கட்புலனால் உணரப்படுவது வரிவடிவு.]

[நன்னூல் 58.]

**2.** VOWELS.

௨.—உயிர் எழுத்தெவை?

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ இப்பன்னிரண்டும் உயிர் எழுத்தாம்.

[ ஆவி எனவும் அச்சு எனவும்படும். ]

**3.** SHORT VOWELS.

௩.—இவற்றுள், குற்றெழுத்தெவை?

அ, இ, உ, எ, ஒ, குற்றெழுத் தைந்தே.

[ குறில் எனவும்படும். ]

[ நன்னூல் 64. ]

**4.** LONG LETTERS.

௪.—நெட்டெழுத்தெவை?

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ நெட்டெழுத்தேழே.(C)

[ நெடிலுநெடுமையுந் தீர்க்கமு நெடிற்பெயர். (பேர் அகத்தியம்.) ]

[நன்னூல் 65.]

**5.** DEMONSTRATIVE LETTERS.

௫.—சுட்டெழுத்தெவை?

சொல்லுக்கு முதலில், பொருள்களைக்குறித்துக் காட்டும் அர்த்தத்திலே, தனித்து நிற்கும் அ, இ, உ சுட்டெழுத்தென்றும் பெயர் பெறும்.

அகரந் தூரத்தில் இருக்கிற பொருளையும், இகரஞ் சமீபத்தில் இருக்கிற பொருளையும், செய்யுளிலேமாத்திரம் வழங்கிய உகரம் எதிர்முகம் இன்றி பின்நிற்கும் பொருளையுங்காட்டும்.(D)

[நன்னூல் 66.]

(உதாரணம்.) அவன, இது, உவன், மொழிக்கு உறுப்பாய் வந்தன: அகச்சுட்டு.
அம்மனிதன், இவ்வீடு, உவ்விடம்; மொழியைச் சார்ந்து வந்தன: புறச்சுட்டு.

☞ (க.) அம்மனிதன், இம்மனிதன் என்பவை அந்த மனிதன், இந்த மனிதன் என விரியும்.
(உ.) இன்னான், இன்னாள், இன்னது, இன்ன,
அன்னான், அன்னாள், அன்னது, அன்ன, முதலியவைகள் இச்சுட்டினால் உண்டாகிய மொழிகள் உண்டு.

(உ-ம்.) "மனத்தானு மாந்தர்க்குணர்ச்சி
இனத்தானும் இன்னான் எனப்படுஞ் சொல்."

---

DIPTHONGS.

(C.) இவற்றுள், ஐ, ஔ இரண்டும் இணைஉயிர்கள் எனவும்படும். எப்படிஎனில், அகரமும் இகரமும் சேர்ந்து ஐகாரம் ஆம். அகரமும் உகரமும் சேர்ந்து ஔகாரம் ஆம்.

(D.) அவையே, அகம் புறம் அண்மை சேய்மை பொதுமைக்கணும். [பேர் அகத்தியம்]

### 6. INTERROGATIVE LETTERS.

௬.—வினா எழுத்தெவை?

ஆ, எ, ஏ, ஓ எனவும், யா என்னும் உயிர்மெய்யெழுத்தும், வினா எழுத்தென்னும் பெயர்பெறும்.

இவற்றுள் எ, யா மொழிமுதலிலும்; ஆ, ஓ மொழி இறுதியிலும்; ஏ இரண்டிடத்திலும் வரும்.

[நன்னூல் 67.]

(உ-ம்.) அவனா, எவன, ஏது, இவனே, மரமோ, யாவை. (E.)

---

☞ (க.) எம்மனிதன் எ-து எந்தமனிதன் என விரியும்.
(உ.) [யார் எ-து வினாவினைக்குறிப்பு முற்று; அது ஐம்பால் மூவிடத்திற்கும் பொதுவாம். (நன்னூல். 349.) எவன் எ-தும் அதுவே. (நன்னூல் 350.)]

அப்பியாசம். (6.)

---

"எவர் எவர் எத்திறத்தர் அத்திறத்தராய் நின்றவர்
அவர்க்காவன கூறி, எவர் எவர்க்கும்
உப்பாலாய் நிற்ப மற்றெம்முடையார், தம்முடையார்
எப்பாலு' நிற்ப தென?"



### 7. CONSONANTS.

எ.—மெய்யெழுத்தெவை?

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் இப்பதினெட்டும் மெய்யெழுத்தாம்.

[ஒற்று, உடல், உடம்பு, அல் எனவும் படும்.]

[நன்னூல் 63.]



### 8. HARD LETTERS.

அ.—இவற்றுள், வல்லெழுத்தெத்தனை?

க, ச, ட, த, ப, ற என வல்லெழுத்தாறும்.

[வன்கணம் எனவும், வன்மை எனவும், வல்லினம் எனவும்படும்.]

[நன்னூல் 68.]

---

(E.) யாவென் வினாவே அஃறிணைப் பன்மை;
விகுதிபெறுங்கால் ஐம்பாலினும் வினாவாம். [பேர்அகத்தியம்.]

(உ-ம்.) யாகுறிய. யாவன். யாவள். யாவர். யாது. யாவை.

---

"யாகாவார் ஆயினும் நாகாக்க."

**9.** SOFT LETTERS.

கூ.—மெல்லெழுத்தெத்தனை?

ங, ஞ, ண, ந, ம, ன என மெல்லெழுத்தாறும்.

[மென்கணம் எனவும் மென்மை எனவும், மெல்லினம் எனவும்படும்.]

[ நன்னூல் 69. ]



**10.** MEDIAL LETTERS.

க0.—இடையெழுத்தெத்தனை?

ய, ர, ல, வ, ழ, ள என இடையெழுத்தாறும்.

[இடைக்கணம் எனவும், இடைமை எனவும், இடையினம் எனவும்படும்.]

[ நன்னூல் 70. ]



**11.** PRIMARY AND SECONDARY LETTERS.

கக.—இவற்றிற்கு வேறே பெயரும் உண்டோ?

தலையான எழுத்தாகும் உயிர் பன்னிரண்டும், மெய் பதினெட்டுமாகிய முப்பதும் முதல் எழுத்தென்றும் பெயர் பெறும். மற்றைய எல்லா எழுத்துகளும் சார்பு எழுத்தென்னப்படும். (F.)

[ நன்னூல் 58, 59, 60, 63. ]

---

¶ PAIRS OF LETTERS.

(F.) மேற்சொல்லிய எழுத்துகளுள் இன எழுத்துகள் எவை?
ஒன்றுக்கொன்று இனமாய் இருக்கிற எழுத்துகள் இனவெழுத்துகள் எனப்படும்.

[நன்னூல் 71, 72.]

(க.) உயிர் எழுத்துகளில் நெட்டெழுத்துக்கு அதனதன் குற்றெழுத்தே இனமாம்.

(உ-ம்.) அகாத்திறகு ... ... ... ஆ
இ ... ... ... ... ... ஈ, ஐ
உ ... ... ... ... ... ஊ, ஔ
எ ... ... ... ... ஏ
ஒ ... ... ... ... ... ஓ

(உ.) வல்லின எழுத்துக்கு அதற்கு அடுத்த மெல்லின எழுத்து இனமாம்.

(உ-ம்.) க ... ... ... ... ... ங
ச ... ... ... ... ... ஞ
ட ... ... ... ... ... ண
த ... ... ... ... ... ந
ப ... ... ... ... ... ம
ற ... ... ... ... ... ன

(ங.) இடையின எழுத்துக்கு இனம் இல்லை.

**12.** THE GUTTURAL.

௧௨.—ஆய்தம் ஆவது என்ன?

சிலவிடத்தில் உயிர்போலவும், சிலவிடத்தில் மெய்போலவும் ஒலித்து, உயிரும் ஆகாமல் மெய்யும் ஆகாமல், தனிநிலையாய் வருகிற ஓர் எழுத்தாம்.

இது குற்றெழுத்துக்கும் வல்லெழுத்துக்கும் நடுவே வரும். (G.)

அதற்கு வடிவு ஃ அல்லது ஃ.

[ நன்னூல் 90. ]

(உ-ம்.) இஃது, அஃறிணை.

[உயிரோடும் மெய்யோடும் கூடியுங் கூடாதும் தனி நிற்றலால் தனிநிலை எனவும்படும்.]



**13.** VOWEL CONSONANTS.

௧௩.—உயிர்மெய்யெழுத்தெவை?

பதினெட்டு மெய்மேலும் பன்னிரண்டு உயிருந் தனித்தனி ஏறி வருதலால் தோன்றிய இருநூற்றுப்பதினாறும் உயிர்மெய் எழுத்தாம். (H.)

[ நன்னூல் 89. ]

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்.) | ககர மெய்யாகிய | க் | என்பதன்மேல் |
| | அகரம் ஏற | க | எனவும், |
| | ஆகாரம் ஏற | கா | எனவும், |
| | இகரம் ஏற | கி | எனவும் வரும். |

மற்றவையும் இவ்வாறே.

(G.) ஆய்தங் குறில்வலிக் கரகு' நடுவே;
அஃதீற் றுலளத் திரிந்துழி அஃகும். [தொன்னூல்.]

(H) உயிரே மெய்யணைந் துயிர்மெய் ஆகும்;
அவைஇரு நூற்றொரு பத்தா றென்ப. [தொன்னூல்.]

இவ்வுயிர்மெய்யெழுத்துகளின் அட்டவணை ஆவது:

| | | அ | இ | உ | எ | ஒ | ஆ | ஈ | ஊ | ஏ | ஐ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | புள்ளி நீக்குவது. | மேல் விலக்கு. | கீழ்விலக்கு, இறங்குகீற்று, மடக்கேறுகீற்று. | முன்கோடு. | முன்கோடு பின்கால். | பின்கால், கீழ்ப்பிறை. | சுழிமேல் விலக்கு. | பின்வளைதலைக்கீற்று இறங்குகீற்றுக்கீழ் விலங்கு மடக்கேறு கீற்றுக்கால். | முன்சுழிக் கோடு. | முன்னிணைக்கோடு. முன்வளைதலைக் கீற்று. | முன்சுழிக்கோடு, பின்கால். முன்சுழிக்கோடு, கீழ்ப்பிறை. | முன் கோடு, பின் கோட்டுக்கால். |
| வல்லின உயிர்மெய் க X கஉ = எஉ. | க் | க | கி | கு | கெ | கொ | கா | கீ | கூ | கே | கை | கோ | கௌ |
| | ச் | ச | சி | சு | செ | சொ | சா | சீ | சூ | சே | சை | சோ | சௌ |
| | ட் | ட | டி | டு | டெ | டொ | டா | டீ | டூ | டே | டை | டோ | டௌ |
| | த் | த | தி | து | தெ | தொ | தா | தீ | தூ | தே | தை | தோ | தௌ |
| | ப் | ப | பி | பு | பெ | பொ | பா | பீ | பூ | பே | பை | போ | பௌ |
| | ற் | ற | றி | று | றெ | றொ | றா | றீ | றூ | றே | றை | றோ | றௌ |
| மெல்லின உயிர்மெய் க X கஉ = எஉ. | ங் | ங | ஙி | ஙு | ஙெ | ஙொ | ஙா | ஙீ | ஙூ | ஙே | ஙை | ஙோ | ஙௌ |
| | ஞ் | ஞ | ஞி | ஞு | ஞெ | ஞொ | ஞா | ஞீ | ஞூ | ஞே | ஞை | ஞோ | ஞௌ |
| | ண் | ண | ணி | ணு | ணெ | ணொ | ணா | ணீ | ணூ | ணே | ணை | ணோ | ணௌ |
| | ந் | ந | நி | நு | நெ | நொ | நா | நீ | நூ | நே | நை | நோ | நௌ |
| | ம் | ம | மி | மு | மெ | மொ | மா | மீ | மூ | மே | மை | மோ | மௌ |
| | ன் | ன | னி | னு | னெ | னொ | னா | னீ | னூ | னே | னை | னோ | னௌ |
| இடையின உயிர்மெய் க X கஉ = எஉ. | ய் | ய | யி | யு | யெ | யொ | யா | யீ | யூ | யே | யை | யோ | யௌ |
| | ர் | ர | ரி | ரு | ரெ | ரொ | ரா | ரீ | ரூ | ரே | ரை | ரோ | ரௌ |
| | ல் | ல | லி | லு | லெ | லொ | லா | லீ | லூ | லே | லை | லோ | லௌ |
| | வ் | வ | வி | வு | வெ | வொ | வா | வீ | வூ | வே | வை | வோ | வௌ |
| | ழ் | ழ | ழி | ழு | ழெ | ழொ | ழா | ழீ | ழூ | ழே | ழை | ழோ | ழௌ |
| | ள் | ள | ளி | ளு | ளெ | ளொ | ளா | ளீ | ளூ | ளே | ளை | ளோ | ளௌ |

ஆக: குற்றுயிர்மெய். ரு X கஅ = கூ0.

ஆக: நெட்டுயிர்மெய். எ X கஅ = கஉசு.

**14.** PROLONGATION OF SOUND.

கச.—அளபெடை என்பதியாது?

செய்யுளில் ஓசை குறைந்தவிடத்து எழுத்தை நீட்டிச் சொல்வதே அளபெடை என்றும்.

இது உயிரளபெடை என்றும், ஒற்றளபெடை என்றும், இருவகை ஆம்.

[நன்னூல் 91, 92.]

(உ-ம்.) ஓதல் என்றற்கு ஓஒதல் என நெட்டெழுத்தோடே அதற்கினமான குற்றெழுத்து வந்ததும்; எடுப்பதும் என்றற்கு எடுப்பதூஉம் என குறிலே நெடிலாகிப் பின்னர் அளபெடுத்ததும்; சங்கு என்றற்கு சஙங்கு என ஒற்றெழுத்து அளபெடுத்ததுங்காண்க.

"இலாஅர்க் கில்லைத் தமர்."

☞ [புலுதம் எனவும் படும்.]

---

**15.** ABBREVIATED உ.

கரு.—குற்றியல் உகரம் என்பதியாது?

தனிக்குறிலொழிய மற்றைய எழுத்தின் கடைசியில் கு, சு, டு, து, பு, று வரில் அவ்வல்லெழுத்தின்மேல் இருக்கும் உ குற்றியல் உகரம் எனப்படும்.

[நன்னூல் 94.]

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | நாகு, | காசு, மாடு, | என | நெடிற்றொடர் | மொழிக்குற்றியல் | உகரம், |
| | எஃகு, | கஃசு, | என | ஆய்தத்தொடர் | மொழிக்குற்றியல் | உகரம், |
| | வரகு, | பலாசு, | என | உயிர்த்தொடர் | மொழிக்குற்றியல் | உகரம், |
| | எழுந்து, | காற்று, | என | வன்றொடர் | மொழிக்குற்றியல் | உகரம், |
| | குரங்கு, | பண்பு, | என | மென்றொடர் | மொழிக்குற்றியல் | உகரம், |
| | சால்பு, | வெய்து, | என | இடைத்தொடர் | மொழிக்குற்றியல் | உகரம்.(I.) |

☞ [மற்றைய உகரம் முற்றுகரம் எனப்படும்.]

---

**16.** QUANTITY.

கசா.—மாத்திரை ஆவதென்ன?

கண்ணிமைப் பொழுதும், கைந்நொடிப் பொழுதும் மாத்திரை என்னப்படும்.

[நன்னூல் 99, 100.]

☞ [ஒற்றுக்கும், குற்றியலிகரத்திற்கும், குற்றியலுகரத்திற்கும், ஆய்தத்திற்கும் அரைமாத்திரையும், குறிலுக்கு ஒரு மாத்திரையும, நெடிலுக்கு இரு மாத்திரையும் உயிர் அளபெடைக்கு மூன்று மாத்திரையும் அளவாம்.]

---

¶ SHORTENED ஐ.

(I.) ஐகாரக் குறுக்கம் ஆவது என்ன?

மொழிக்கு முதலிலும், இடையிலும், கடையிலும் குறைவதாகிய ஐகாரம் ஐகாரக் குறுக்கம் எனப்படும. [நன்னூல் 95.]

(உ-ம்.) ஐயன், இடையன், பனை.

---

¶ SHORTENED ஔ, ம், ஃ.

ஔகாரக் குறுக்கமாவது என்ன?

மொழி முதலிலே ஔ குறுகும். [நன்னூல் 95.]

(உ-ம்.) மௌவல்.

---

[மகரக் குறுக்கத்தையும் ஆய்தக் குறுக்கத்தையுங்குறித்து, நன்னூல் 96, 97. காண்க.]

**17.** INTERCHANGE.

கஎ.—போலி என்பதென்ன?

ஔகாரத்திற்கு .... .... அவ் என்றும்,
ஐகாரத்திற்கு .... .... .. அய் என்றும்,
நகரத்திற்கு .... .... .... ஞ என்றும்,
லகரத்திற்கு .... .... .... ர் என்றும்,
மொழியீற்றுமகரத்திற்கு ன் என்றும்,
குற்றியலுகரத்திற்கு .... அர் என்றும்,
அகரத்திற்கு .... .... .... ஐ என்றும் வந்து ஒத்து நடப்பது போலி என்றும்.

[நன்னூல் 122–125.]

(உ-ம்.) ஔவியம்—அவ்வியம்; வையம்—வய்யம்; நண்டு—ஞண்டு; கலம்—கலன்; மயல்—மையல்; குடல்—குடர்; அரும்பு—அரும்பர்; இனபம்—இனபு.

அப்பியாசம்.

"சேர்க்கை மரன் ஒழியச் சேவீங்கு புட்போல."
[மரன் = மரம்.]

"தன்னமை பரந் தாங்கிய ஒட்டகம்." [பாரம்.]

"நுனிக் கொம்பர் ஏறினார் அஃதிறந்தூக்கின
உயிர்க்கிறுதி ஆகி விடும்."
[கொம்பர் = கொம்பு]

மேற்காட்டிய உதாரணங்களில் பதங்களைப் பகுக்க.

இதில் குற்றியலுகரம் உண்டோ?
முற்றுகரம் உண்டோ? எது? என்?

"வெங்கனலால் அண்ட கூடமுஞ் சாம்பராய் ஒழியும்."
[சாம்பர் = சாம்பல்.]



**18.** SANSCRIT LETTERS.

கஅ.—தமிழிலே வழங்கிவரும் வட எழுத்துகள் எவை?

க்ஷ, ஷ, ஸ, ஜ, ஹ முதலியவுஞ் சிலவிடத்து வரும்.

[நன்னூல் 146, 147.]

(உ-ம்.) பக்ஷம்—இது தமிழிலே பட்சம் எனவும் பக்கம் எனவும் வழங்கும்.

பாஷை ... ... ... ... ... ... பாடை.
புஸ்தகம் ... ... ... ... ... ... புத்தகம்.
கஜம் ... ... ... ... ... ... கசம், கயம்.
மோஹம் ... ... ... ... ... ... மோகம்.
ஹானி ... ... ... ... ... ... ஆனி. (J.)

¶ PRODUCTION OF LETTER SOUNDS.

(J) எழுத்தின பிறப்பிடங்கள் எவை?
கழுத்து, தலை, மூக்கு, மார்பு என நான்காம்.
[நன்னூல் 74.]

இவற்றுள் எந்த எந்த எழுத்துகள் எந்த எந்த இடத்திற் பிறக்கும்? [நன்னூல் 75.]
உயிரும் இடையும் கழுத்திற் பிறக்கும்.
வல்லெழுத்துகள் மார்பில் பிறக்கும்.
மெல்லெழுத்துகள் மூக்கிற் பிறக்கும்.
ஆய்தம் தலையிற் பிறக்கும்.
[நன்னூல் 87.]

---

### ORGANS OF SPEECH.

எழுத்துகள் எவற்றின் தொழிலால் உச்சரிக்கப்படும்?
உதடு, நாக்கு, பல், அண்ணம் ஆகிய நான்கின் தொழிலால் உச்சரிக்கப்படும்.
[நன்னூல் 74.]

☞ [இன்னம் எழுத்தின் பிறப்பைக்குறித்து நன்னூலில் 74–88. காண்க.]

---

### ¶ PECULIARITIES OF PRONUNCIATION.

இவ்வெழுத்துகளில் சில இயற்றமிழிலும் உச்சரிப்பிலே வேறுபடுமா?
சில வேறுபடும்.

(க.) அ இருவகையாய் உச்சரிக்கப்படும்.
அரவு எ-ல் இயல்பான ஓசையைப்பெறும்.
அவன் என்பதில் ஈற்றசையிற் குறுகும்.

(உ.) சில உயிர்கள் ட, ள, ழ, ற முன் தமதியல்பான ஓசையில் வேறுபடும்.
(உ-ம்.) இடம், வீடு, வேளை, கீழ், பிறன், பேறு.

(௩.) க, த, ப என்பவை இருவகையாய் உச்சரிக்கப்படும்.
மொழிமுதலிலும், உயிரற்றவிடத்தும், இரட்டிக்கிறபொழுதும் கடூத ஓசையைப்பெறும்.
(உ-ம்.) கண், புக்கில்.
தோன்றல், அடித்தான்.
பானை, அப்பம்.
மற்ற இடங்களில் மந்த ஓசையைப் பெறும்.
(உ-ம்.) மகன். அது. அன்பு.

(௪.) ச இரட்டிக்கிற பொழுதும், ட, ற என்னும் ஒற்றுகளின பின்னும் கடூத ஓசையைப்பெறும்.
(உ-ம்.) அச்சம். ஆட்சி. முயற்சி.

---

### ¶ INITIAL LETTERS.

சொற்களுக்கு முதலில் நிற்கும் எழுத்துகள் எவை?
பன்னிரண்டு உயிரும் க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங என்னும் உயிர்மெய்களுஞ் சொற்களுக்கு முதலில் நிற்கும்.
[நன்னூல் 102.]

---

### FINAL LETTERS.

சொற்களுக்கு இறுதியில் நிற்கும் எழுத்துகள் எவை?
உயிர்களும், ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள என்னும் மெய்களும், குற்றியலுகரமுஞ் சொற்களுக்கு இறுதியில் வரும்.
[நன்னூல் 107. 109.]

---

### LETTERS WHICH COMBINE IN WORDS.

சொற்களுக்கு இடையிலே நின்று மயங்கிவரும் எழுத்துகள் எவை?
இடையிலே க, ச, த, ப தம்முடனே தாம் சேர்ந்து மயங்கிவரும்.
ர, ழ, பிற மெய்களோடு சேர்ந்து மயங்கிவரும்.
மற்ற மெய்கள் தம்முடனும் பிறவுடனும் மயங்கி வரும்.
[நன்னூல் 110.]

☞ [எழுத்தின் முதனிலை, கடைநிலை, இடைநிலை ஆகிய மூவகை நிலையைக் குறித்து நன்னூல் 102–121. காண்க.]

எழுத்தியல் முற்றிற்று.

## (II.) COMBINATIONS OF LETTERS.

## (II.) எழுத்துப்புணரியல். [நன்னூல் 151.]

**19.** CHANGE OF LETTERS.

ககூ.—விகாரம் என்பதென்ன?

மொழியோடு மொழி, வேற்றுமை வழியிலாவது, அல்வழியிலாவது, பொருந்தும்பொழுது நிலைமொழியின் ஈற்றெழுத்தாகிலும், வருமொழியின் முதலெழுத்தாகிலும் அவ்விரண்டெழுத்துகளுமாகிலுந், திரிவதுங் கெடுவதும் வேறே எழுத்துத் தோன்றுவதுமே விகாரம் என்னப்படும்.

விகாரம் ஒன்றும் பலவும் வரப்புணர்வது விகாரப் புணர்ச்சி ஆம். விகாரம் இன்றிப்புணர்வது இயல்புப் புணர்ச்சி ஆம்.

[நன்னூல் 153–157.]

☞ இவைகளை அறியவேண்டுவதென்னவெனில்:
"மலர்க்கணை தொடுத்தான்" என விகாரம் உண்டானவழியில்,
மலராகிய கணையைத் தொடுத்தான் என்று பொருள் கொள்ளும்; [வினு 30.]
"மலர்கணை தொடுத்தான்" என இயல்பாக வந்த வழியில்
மலரையுங் கணையையுந் தொடுத்தான் என்று பொருள் கொள்ளும்.
இவ்வாறு விகாரத்தினல் பொருள் வேறுபடுதலைக் காண்க..

---

**20.** CHANGES.

உ0.—அவ்விகாரம் எத்தனை வகை ஆம்?

தோன்றல், திரிதல், கெடுதல் என்று மூவகை ஆம்.

[நன்னூல் 154.]

(க.) இல்லாத விடத்து எழுத்து உண்டாகுவது தோன்றல்:
(உ-ம்.) என் இடத்தில் = என்னிடத்தில், என்பதில்—ன் தோன்றியது தோன்றல் விகாரம்.

(உ.) ஒரெழுத்து மற்றோரெழுத்தாக மாறுவது திரிதல்
(உ-ம்.) பால் + குடம = பாற்குடம், என்பதில் லகரம் றகரமாக மாறியது திரிதல் விகாரம்.

(ங.) இருக்கிற விடத்து ஒரெழுத்து மறைவது கெடுதல்:
(உ-ம்.) மரம் + வீடு = மரவீடு, என்பதில் மகரம் மறைந்தது கெடுதல் விகாரம்.

---

**21.** INFLECTED COMBINATION.

உக. வேற்றுமைச்சந்தி ஆவதென்ன?

நிலை மொழியின் இறுதியிலே, ஐ, ஆல், கு, இன், அது, கண்

☞ (க.) இடையிலே வரும் யகாமும் வகாமும் உடம்படுமெய்கள் என்னப்படும். மற்றைய பாஷைகளிலே இவ்விரண்டும் உயிர்களுக்கு இனமான அரை உயிர்கள் என்னவும் படும்.
(உ.) உலகவழக்கில் உடன்படுமெய் இன்றியும் வழங்கும்.

## அப்பியாசம். (24.)

"வினைவலியுந் தன்வலியு மாற்ருன்வலியுந
துணைவலியுந் தூக்கிச்செயல்."

மிகுதியர்ன் மிக்கவை செய்தாரைத்தாந்தந்
தகுதியான் வென்றுவிடல்.

[இவற்றில் இருக்கிற சந்திகள் எவை?]

பின்வரும் வசனங்களில் உடம்படுமெய்களோடு எழுத.

"பசசோலைக்கு இல்லை ஒலி." "வற்றிய ஓலை கலகலக்கும்." "நீரில் குமிழி இளமை."

பின்வரும் பாட்டில் உடம்படுமெய்களை நீக்கிப் பதங்களைப் பிரித்து நிறுத்தங்களோடு எழுத.

"நீரிடை யுறங்குஞ் சங்கநிழலிடை யுறங்குமேதி
தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ் செய்யா
ரேரிடை யுறங்குமாமை துறையிடை யுறங்குமிப்பி
போரிடை யுறங்குமன்னம் பொழிலிடை யுறங்குந்தோகை.—"

[வினு 165.]

## 24. உ BEFORE A VOWEL, OR ய.

உச.—ஏனிக்குறில் அணையாத உகரத்துக்குப் பின் உயிர் ஆவது, யகரம் ஆவது வரில் எவ்வாறும்?

உயிர்வந்தால் உகரங்கெடும். யகரம்வந்தால் உகரங்கெட இகரந் தோன்றும். அவ்வாறு தோன்றிய இகரங் குற்றியலிகரம் என்னப்படும்.

[நன்னூல் 93. 164.]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | ஆடு | + அரிது | = | ஆடரிது. | |
| | அஃது | + இல்லை | = | அஃதில்லை. | |
| | வாகு | + அரிது | = | வாகரிது. | |
| | கொக்கு | + ஓடிற்று | = | கொக்கோடிற்று. | |
| | குரங்கு | + ஏறிற்று | = | குரங்கேறிற்று. | |
| | எனபது | + யாது | = | என்பதியாது. | |

☞ செய்வது அரிது என விகாரமின்றி எழுதுவதும் உண்டு.

## 25. ANY LETTER AFTER A DEMONSTRATIVE OR INTERROGATIVE LETTER.

உரு.—சுட்டெழுத்துக்குப் பின்னும், எகர வினுவெழுத்துக்குப் பின்னும் மெய்யெழுத்து வந்தால் எவ்வாறும்? உயிர் எழுத்து வந்தால் எவ்வாறும்?

மெய் எழுத்து இரட்டிக்கும்; யகரம்வரில் வகரந் தோன்றும்; உயிர் வந்தால் வகரந் தோன்றும்.

[நன்னூல் 163.]

(உ-ம்.) அ + மனிதன் = அம்மனிதன்.
இ + பொழுது = இப்பொழுது.
எ + வகை = எவ்வகை.
அ + யானை = அவ்யானை.
அ + உயிர் = அவ்வுயிர்.

## அப்பியாசம். (25.)

"எவ்வதுறைவதுலகம் உலகத்தோ
டவ்வதுறைவ தறிவு"
[எ + அது = எவ்வது. அ + அது = அவ்வது.]

"காதலென்ற எவறு கடலுளாழ்ந்தனன்."
[பதம் பிரிக்க.]

"வணிக மாக்களை யொத்ததவ்வாரியே."

"ஒருவனுளனொருவனின்றில்லை யென்னும்
பெருமையுடைத்திவ்வுலகு."
[பதம் பிரித்து, இன்றியமையாத விகாரம் இது எனப்பார்த்து, மற்றதை நீக்கி திருத்தமாயெழுது.]

"எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு."



**26.** WORD IN டு AND று MAKE ட்டு AND ற்று.

உசா.—தனிக்குறிலணையாத டு, று, கு, து, பு நிலைமொழியினீற்றில் வரும்பொழுது எவ்வாறும்?

(க.) வேற்றுமை வழியில் பெரும்பாலும் ட், ற், இரட்டிக்கும்.
[நன்னூல் 183.]

(உ-ம்.) ஆடு + கால் = ஆட்டுக்கால். [வேற்றுமை.]
ஆறு + மீன் = ஆற்று மீன்

(உ.) அல்வழியில் சிலவிடத்து இரட்டிக்கும்.
குருடு + கண் = குருட்டுக்கண். [அல்வழி]
மலடு + பசு = மலட்டுப்பசு.
வயிறு + வலி = வயிற்றுவலி

(ங.) அன்றியும், எருது + தோல் = எருத்துத்தோல்.
வெருகு + கண் = வெருக்குக் கண்
என சிலவிடத்துத், க், இரட்டித்து வரும்.

(ச.) அன்றியும், மருந்து + பை = மருத்துப்பை.
கரும்பு + வில் = கருப்பு வில்.
கன்று + ஆ = கற்று.
என சிலவிடத்து வேற்றுமை வழியில் மெல்லினம் வல்லினம் ஆகும்.
[நன்னூல் 184.]

(ரு.) அன்றியும், அன்பு + தளை = அற்புத்தளை.
குரங்கு + மனம் = குரக்கு மனம்
என சிலவிடத்து, அல்வழியிலும், மெல்லினம் வல்லினம் ஆகும்.
அன்றியும், பண்டு + நாள் = பண்டைநாள்,
இன்று + நாள் = இற்றை நாள்,
என சிலவிடத்து ஐகாரச்சாரியை பெற்றுவரும். [நன்னூல் 185.]

## அப்பியாசம். (26.)

"வேழுநவை இருந்த நீர்" [வேங்கு + அவை.]

"பசிக்கு மேலிலை." [பசிக்கு]

"கைவளர் மாந்துவர் அம்பிக் காயந்த நோய்
மெய்வளர் பசியுமர் அரிதல் வேளையிலே."

"விருப்பிலார் இல்லதூ வேற்றுகற்றவனும்
வெருக்குக கண் வெங்கருவே வேம்பாம்"

"வேப்பங்காய்" [வேம்பு + அம் + காய் 161 காண்க]

"கன்னலின் கரும்புமில்லை."

"நட்பு நார் அறுநர். நல்லாருள் அஃகினார்.
அறபுந்தியாய் அவிழ்ந்தனர்"



## 27. க, ச, த, ப, DOUBLED.

உஎ.—உயிருக்குப்பின் க, ச, த, ப வரில் எவ்வாறும்?

உயிருக்குப்பின்வரும் க, ச, த, ப பெரும்பாலும் இரட்டிக்கும்.
[நன்னூல் 165.]

(உ-ம்) மற்ற, காரியம்............மற்றக்காரியம்.
இந்த, சதுரம்..............இந்தச்சதுரம்.
வாங்கி, தருவேன்..........வாங்கித்தருவேன்.
சாரை. பாம்பு.............சாரைப்பாம்பு.

ஆகிலும், வினைப்பெயருக்கும், விளிப்பெயருக்கும், அஃறிணைப் பெயருக்கும், வினை முற்றுக்கும், பெயர் எச்சத்துக்கும், வினைத் தொகைக்கும், அது, இது, இவை, அவை, பல, சில, நீ, ஒரு, சிறு, அறு, எழு என்பவைகளுக்கும், மூன்றும் ஆறும் வேற்றுமையின் உருபுக்கும், உயிரீற்று உயர்திணைப் பெயருக்கும், பொதுப்பெயருக்கும், முன்வரும் க, ச, த, ப இயல்பாம்.

[நன்னூல் 160, 161. 159. 167. 203.] (L.)

(உ-ம்.) அவனை கொடுத்தான், அண்ணை கொடும், செய்தை தம்பி, ஓடின குதிரை, குளிர் காற்று, அறு பெரிது, சாத்தனோடு கொண்டான், எனது தலை, தம்பி கை, நம்பி தந்தான்.

☞ பெரும்பாலும் வடமொழிகள் தொடர்ந்துவருவதில் மேற்சொல்லிய எழுத்துகள் மிகா.
(உ-ம்.) ஆதி + பகவன் = ஆதிபகவன். சபா + சனம் = சபாசனம்.

(L.) "எழுவாய்ச் சந்தியின் இசைவலி இயல்பே" [அகத்.]

"வியங்கோள் விருதிமுன் வலி இயல்பாகும்." [அகத்.]
(உ-ம்.) "சொல்லுக சொல்லிற் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச்சொல்.—"

"இரண்டன் விபத்தி எஞ்சில் வலி இயல்பாம்." [அகத்.]
(உ-ம்.) "குன்றிய சீரியர் ஆயினும் சீர்பெறுவர்
குன்றனன்னார் கேண்மை கொளின்"

"மூன்றன் உருபினும் ஆறன்உருபினும்
வல்லெழுத்து மிகுதல் இல்லெனமொழிப. [இலக். வி.]

## அப்பியாசம். (27.)

"கங்கைத்திம் புனலுடைன்."

"உடன்பிறந்தே கொல்லும் வியாதி"
[ என் க இரட்டிக்கவில்லை ]

"நில்லாத செல்வம்."

"அறுசுவை புண்டி."

"சோம்பித் திரியேல்."

"அலைகடல்." "விரிகதிர்த் திங்கள் ஒத்தான்."

"பணைநாகங் கடியாரோ பல மாக்களோ
டணிவருஞ் சேதம் வீரதிமையாத நாள்தானவினா
மணியுடைக கொடி தோன்ற வருநாள்றலாப
புணரிபோ லொலிபோல போவது போலுறதே."

"........அவனியாளோ
கண்ணனவாற தக்க கலம்"

"........நூபனே !
எய்திய செல்வத்தாயினுங் கீழ்களோர்
செய்தொழிலால் காணப்படும்."

"தீயவைத் தீய பயத்தலாற் றீயவை
தீயினும் அஞ்சப்படும். —"

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற்பவர்க்கு"



**28.** NEUTER PLURALS IN அ TAKE THE INCREMENT அற்று OR அத்து.(M.)

உ௮.—அகரவீற்று அஃறிணைப் பன்மைப்பெயர்முன், வேற்றுமை வழியில், மெய்வரில் எவ்வாறாம்?

இடையில் அற்றுச் சாரியைதோன்றும்.

(உ-ம்.) பல, ஐ ... ... ... பலவற்றை.
சில, கு ... ... ... சிலவற்றுக்கு.



## § உ. மெய்யீற்றுப் புணரியல்.

**29.** THE FINAL CONSONANT IN A SHORT SYLLABLE DOUBLED BEFORE A VOWEL.

உ௯.—தனிக்குறிலணைந்த ஒற்றின்பின் உயிர்வந்தால் எவ்வாறாம்?

அவ்வொற்றெழுத்து இரட்டிக்கும்.

[நன்னூல். 205.]

(உ-ம்.) மண் + அழகு = மண்ணழகு.

(M.) பல்லவை நுதலிய அகரவிறுபெயர்
அற்றொடு சிவணல் எச்சம் இன்றே. [இலக்கண விளக்கம்.]

அப்பியாசம். (29.)

"பொன்னணியும் வேந்தர்"

"கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்."

[கண் + உடையவர். புண் + உடையவர்.]

**30.** LETTERS DOUBLED AFTER ய், ர், ழ்.

௩0.—ய், ர், ழ் என்னும் எழுத்தின் பின் எவ்வெழுத்துக்கள் மிகும்?

(க.) அடை மொழிகளினீற்றிலிருக்கும் ய், ர், ழ் என்னும் ஒற்றின்பின் வல்லினம் மிகும்.

[நன்னூல் 224.]

(உ-ம்.) பொய் + செல்வம் = பொய்ச்செல்வம்.
பாழ் + கொல்லை = பாழ்க்கொல்லை.
கார் + பருவம் = கார்ப்பருவம்.

(உ.) வேற்றுமை வழியில் அவற்றின்பின், வல்லினம் பெரும்பாலும் மிகும்.

(உ-ம்.) நாய் + கால் = நாய்க்கால்.
பூழ் + கால் = பூழ்க்கால்.
நீர் + குமிழி = நீர்க்குமிழி.

(௩.) போய், ஆய் என்னும் எச்சங்களுக்குப்பின் வல்லினம் மிகும்.

(உ-ம்.) போய், சொன்னன் ... ... ... ... போய்ச்சொன்னன்.
ஆய், போயிற்று ... ... ... ... ஆய்ப்போயிற்று.

அப்பியாசம். (30.)

"தளிர்க்கை."

"செவி கைப்பச்சொற் பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக் கீழ்த் தங்கும் உலகு."

"..........அஞ்சுவ
தஞ்சல் அறிவார் தொழில்."

"இன்னுயிர்த்துணை இவன்."
[வேற்றுமைத் தொகைத்தொடரில் ரகரத்தின்பின் தகரம் இரட்டித்தது.]

"ஆன்படு நெய் பெய் கலனுள்."

"தந்தைதாய்ப்பேண்."

"உருளாயம் ஓவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்."

**31.** ஞ, ம, ந, DOUBLED.

௩க.—ஞ, ம, ந எப்பொழுது இரட்டிக்கும்?

குற்றெழுத்தைச் சார்ந்த யகரத்தின் முன்னும், தனி ஐகாரத்தின் முன்னும் ஞ, ம, ந இரட்டிக்கும்.

[நன்னூல் 158.]

(உ-ம்.) மெய் + ஞானம் = மெய்ஞ்ஞானம்.
கை + மாற்று = கைம்மாற்று.
செய் + நன்றி = செய்ந்நன்றி.

## அப்பியாசம். (31.)

"பொருள் கெடுத்துப்பொய்ம் மேற்கொளீஇ
அருள் கெடுத்தல்லவை உழப்பிக்குஞ் சூது."

"கைம்மாறு நினக்காற்றல் அரிது."

"மைந்நின்ற ஒண்கண்."

"மெய்ஞ்ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!"



### 32. CHANGES OF FINAL ம் INTO ங், ஞ், AND ந். (N.)

௩௨.—மொழியீற்று மகரம் எவ்வாறு திரியும்?

மொழியீற்று மகரமானது ககர, சகரங்கள் வரின் முறையே ஙகரமாகவும், ஞகரமாகவும்; தகர நகரங்கள் வரின் நகரமாக வுந் திரியும்.

[நன்னூல் 219.]

(உ-ம்.) மனம் + களித்தது = மனங்களித்தது.
மரம் + சாய்ந்தது = மரஞ் சாய்ந்தது.
பாவம் + தீயது = பாவந் தீயது.
செம் + நெல் = செந்நெல்.

## அப்பியாசம். (32.)

"நஞ்சுடைமை தான்அறிந்து நாகங்கரந்துறையும்."

"நண்ணுணர்வின்மை வறுமை, அஃதுடைமை
பண்ணப்பணைத்த பெருஞ் செல்வம்."

"இனந்தீதெனினும் இயல்புடையார் கேண்மை
மனந்தீதாம் பக்கம் அரிது."

"சந்தன மென்குறடு தான் தேய்ந்த காலத்துங்
கந்தங் குறைபடாதாதலாற் றந்தந்
தனஞ் சிறியர் ஆயினுந் தார் வேந்தர் கேட்டான்
மனஞ் சிறியர் ஆவரோ, மற்று?"

"செந்நெல்லால் ஆய செழுமுளை."

"எந்நெறி யானும் இறைவன்றன் மக்களைச்
செந்நெறிமேனிற்பச் செயல்வேண்டும்."

(N.) வலிவரின் மஃகான் வருக்கம் ஆகும்;
நவ்வரின் றனிக்குறின் மவ்வு நவ்வாம்;
வவ்வழி இன்றி மகரங் கெடுமே. [தொன்னூல்.]

**33.** FINAL ம்.

௩௩.—மொழியீற்று மகரங் கெடுவதும் உண்டோ?

மகரத்தின் முன்னும், நகரத்தின் முன்னும், தொடர் மொழியின் முதலுறுப்பாக வருகிற பொழுதும், குறிலணையாத மொழியீற்று மகரங் கெடும்.

[ நன்னூல் 219. ]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | காலம் | + | நெடிது | = | காலநெடிது. |
| | மரம் | + | மெல்லியது | = | மரமெல்லியது. |

அப்பியாசம். (33.)

"ஆலயந்தொழுவது சாலவு' நன்று."

"அறவாழி அந்தணன்."

"கோட்டுப்பூப்போல மலர்ந்து பிற் கூம்பாது
வேட்டதே வேட்டதா' நட்பாட்சி தோட்ட
கயப்பூப்போன முன மலர்ந்து பிறகூம்பு வாரை
நயப்பாரு? நட்பாரும் இல்"

[கயம் + பூ = கயப்பூ.]

---

**34.** CHANGES OF FINAL ண் AND ள் INTO ட்.

௩௪.—மொழியீற்று ணகரமும், ளகரமும் எவ்வாறு திரியும்?

மொழியீற்று ணகரமும், ளகரமும், வேற்றுமை வழியில், ககர சகர பகரங்கள் வரில் டகரமாம்.

[ நன்னூல் 209. 227. ]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | மண் | + | குடம் | = | மட்குடம் |
| | மண் | + | சாடி | = | மட்சாடி. |
| | மண் | + | பானை | = | மட்பானை. |
| | முள் | + | கூர்மை | = | முட்கூர்மை. |
| | கள் | + | சொரிந்தான் | = | கட் சொரிந்தான் |
| | முள் | + | புறம் | = | முட்புறம். |

அப்பியாசம். (34.)

"நுட் சிலம்பி அலர்ந்தன நுண்டுகில்."

"இடுக்கண் கால் கொன்றிட வீழும் அடுத்தூன்று
நல்லான் இல்லாத குடி."

"பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன் கட் செயல்."

"கட்புலம்."

"ஒல்வதறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாததில்."

"செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம்."

"............களைபவோ
கண்குத்திற்றென்று தங்கை"

"எண் பொருளவாகச் செலச்சொல்லித் தான் பிறர்வாய்
நுண்பொருள் காண்பதறிவு."

"நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார் கட்பட்ட திரு."
[நல்லார்கண், கல்லார்கண்.]

"............வாழ் நாள்கள்
சென்றன செய்வதுரை."
[இயல்பாதலுக்குக் காரணம்?]



**35.** CHANGES OF FINAL ன் AND ல் INTO ற்.

௩௫.—மொழியீற்று னகரமும், லகரமும் எவ்வாறு திரியும்?

மொழியீற்று னகரமும், லகரமும் பெரும்பான்மையாய் வேற்றுமை வழியிலும் சிறுபான்மையாய் அல்வழியிலும், ககர சகர பகரங்கள் வரில் றகரமாம்.

[நன்னூல் 227.]

(உ-ம்.) பொன் + குடம் = பொற்குடம்.
பொன் + சாடி = பொற்சாடி.
பொன் + பானை = பொற்பானை.
கல் + கூடம் = கற்கூடம்.
விரல் + சிறிது = விரற்சிறிது.
விரல் + புறம் = விரற்புறம்

அப்பியாசம். (35.)

"கைத்துடையான் காற்கீழ் ஒதுங்குங் கடன் ஞாலம்."

"கல்லாதவருங் நனி நல்லர் கற்றார் முற்
சொல்லாதிருக்கப்பெறின்."

"............நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர இன்பத்தின், முற்றிழாய்,
பிற்பயக்கும் பீழை பெரிது."

"செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற் பால தன்றிக் கெடும்"

"குன்று போற் குணத்தான."

"தன்னைத் தான் காக்கிற் சினங்காக்க."

"நிற்கரிய தொன்றில்லை."

"அறிவினான் ஆகுவதுண்டோ, பிறிதினோய்
தந்நோய் போற் போற்றாக் கடை"

## ௩௬. CHANGES OF FINAL ல் AND ள் INTO ன் AND ண்.

௩௬.—மொழியீற்று லகரமும், ளகரமும் மகரம் வரில் எவ்வாறும்?

மொழியீற்று லகரமும், ளகரமும் மகரம் வரில் முறையே னகரமும், ணகரமுமாம்.

[நன்னூல் 227.]

(உ-ம்.) கல் + மலை = கன்மலை.
முள் + முடி = முண்முடி.
நாள் + மலர் = நாண்மலர்.

☞ ஞகாரத்துக்கு முன்னும் லகர ளகரங்கள்முறையே னகர ணகரங்களாம்.
(உ-ம்.) "கைத்தடையான் காற்கீழ் ஒதுங்குங்கடன் ஞாலம்."

அப்பியாசம். (36.)

"நல்லார் ஒருவருக்குச் செய்த உபகாரம்
கன்மேல் எழுத்துப்போற் காணுமே."

[கல் + மேல்]

[இதில் உள்ள விகாரங்கள் எவை?]

"... .........கெட்டாலும்
மேன்மக்கண் மேன்மக்களே."

[இதை விரித்துக்காட்ட.]

## ௩௭. CHANGES OF FINAL ண் AND ள் INTO ட்.

௩௭.—ணகரத்திற்கும், ளகரத்திற்கும் முன் தகரம்வரில் எவ்வாறும்?

(௧.) ணகரத்திற்கும், ளகரத்திற்கும் முன் தகரம்வரில் வேற்றுமைவழியில் பெரும்பாலும் இரண்டும் டகரமாகும்.

[நன்னூல் 209. 227. 229. 237.]

(உ-ம்.) மண் + திணை = மட்டிணை.
முள் + தீது = முட்டீது.

(௨.) சிலவிடத்து இருவழியில் தகரம் டகரமாம்.

(உ-ம்.) கண் + திறந்தான் = கண்டிறந்நான்.
மண்டோய் துயர் தீர்த் தளித்தோய் நீ!

(௩.) ஒரு டகரங் கெடுதலும் உண்டு.

(உ-ம்.) நாள் + தோறும் = நாடோறும்.
தங்கள் + தலைமை = தங்கடலைமை.

## அப்பியாசம். (37.)

"துகடீர் பெருஞ் செல்வம்......"
[துகள், தீர்.]

"தெண்டிரைப்பரவை."

"நுண்டிரைப்புரை நோக்கியநோக்கு." [redacted].

"விண்டலங் கலந்திலங்கு திங்கள்."
[விண் + தலம்.]



## 38. CHANGES OF FINAL ல் AND ண் INTO ற்.

௩௮.—ணகரத்திற்குமுன்னும், லகரத்திற்குமுன்னும், தகரம்வரில் எவ்வாறாம்?

(க.) ணகரத்தின்முன்னும் லகரத்தின்முன்னுந் தகரம்வரில் வேற்றுமைவழியில் இரண்டும் றகரமுமாகும்.

[நன்னூல் 209. 229.]

(உ-ம்.) பொன் + தீமை = பொற்றீமை.
கடல் + திரை = கடற்றிரை.

☞ நல் + தாள் = நற்றாள்
எ-தில் அல்வழியிலும் இரண்டும் றகரம் ஆயின.
நல் + தாமரை = நற்றாமரை.

(உ.) அல்வழியில் சிலவிடத்து தகரம் றகரமாம்.

(உ-ம்.) பொன் + தீது = பொன்றீது.

☞ தனக்குவமை இல்லாதான் றாள் சேர்ந்தார்
எ-தில் வேற்றுமை வழியிலும் தகரம் றகரம் ஆயிற்று.

(௩.) ஓர் றகரங் கெடுதலுமுண்டு.

(உ-ம்.) பால் + தீது = பாறீது

## அப்பியாசம். (38.)

"...........கற்றான்
பிறர்க்கறிவதல்லாற் பெரும்பாரந் தாங்கி
தளர்ந்து வீயுமோ தாம்?"

"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்."

"கோடிறீக் கூற்றம்."
[கோடு + இல் + தீ + கூற்றம்.]

**39.** CHANGES OF ல் AND ந் INTO ன்ன் AND OF ள் AND ந் INTO ண்ண்.

௩௯.—லகரத்தின் முன்னும், ளகரத்தின் முன்னும் நகரம்வரில் எவ்வாறாம்?

லகரத்தின் முன்னும், ளகரத்தின் முன்னும் நகரம் வரில் முறையே, இரண்டும் னகரமும், ணகரமுமாம்.

[நன்னூல் 229.]

(உ-ம்.) நல் + நெறி = நன்னெறி.
தெள் + நீர் = தெண்ணீர்.

ஓர் னகரமும், ணகரமுங் கெடுதலுமுண்டு.

(உ-ம்.) வானத்தில் + நின்று = வானத்தினின்று.
அருள் + நலம் = அருணலம்.

## அப்பியாசம். (39.)

"புன்னுனி மேனீர் போனிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை !........."
"வேனெடுங் கண்ணாய் !"
[வேல் + நெடும் = வேனெடும்.]

"........ஒன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென்றார்."
நீள் + நெறி = நீணெறி.

"இருணீங்கி இன்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சியவர்க்கு."



**40.** CHANGE OF ந் INTO ன் AND ண் AFTER THOSE LETTERS.

௪௦.—ணகரத்திற்கும் னகரத்திற்கும் முன் மொழிமுதல் நகரம் எவ்வாறாம்?

(க.) தனிக்குறிலணைந்த ணகரத்தின் முன்னும், னகரத்தின் முன்னும் நகரம் முறையே ணகரமாகவும், னகரமாகவுந் திரியும்.

[நன்னூல் 237.]

(உ-ம்.) கண் + நீர் = கண்ணீர்.
தன் + நலம் = தன்னலம்.

(உ.) தனிக்குறிலணையாத ணகரத்திற்கும், னகரத்திற்கும் முன் நகரங்கெடும்.

[நன்னூல் 210.]

(உ-ம்.) கவண் + நெடிது = கவணெடிது.
கலன் + நெடிது = கலனெடிது

## அப்பியாசம். (40.)

"ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானணியதுடைத்து."

"தன்னெஞ்சறிவது பொய்யற்க ! பொய்த்த பின்
தன்னெஞ்சே தன்னைச்சுடும்."

## பிரதான விகாரங்களின் சுருக்கமான

## அட்டவணை.

| | | | | வினா. |
|---|---|---|---|---|
| (க.) | இ | யகரத்தின் முன்தோன்றும். | | 24. |
| (உ.) | உ | குற்றியல் உகரம் உயிர் முன்கெடும். | | 24. |
| (ங.) | வ் ய் | சில உயிர் முன்தோன்றும். | | 23. |
| (ச.) | க், ச், த், ப், | உயிருக்குப்பின் இரட்டிக்கும். | | 27. |
| (ரு.) | ம். | கெடும்; ங், ஞ், ந் ஆகத்திரியும், இரட்டிக்கும். | | 32. 33. 31. |
| (சு.) | ஞ், ந், ய், | இரட்டிக்கும். | | 31. |
| (எ.) | ட், ற், | மொழி அகத்து இரட்டிக்கும். | | 26. |
| (அ.) | | மெய்கள் சுட்டின்பின்னும், வினாவின்பின்னும் இரட்டிக்கும். | | 25. |
| (கூ.) | ண் | ட் ஆகத்திரியும். | [ண்,ள் + க, ச, ப = ட்க, ட்ச, ட்ப.] | 34. |
| (கO.) | ள் | ட் ஆகத்திரியும. | | 34. |
| (கக.) | ள் | ண் ஆகத்திரியும். | [ள் + ம = ண்ம.] | 36. |
| (கஉ.) | ன் | ற் ஆகத்திரியும். | [ன்,ல் + க, ச, ப. = ற்க, ற்ச, ற்ப.] | 35. |
| (கங.) | ல் | ற் ஆகத்திரியும். | | 35. |
| (கச.) | ல் | ன் ஆகத்திரியும். | [ல் + ம = ன்ம.] | 36. |
| (கரு.) | த் | ட் ஆகத்திரியும். | ண் + த = ட்ட, ண்ட. ; ள் + த = ட்ட, ஃட, ட. | 37. |
| | | ற் ஆகத்திரியும். | ன் + த = ற்ற, ன்ற. ; ல் + த = ற்ற, ஃற, ற. | 38. |
| (கசு.) | | ன் ஆகத்திரியும். கெடும். | ல் + ந = ன, ன, ன. ; ன் + ந = ன, ன, ன | 39. |
| | | ண் ஆகத்திரியும் கெடும். | ள் + ந = ண ண, ண. ; ண் + ந = ண ண, ண. | 40. |

## § ரு. செய்யுள் விகாரங்கள்.

**41.** POETICAL CHANGES.

சக.—செய்யுள் விகாரங்கள் எவை?

(க.) வலித்தல்; அதாவது, மெல்லினத்தை வல்லினமாக்கல்:

[நன்னூல் 155, 156.]

(உ-ம்.) (1.) குறுந்தாள் எ—து குறுத்தாள் எனவும் வரும்.
(2.) ஈந்து — ஈத்து.

(௨.) மெலித்தல்; அதாவது, வல்லினத்தை மெல்லினமாக்கல்:

(உ-ம்.) (1.) புத்தி எ-து புந்தி எனவும் வரும்.
(2.) தட்டை — தண்டை.

(௩.) நீட்டல்; அதாவது, குற்றெழுத்தை நெட்டெழுத்தாக்கல்:

(உ-ம்.) (1.) நிழல் எ-து நீழல் எனவும் வரும்.
(2.) பொழுது — போழ்து.

(௪.) குறுக்கல்; அதாவது, நெட்டெழுத்தைக் குற்றெழுத்தாக்கல்:

(உ-ம்.) (1.) பாதம் எ-து பதம் எனவும் வரும்.
(2.) தீயேன் — தியேன்.

(௫.) விரித்தல்; அதாவது, அல்லாத எழுத்தை வருவித்தல்:

(உ-ம்.) (1.) மக எ-து மகவு எனவும் வரும்.
(2.) விளையுமே — விளையும்மே.

(௬.) தொகுத்தல்; அதாவது, உள்ள எழுத்தை நீக்கல்:

(உ-ம்.) (1.) தொழாதார் எ-து தொழார் எனவும் வரும்.
(2.) இல்லாதவன் எ-து இல்லாதான் எனவும் இல்லான் எனவும் இலான் எனவும் வரும்.

(௭.) முதற் குறை: அதாவது, முதலெழுத்தை நீக்கல்:
[நன்னூல் 156.]

(உ-ம்.) தாமரை எ-து மரை எனவும் வரும்.

(௮.) இடைக்குறை; அதாவது, இடையெழுத்தை நீக்கல்:

(உ-ம்.) (1.) ஓந்தி எ-து ஓதி எனவும்.
(2.) அகங்கை எ-து அங்கை எனவும் வரும்.

(௯.) கடைக்குறை; அதாவது, கடைஎழுத்தை நீக்கல்.

(உ-ம்.) நீலம் எ-து நீல் எனவும் வரும்.
அரவம் எ-து அரவு எனவும் அரா எனவும்,
நிலா எ-து நிலவு எனவும் இவைபோல்வனவும் வரும். (0.)

## அப்பியாசம். (41.)

"இழுக்கலுடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்."
[ஊன்று கோல்.]

"அருகலதாகிப் பல பழுத்த கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா."
[அலதாகி = அயலதாகி.]

ஆற்றின் மூழ்கி."
[முழுகி.]

"........துன்பக்
குறைபதிமற்றைப் பொருள்.—"
[துன்பத்துக்கு.]

(0.) குறிற்கீழ் ஆவேகுறுகி உகரம்பெறும். [அகத்.]

☞ (க.) இவற்றுள், விரித்தலானது தோன்றல் விகாரமாம்; வலித்தலும் மெலித்தலும், நீட்டலும், குறுக்கலும் திரிதல் விகாரமாம்; தொகுத்தலும், மூவழிக்குறைதலும், கெடுதல் விகாரமாம்.

(உ.) இவையல்லாமலும், விதியின்றிப் பல விகாரங்களும் வரும்.

(உ-ம்.) யார் எ-து ஆர் எனவும்,
தசை எ-து சதை எனவும்,
இன்முன் எ-து முன்றில் எனவும் வரும்.

---

(௩.) வழக்கத்தில்.

(உ-ம்.) இராப்பகல் எ-து ராப்பகல் எனவும்,
போகிறான் எ-து போறான் எனவும் இவைபோல்வன பலவும் வரும்.



## § ௪. வடமொழிச்சந்தி.

**42.** SANSCRIT CHANGES.

௪௨.—வடமொழிகள் தமிழிலே ஒன்றோடொன்று பொருந்தும் பொழுது வடநூலின் சந்தியைப் பெறுமோ?

வடநூலின் சந்தியைப் பெறுவதுமுண்டு. அவற்றின் விவரமாவது:

### க. தீர்க்கசந்தி. (௩.)

(க.) அ, ஆ முன், அ, ஆ இரண்டும் ஆகாரமாம்:

(உ-ம்.) தேவ + ஆலயம் = தேவாலயம்.
ஞான + அமிர்தம் = ஞானாமிர்தம்.
சேனை + அதிபதி = சேனாதிபதி.
சதா + ஆநந்தம் = சதாநந்தம்.

(உ.) இ, ஈ முன், இ, ஈ வரில் இரண்டும் ஈகாரமாம்:

(உ-ம்.) முனி + இந்திரன் = முனீந்திரன்.
கிரி + ஈசன் = கிரீசன்.
மஹீ + ஈசன் = மஹீசன்.

(௩.) உ, ஊ முன், உ, ஊ வரில் இரண்டும் ஊகாரமாம்.

(உ-ம்.) குரு + உபதேசம் = குரூபதேசம்.
தரு + ஊனம் = தரூனம்.

---

### உ. குணசந்தி. (உ.)

(௪.) அ, ஆ முன், இ, ஈ வரில் இரண்டும் ஏகாரமாம்:

(உ-ம்.) சர்வ + ஈசுரன் = சர்வேசுரன்.
மகா + ஈசன் = மகேசன்.

(௫.) அ, ஆ முன், உ, ஊ வரில் இரண்டும் ஓகாரமாம்:

(உ-ம்.) ஞான + உபதேசம் = ஞானோபதேசம்.
மந்திர + ஊகி = மந்திரோகி.
தயா + ஊர்ச்சிதன் = தயோர்ச்சிதன்.

---

### ௩. விருத்திசந்தி. (உ.)

(௬.) அ, ஆ முன், எ, ஐ வரில் இரண்டும் ஐகாரமாம்:

(உ-ம்.) ஞான + ஐக்கியம் = ஞானைக்கியம்.

(எ.) அ, ஆ முன், ஒ, ஓ வரில் இரண்டும் ஔகாரமாம்:

(உ-ம்.) தின + ஓதனம் = தினௌதனம்.

எழுத்துப் புணரியல் முற்றிற்று.

# இலக்கண வினாவிடை.



## II. ETYMOLOGY.

## இரண்டாவது: சொல்லதிகாரம்.

**43.** PARTS OF SPEECH.

௪௩.—தமிழ்ச் சொற்கள் எத்தனை வகையாம்?(P.)

பெயர், வினை, இடை, உரி என நான்குவகையாம்.

[நன்னூல். 259.]

---

(P.) சொல்லாவதென்ன?

ஒரு பொருளைத்தருகிற எழுத்துகள் சொல்லாம்.

[நன்னூல் 259. 274.]

தமிழராற் சொல்லப்பட்ட மூவகை மொழிகள் எவை?

ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி என்பனவாம்.

[நன்னூல் 260.]

ஒருமொழிகள் ஆவன எவை?

ஒன்று நின்று தந்தம் ஒருபொருளைத் தருவனவாம். தனிமொழிகள் எனவும்படும்.

[நன்னூல் 260.]

தொடர் மொழியைக்குறித்து. 150. வினா காண்க.

பொதுமொழிகள் ஆவன எவை?

ஒருமொழிகளாய் ஒருபொருளைத்தருவதும் அன்றித் தொடர்மொழிகளாய்ப் பலபொருளையுந் தரும் மொழிகள் ஆம்.

(உ-ம்.) வேங்கை எ-து புலி என்று அர்த்தங்கொள்ளும் ஒருமொழி; அன்றியும் வேகின்றகை என விரியும்காலத்தில் தொடர்மொழியாயிற்று.

இன்னஞ் சொற்களை வகுக்கும் வகை என்ன?

இயற்சொல் என்றும், திரிசொல் என்றும், திசைச்சொல் என்றும், வடசொல் என்றும் நாலுவகுப்பாக வகுப்பார்கள்.

[நன்னூல் 270.]

இவற்றுள், இயற்சொல் ஆவதெது?

செந்தமிழ் நாட்டுமொழி ஆகி யாவருக்கும் இயல்பாய்த் தன்பொருளை விளக்குஞ்சொல் இயற்சொல் ஆம்.

[நன்னூல் 271.]

திரிசொல் ஆவதெது?

ஒரு பொருளைக்குறித்துவரும் பல சொற்கள் ஆகியும், பலபொருளைக்குறித்து வரும். ஒரு சொல் ஆகியும் அருமையாக உணரப்படும் பொருளையுடையது திரிசொல் ஆம்.

[நன்னூல் 273.]

**44.** NOUN.

௪௪.—பெயர்ச்சொல்லாவதென்ன?

ஒரு பொருளின் பெயரைக் காட்டுவது பெயர்ச்சொல் ஆம்.(Q.)

[நன்னூல் 275.]

(உ-ம்.) மனிதன், மனைவி, வீடு.
நன்மை, தீமை.
செய்தவன், வருவது.

---

**45.** VERB.

௪௫.—வினைச்சொல்லாவதென்ன?

ஒரு பொருளின் தொழிலைக் காட்டுவது வினைச்சொல் ஆம்.(R.)

[நன்னூல் 320.]

(உ-ம்.) இரு, வந்தான், படிக்கிறார்கள்.

☞ [வினைச்சொல்லை வினை என்பது ஆகுபெயர். (வினா 162.)

---

திசைச்சொல் ஆவதெது?

கொடுந்தமிழ் நாட்டுச் சொற்களும், அன்னிய பாஷைகளிலிருந்து வந்து செந்தமிழ் நாட்டு மொழிகளோடு கலந்து வழங்குஞ்சொற்களுந் திசைச்சொல் ஆம்.

[நன்னூல் 273.]

---

வடசொல் ஆவது எது?

செந்தமிழ்ச் சொல்லை ஒப்பனவாகி வந்து வழங்கும் ஆரியச்சொற்கள் வட சொற்கள் ஆம்.

[நன்னூல் 274.]

இவை தற்சமம் என்றும், தற்பவம் என்றும் இருவகை ஆம். தற்சமம் என்பது ஆரியத்திற்குந் தமிழுக்கும் பொது எழுத்தால் ஆகிய மொழி ஆம்.

(உ-ம்.) அமலம், குங்குமம். [AMALAM. KUNGUMAM.]

தற்பவம் என்பது ஆரியத்திற்கே உரிய எழுத்தால் ஆகிய மொழி ஆம்.

(உ-ம்.) சத்தி, போகி. [ŚAKTI. B'HÔGI.]

---

(Q.) உயிர்ப்பொருள் உயிரிலாப் பொருள் இரு வகைய;
ஊருதல், பறத்தல், நடத்தல், எனவே
மூவகை ஆகும் உயிர்ப்பொரு ளினமே.—
இயற்கை, செயற்கை, இருவகை இனமும்,
உயிரிலாப் பொருளென் றுரைத்தனர் புலவர். [குவலயாநந்தம்.]

---

பலபொருட்பெயரே பெயர்ச்சொல்லாகும். [குவலயா.]

---

(R.) பலதொழிற் பெயரே வினைச்சொல்லென்ப. [குவலயா.]

**46.** PARTICLE.

சுசு.—இடைச்சொல் ஆவதென்ன?

தனித்து வழங்குதலின்றிப் பெயர் வினைகளை அடுத்துவருவது இடைச்சொல் ஆம்.

[நன்னூல் 352.]

(உ-ம்.) அதுவே என்பதில் ஏ என்பதும்; அவனும் இவனும் என்பதில், உம் என்பதும் இடைச்சொற்கள் ஆம்.



**47.** QUALIFYING WORD: ADJECTIVE OR ADVERB.

சஎ.—உரிச்சொல் ஆவதென்ன?

பெயர்ச்சொல்லையும், வினைச்சொல்லையுந் தழுவி அவைகளுக்குரிய குணத்தைக் காட்டுவது உரிச்சொல் ஆம்.

[நன்னூல் 374.]

(உ-ம்.) பெரிய அரசன்.
மிகவும் உழைத்தான்.

இவற்றில் பெரிய என்பதும், மிகவும் என்பதும் பெயரையும் வினையையுந் தழுவிய உரிச்சொற்கள் ஆம்.



## க. பெயரியல்.

**48.** CLASSES OF NOUNS.

சஅ.—பெயர்ச்சொல் எத்தனைவகை ஆம்?

இடுகுறிப் பெயர் என்றும், காரணப்பெயர் என்றும் இரண்டு வகை ஆம். இவையும், பொதுப்பெயர் எனவும், சிறப்புப்பெயர் எனவும் இருவகையாக வகுக்கப்படும்.

[நன்னூல் 62. 275.]



**49.** ARBITRARY NOUNS.

சகூ.—இடுகுறிப் பெயர் ஆவதென்ன?

மரம், மலை என்பவற்றைப்போல ஒரு நிமித்தமும் இன்றி வருவது இடுகுறி என்பதாம்.

[நன்னூல் 62. 275.]

(உ-ம்.) நிலம், கடல், ஆறு, சோறு.

**50.** APPELLATIVE NOUNS.

ரு0.—*காரணப்பெயர் ஆவதென்ன?*

கணக்கு எழுதுகிறவனைக் கணக்கன் என்று ஒருநிமித்தம் பற்றி வழங்குவது காரணப்பெயர் ஆம்.

[நன்னூல் 276.]

(உ-ம்.) வில்லான். மலைச்சி. கரியன். முடவன்.



**51.** CHARACTERISTICS OF NOUNS.

ருக.—*பெயர்ச் சொல்லில் எத்தனை பொருளை அறிய வேண்டும்?*

பெயர்ச் சொல்லில், திணை, பால், இடம், வேற்றுமை என நான்கு பொருளையும் அறிய வேண்டும்.

[நன்னூல் 275.]



**52.** CLASS. PERSONAL AND IMPERSONAL NOUNS.

ருஉ.—*திணை என்பது எத்தனை வகை ஆம்?*

திணையாவது இலக்கணநூலிற் பகுக்கப்பட்ட பொருளின் சாதியாம்.

அது, உயர்திணை, அஃறிணை என இருவகை ஆம். தேவர், மனிதர், நரகர் உயர்திணை ஆம். மற்றைய பெயர் எல்லாம் அஃறிணை ஆம்.(s.)

[நன்னூல் 261.]

---

MASCULINE NOUNS SINGULAR.

(s.) உயர்திணை ஆண்பாலுக்குரிய பெயர்கள் எவை?

அன், ஆன் என்னும் விகுதிகளைப்பெற்ற பெயர்களும், நம்பி, தம்பி, ஆடூஉ, விடலை, கோ, வேள் குரிசில், தோன்றல் முதலிய பெயர்களும் உயர்திணை ஆண்பாலுக்குரிய பெயர்களாம்.

[நன்னூல் 276.]

FEMININE NOUNS SINGULAR.

உயர்திணைப் பெண்பாலுக்குரிய பெயர்கள் எவை?

அள், ஆள் என்னும் விகுதிகளையுடைய பெயர்களும், இ என்னும் விகுதியைப்பெற்ற அநேகம்பெயர்களும், நங்கை, மகடூ, தையல், இருளை, மாது, அரிவை, மடந்தை முதலிய பெயர்களும் உயர்திணைப் பெண்பாலுக்குரிய பெயர்கள் ஆம்.

[நன்னூல் 277.]

PLURAL, MASCULINE AND FEMININE.

உயர்திணைப் பலர்பாலுக்குரிய பெயர்கள் எவை?

அர், ஆர், அர்கள் என்னும் விகுதிகளையுடைய பெயர்களும், கோக்கள், மனுக்கள், மக்கள் முதலியவும் பலர்பாலுக்குரிய பெயர்கள் ஆம்.

[நன்னூல் 278.]

**53.** GENDER AND NUMBER.

௫௩.—பால் என்பது எத்தனை வகை ஆம்?

உயர்திணை ஆகிய ஆண்பால், பெண்பால், பலர்பால் என மூன்றும்; அஃறிணை ஆகிய ஒன்றன்பால், பலவின்பால் என இரண்டும்: ஆக ஐந்து வகை ஆம். இவற்றுள், ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், ஆகிய மூன்றும் ஒருமை எனவும்; பலர்பால், பலவின்பால் ஆகிய இரண்டும் பன்மை எனவும்படும். இவை ஒருமையெண் என்றும், பன்மையெண் என்றும் சொல்லப்படும்.

பாலாவது மேற்சொல்லிய பொருள்களின் பகுப்பாம்:

[நன்னூல் 262-264, 276-284.]

(உ-ம்.)

| | ஒருமை. | | | பன்மை. | |
|---|---|---|---|---|---|
| உயர்திணை. | (௧.) ஆண்பால் | அரசன். | (௩.) | பலர்பால் | புலவர். |
| | (௨.) பெண்பால் | மனைவி. | | | |
| அஃறிணை. | (௪.) ஒன்றன் பால் | வீடு. | (௫.) | பலவின்பால் | மரங்கள். |



**54.** PERSON.

௫௪.—இடம் ஆவது எத்தனை?

தன்மை, முன்னிலை, படர்க்கை என மூன்று.

இடமாவது சொற்களின் நிகழ்ச்சிக்குரிய தானம் ஆம்.

[நன்னூல் 265.]

(௧.) இவற்றுள், தன்னைத்தானே குறித்தது தன்மை:

(உ-ம்.) { ஒருமை. ... ... நான், அடியேன். / பன்மை. ... ... நாம், அடியேம். } [சொல்லுவோர்.]

(௨.) முன் நின்றவனைப்பார்த்துப் பேசுவது முன்னிலை:

(உ-ம்.) { ஒருமை. ... ... நீ, கொடியாய். / பன்மை. ... ... நீங்கள், தேவரீர். } [கேட்டோர்.]

(௩.) மற்றப் பொருளைக்குறித்துக் காட்டுவது படர்க்கை:

(உ-ம்.) { ஒருமை. ... ... அவன், மனிதன், வீடு. / பன்மை. ... ... அவர்கள், மனிதர், வீடுகள். } [சொல்லப்படுவோர்.]



**55.** CASE.

௫௫.—வேற்றுமை ஆவது என்ன?

பெயரின் இயல்பை வேறுபடுத்துவதே ஆம். அது எட்டுவகை ஆம்.

[நன்னூல் 240–242. 291–293.](T.)

(T.) விபத்தி என்பது வேற்றுமை எனப்படும். [குவலயா.]

**56.** FIRST OR NOMINATIVE CASE.

ருசு.—முதலாம் வேற்றுமை எது?

திரிபில்லாத பெயரின் இயல்பே ஒருமையில் முதல் வேற்றுமை எனவும், எழுவாய் எனவும்படும்.(U.)

[நன்னூல் 293–295.]

(உ-ம்.) மனிதன், மனைவி, வீடு.

[வினா 128 காண்க.]



**57.** SIGNS OF THE NOMINATIVE.

ருஎ.—எழுவாயைக் குறித்துக்காட்டுகிற சொல்லுருபுகள் எவை?

ஆனவன், ஆனவள், ஆனது,
ஆனவர், ஆனவர்கள், ஆனவை;
என்பவன், என்பவள், என்பது,
என்பவர், என்பவர்கள், எனபவை முதலிய சொல்லுருபுகள், எழுவாயைக் குறித்துக் காட்டும். (V.)

(உ-ம்.) இராசாவானவர் வந்தார்.
பொன்னன்என்பவன் வந்தான்.

இவை மற்ற வேற்றுமைகளின் உருபுகளையும் பெற்று வருவதும் உண்டு.

(உ-ம்.) இராசாவானவருக்குச் சிம்மாசனம்.
பொன்னன் என்பவனோடு வந்தான்.

☞ [இவை வினையால் அணையும் பெயர்கள். வினா, 95 காண்க. 105 வினாவையும் ஒத்துப்பார்க்க.]



**58.** SECOND OR ACCUSATIVE CASE.

ருஅ.—இரண்டாம் வேற்றுமையின் உருபு என்ன?

இரண்டாம் வேற்றுமையின் உருபு ஐ என்பதே ஆம்.

[நன்னூல் 255. 296.]

இதின் பொருள் செயப்படுபொருளே.

(உ-ம்.)

| பெயர். | உருபு. | இரண்டாம் வேற்றுமை. |
|---|---|---|
| மனிதன், | ஐ | மனிதனை உண்டாக்கினார். |
| தந்தை, | ஐ | தந்தையைக் கனம்பண்ணினான். |
| பூ, | ஐ | பூவை அணிந்தாள். |
| மரம், | ஐ | மரத்தை வெட்டினான். [66.] |
| வீடு, | ஐ | வீட்டைக் கட்டினான். [68.] |
| நிலங்கள், | ஐ | நிலங்களை வாங்கினான். |

(U.) பெயரே அன்றிப் பிறஉரு வேலா. [அகத்.]

(V.) பெயர்ப்பின் விகுதி பெறுதலே ஆயவன்,
ஆனவன், ஆவான், ஆகின்றவன் முதல்
ஐம்பாற் சொல்லும் பெயர்ப்பின் அடைதலே. [இல-கொத்து.]

## அப்பியாசம். (61.)

"தோன்றலில் தோன்றுமை நன்று"

"தலையின் இழிந்த மயிர் அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை."

"ஆவின் இழிந்தது மேதி."

"பந்தி அம் புரவிநின்றும் பாரிடை இழிந்து."

"விசும்பிற்றுளிவீழின்................"

"அருவிக் குன்றிற் குஞ்சரம்."

"பஞ்சியின் மெல்லிதேனும் பகைசிறிதென்னவேண்டாம்."

"கார்கள் என்னவருங் கருமேதிகள்
ஊரினின்ற கன்று."

"கறவைகாண கன்றின் வெலிகிக்கண்டடிபணிந்து."
[கன்றின் = கன்றைப்போல.]

"குன்றின் அனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்."



**62. SIXTH OR GENITIVE CASE.**

சுஉ.—ஆறும் வேற்றுமையின் உருபுகள் எவை?

ஆறும் வேற்றுமையின் உருபுகள் அது, ஆது, அ, உடைய என்பனவாம்.(x.) இவற்றின் பொருள் கிழமைப் பொருள் முதலியவாம்.

☞ [கிழமை என்பது உரிமை; சம்பந்தப் பொருள் என்பாரும் உளர். குறைபொருள் எனவும்படும்.]

[நன்னூல் 300.]

(உ-ம்.)

| பெயர். | உருபு. | ஆறும் வேற்றுமை. |
|---|---|---|
| தந்தை | அது | தந்தையது கை. |
| தான் | ஆது | தனது செவி. [74.] |
| தான் | அ | தன கைகள். |
| தந்தை | உடைய | தந்தையுடைய கட்டளை. |

☞ (க.) மேற்சொல்லிய கிழமை என்பது தற்கிழமை என்றும் பிறிதின் கிழமை என்றும் இருவகை ஆம். நன்னூலார் தற்கிழமையை உறுப்புத்தற்கிழமை, பண்புத்தற்கிழமை, ஒன்றன் கூட்டத்தற்கிழமை, பலவின் ஈட்டத்தற்கிழமை, ஒன்று திரிந்து ஒன்றுதல் தற்கிழமை என நாலு வகையாக வகுத்திருக்கிறர்.

(உ-ம்.) நிலத்ததகலம். சாத்தனதியல்பு. கபிலரதுபாட்டு. சாத்தனதுகை. மஞ்சளது பொடி. மாந்தரது தொகுதி. நெல்லதுகுப்பை. விலங்கினதீட்டம். சாத்தனதாடை.

(x.) அதுவும், ஆதுவும், அவ்வும், உடையவும்,
ஆறன் உருபென்றறைதல் வேண்டும். [அகத்.]

(உ.) முடிக்குஞ் சொல் அஃறிணை ஒருமை ஆனால் அது, ஆது என்பனவரும். முடிக்குஞ் சொல் அஃறிணைப் பன்மை ஆனால் அ என்பது வரும். உயர் திணை ஒருமை பன்மைகளுக்கு அது, ஆது, அ என்பவை ஏலாவாம்.

(உ–ம்.) அரசர் குமாரன், அரசருடைய குமாரன், அரசருக்குக் குமாரன்.

☞ அரசரதுகுமாரன் என்பது வழு.

(க.) உடைய என்து பெயர் எச்சக்குறிப்பு என்றும், இசையெச்சம் என்றும், சொல்லுருபு என்றும் கூறுவார்.

(ச.) உடைய என்து செய்யுளில் உடை எனவும், இழிவான வழக்கத்தில் உட எனவும் வழங்கும்.

(உ–ம்.) "கல்வியே கற்புடைப் பெண்டிர்."



**63.** SEVENTH OR LOCAL ABLATIVE.

சூஷ.—ஏழாம் வேற்றுமையின் உருபு எது?

ஏழாம் வேற்றுமையின் உருபு இல் என்பதாம். இடத்தில் என்னும் சொல்லுருபும் வரும். இடத்து என்பதுஞ் செய்யுளிலே வரும்.

கண், கால், அகம், புறம், உள், கீழ், மேல், முன், பின், சார், அயல், புடை, முதல், திசை, தேம், தலை, இடை, கடை, வலம், பாடு, அளை, இடம், உழை, உழி, உளி, வயின், வாய், பால் முதலியவும் ஏழாம் வேற்றுமையின் உருபுகளாகவும் வழங்கும்.

[நன்னூல் 301, 302.]

(உ–ம்.)

| பெயர். | உருபு. | ஏழாம் வேற்றுமை. |
|---|---|---|
| வீடு | இல் | வீட்டில் இருக்கிறான். |
| அரசன் | இடத்தில் | அரசனிடத்தில் வந்தான. |
| மணி | கண் | மணியின் கண் ஒளி. |
| நல்லோர் | இடத்து | நல்லோரிடத்து அறம். |

மற்றவையும் இவ்வாறே.

☞ (க.) இவற்றின் பொருள் இடப்பொருளாம்.

(உ.) அவ்விடப்பொருளானது, (க) பொருளிடம், (உ) இடமிடம், (௩) காலமிடம், (ச) சினையிடம், (ரு) குணமிடம், (சு) தொழிலிடம் என ஆறுவகையாம்.
இவ்வாறுந் தனித்தனியே தற்கிழமை, பிறிதின் கிழமை என இருவகையாகப் பிரிக்கப்படும்.

(உ–ம்.) மணியின் கண் ஒளி / பனையின் கண் அன்றில் } இரு கிழமைக்கும் பொருளிடம் ஆயிற்று.

பின்வரும் உதாரணங்கள் பெரும்பாலும் செய்யுளுக்குரியவாம்.

ஊர்க்கால் நிவந்த பொதும்பர் ...... [கால்]
வேலின் கடை மணிபோல் ......... [கடை]
நல்லாரிடைப்புக்கு .................. [இடை]
வலைத்தலை மான் அன்ன ............ [தலை]
இல்லிடப் பாத்தை ...................... [இடம்]
தன்மேற் கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும் [மேல்]
பிண்டிக் கண்ணூர் நிழற் கீழ் .............. [கீழ்]

குணா கடல் வாய் அமுது ............ [வாய்]
தேர்த்திசை இருந்தான்................ [திசை]
அவர் வயிற் செல்லாய் ............ [வயின்]
கற்றார் முன் ........................... [முன்]
காட்டுச் சார் ஓடுங் குறு முயால் ...... [சார்]
கைவலத்துள்ளது ...................... [வலம்]
அவன் உழை வந்தான் ............... [உழை]
உறையுழி யோலைபோல் ............... [உழி]
குளிர் காவுளி .......................... [உளி]
என்னுயிர்ப் புறத்து .............. ... [புறம்
கடைப்புடை கொள்ளிய நீர்............ [புடை]
ஆன் முதல் வந்த உரன்மாய் மாலை ...... [முதல்]
காதலிபின் சென்றதம்ம .................. [பின்]
நம்பா டணையாதநாள் ...................... [பாடு]
கல்லளைச் சுனை நீர் ...................... [அளை]
கோழிக்குரியவை கோடாய் தேத்து ...... [தேம்]
நின்றதோர் நறவேங்கை நிழல் வழிஅசைந் தனன்................................ [வழி]
அவருள், பல்லார் அகத்து ............... [அகம்]
ஊரிலிருந்தார் ............................ [இல்]
என் பால் இருந்தான் .................. [பால்]

☞ (ந.) இவை இடப்பெயர்களாகிச் சொல்லுருபுகளாக வழங்கும், தத்தம் பொருளை உணர்த்தி வருதலும் உண்டு.

(உ-ம்.) "கண்ணகன் ஞாலம்" [கண் = இடம்.]
"அகத்திலிருந்தான்." [அகம் = உள்ளிடம்.]
முதலியவும் அவ்வாறே.

## அப்பியாசம். (63.)

"ஆகாதெனினும் அகத்து நெய்யுண்டாகிற்
போகா தெறும்பு புறஞ் சுற்றும்."
[அகத்து 66. வேற்றுமை உருபு தொக்கு நின்றது, 152.]

"மலர் மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நில மிசை நீடு வாழ்வார்....
[மிசை எ-து ஏழன் உருபு.]

"இருள் சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு......"
[மாட்டு 68. மாடு எ-து ஏழன் உருபு. இல் தொக்கு நின்றது. 152.]

"..........நல்லறிவாளர்
குழவியிடத்தே துறந்தார்."
[இடத்தே = இடத்தில்.]

"ஆறெலாங் கடலுள் வைகும்."

"முகிற்றலை மதியமன்ன முழு மணி மாடத்திட்ட
அகிற் புகை தவழ்ந்த."

### 64. EIGHTH OR VOCATIVE CASE.

௬௪.—எட்டாம் வேற்றுமையின் உருபுகள் எவை?

எட்டாம் வேற்றுமையின் உருபுகள் பெயரின் ஈறு திரிதலும் கெடுதலும் மிகுதலும் இயல்பாதலும், ஈற்றயல் எழுத்துத் திரிதலும் ஆம். இவற்றுள், இயல்பும் ஈற்றின் அழிவும் சமீபத்திலும், அளபெடுத்தல் தூரத்திலும், ஓகாரம் மிகுதல் புலம்பலிலும், மற்றவைகள் எல்லா இடங்களிலும் வரும்.

[நன்னூல் 303, 304.]

(௩.) சில உருபுகள் பொருளின்றி நிற்கும் ஏ என்னும் இடைச்சொல்லைப் பெறும்.

(உ-ம்.) அவனோடே. வீட்டிலே.

---

## அப்பியாசம். (65.)

"மெய்மெய்யே! உலகின் வேந்தர்க்கெல்லாம் வேந்தே."

"பொன்னின் குடம் உடைந்தாற் பொன்னாகும், என்னாகும்
மண்ணின் குடம் உடைந்தக்கால்?"

"யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனின் அதனின் இலன்."

---

## 66. NOUNS ENDING IN அம்.

௬௬.—மகரவீற்றுப் பெயர்ச்சொற்கள் எவ்வாறு வேற்றுமைப்படும்?

மகரவீற்றுப் பெயர்ச்சொற்கள் வேற்றுமைப்படும்பொழுது, அம் என்பது கெட அத்துச்சாரியை பெறும்.

[நன்னூல் 252.]

(உ-ம்.) மரம், மரத்தை; நிலம், நிலத்துக்கு.

☞ (௧.) வீரமொடு என்பதுபோல செய்யுளில் வருவதும் உண்டு.

(௨.) ஆம் என ஈற்றிலுள்ள பெயர்கள் ஆம்கெட அத்துச்சாரியைப் பெறும்.

(உ-ம்.) "பூரியர் குழாத்திடை அறிஞர்போலவே." [குழாம்.]

---

## 67. THE NOUN எல்லாம்.

௬௭.—எல்லாம் என்பது எந்தச் சாரியை பெறும்?

எல்லாம் என்பது அற்றுச்சாரியையும், உம் என்னும் இடைச்சொல்லும் வரப்பெறும். சிலவிடத்து மகரங்கெடவும், பலர்பாலுக்குரிய விகுதி தோன்றவும் பெறும்.

[நன்னூல் 245, 246.]

(உ-ம்.) எல்லாவற்றையும்.
எல்லாமனிதர்களும்.
மனிதர் எல்லாரும்.

---

## 68. NOUNS ENDING IN டு, று.

௬௮.—தனிக்குறில் அணையாத டு, று ஈற்றிலிருக்கிற பெயர்கள் எவ்வாறு வேற்றுமைப்படும்?

குற்றியலுகாரம் கெட, ட், ற் இரட்டிக்கும்.

[நன்னூல் 183.]

(உ-ம்.) ஆடு, ஆட்டை.
ஆறு, ஆற்றை.

[௨௧ காண்க.]

ஆட்டின் கழுத்தின் அதர்.

**69.** TERMINATIONS OF THE PLURAL.

சாகூ.—பன்மைப்பாலின் உருபுகள் எவை?

பன்மைப்பாலின் உருபுகள் அர், ஆர், கள், மார் என்பவை ஆம்.

னகர வீற்றுப் பெயர்களில் னகரம் ரகரமாகிக் கள் என்னும் விகுதியைப் பெற்றும், பெருதும், வேற்றுமை உருபுகளைப் பெறும்.

[நன்னூல் 278. 280.].

(உ-ம்.) தந்தையர், தந்தையார்.
வீடுகள், குருமார்.
மனிதர், மனிதர்கள்.

☞ (க.) சில, பல, சிறிய, பெரிய முதலிய அகரவீறு அஃறிணைப் பன்மைப்பெயர்கள் வேற்றுமைப் படும்பொழுது அற்றுச் சாரியைபெறும்.

[நன்னூல் 250.]

(உ-ம்.) பலவற்றை, சிறியவற்றை.

(உ.) மகன் எ-து பன்மையில் மக்கள் எனவும் மாக்கள் எனவும் வரும்.

(ங.) செய்யுளிலே இர் என்னும் விகுதியும் பன்மையிலே வரும்.

(உ-ம்.) மகளிர்.



**70.** PARADIGMS.

எ௰.—மேற்சொல்லிய வேற்றுமைகளைக் காட்டிய அட்டவணைகளைச் சொல்லு?

## I. கணக்கன்.

உருபுகள் இயல்புப்புணர்ப்பால் பெயரோடு சேர்ந்தன.

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| (வினா.56, 57.) க. | கணக்கன், கணக்கனானவன். | கணக்கர், கணக்கர்கள். |
| உ. (58.) | கணக்கனை + ஐ. | கணக்கரை. |
| ங. (59.) | கணக்கனால் + ஆல், ஆன், ஒடு. ஓடு, உடன்.<br>கணக்கனான்<br>கணக்கனோடு கணக்கனொடு.<br>கணக்கனுடன். | கணக்கரால்.<br>கணக்கரான்.<br>கணக்கரோடு. கணக்கரொடு.<br>கணக்கருடன். |
| ச. (60.) | கணக்கனுக்கு + கு.<br>கணக்கனுக்காக + கு. + ஆக. | கணக்கருக்கு.<br>கணக்கருக்காக. |
| ரு. (61.) | கணக்கனில் + இல்.<br>கணக்கனிலிருந்து + இல். + இருந்து.<br>கணக்கனினின்று + இல் + நின்று | கணக்கரில்.<br>கணக்கரிலிருந்து.<br>கணக்கரினின்று. |
| சு. (62.) | கணக்கனுடைய + உடைய.<br>கணக்கனின் + இன்.<br>கணக்கனது + அது. | கணக்கருடைய.<br>கணக்கரின்.<br>கணக்கரது. |
| எ. (63.) | கணக்கனில் + இல்.<br>கணக்கனிடத்தில் + இடத்தில். | கணக்கரில்.<br>கணக்கரிடத்தில். |
| அ. (64.) | கணக்கனே! + ஏ<br>(மன்னா!) | கணக்கரே! |

☞ செய்யுளில் தன் என்னுஞ்சாரியை பெயருக்கும் உருபுக்கும் இடையிலே வருவதும் உண்டு. [வினா 108 காண்க.]

(உ-ம்.) கணக்கன்தன்னை. [கணக்கன்றன்னை.]
கணக்கன்தனக்கு. [கணக்கன்றனக்கு.]

## II. கல்.

தனிக்குறில் அணைந்த மெய் இரட்டிக்க உருபுகள் சேர்ந்தன. (வினா 29.)

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | கல். | கற்கள், கல்லுகள். [வினா 35. 29.] |
| உ. | கல்லை.<br>கல்லினை. (வினா 65.) | கற்களை, கல்லுகளை. [கல்லுக்களை.] |
| ௩. | கல்லால், கல்லான், கல்லுடன்.<br>கல்லோடு, கல்லொடு. | கற்களால், கல்லுகளால், கற்களுடன்.<br>கற்களோடு, கல்லுகளொடு. |
| ச. | கல்லுக்கு.<br>கல்லுக்காக. | கற்களுக்கு, கல்லுகளுக்கு.<br>கல்லுகளுக்காக, கற்களுக்காக. |
| ரு. | கல்லில்.<br>கல்லிலிருந்து.<br>கல்லினின்று. | கற்களில், கல்லுகளில்.<br>கல்லுகளிலிருந்து, கற்களிலிருந்து.<br>கல்லுகளினின்று, கற்களினின்று. |
| சு. | கல்லினுடைய.<br>கல்லின்.<br>கல்லினது. | கல்லுகளினுடைய, கற்களினுடைய.<br>கல்லுகளின், கற்களின்.<br>கல்லுகளினது, கற்களினது. |
| எ. | கல்லில்.<br>கல்லினிடத்தில். | கல்லுகளில், கற்களில்.<br>கல்லுகளினிடத்தில், கற்களினிடத்தில். |
| அ. | கல்லே! | கல்லுகளே! கற்களே! |

## III. நரி.

யகர உடம்படுமெய் தோன்ற உருபுகள் சேர்ந்தன. (வினா 23.)

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | நரி. | நரிகள். |
| உ. | நரியை. | நரிகளை. |
| ௩. | நரியால்.<br>நரியோடு. | நரிகளால்.<br>நரிகளோடு |
| ச. | நரிக்கு.<br>நரிக்காக. | நரிகளுக்கு.<br>நரிகளுக்காக. |
| ரு. | நரியில்.<br>நரியிலிருந்து.<br>நரியினின்று. | நரிகளில்.<br>நரிகளிலிருந்து.<br>நரிகளினின்று. |
| சு. | நரியினுடைய.<br>நரியின்.<br>நரியினது. | நரிகளினுடைய.<br>நரிகளின்.<br>நரிகளினது. |
| எ. | நரியில்.<br>நரியினிடத்தில். | நரிகளில்.<br>நரிகளினிடத்தில். |
| அ. | நரியே! | நரிகளே! |

## IV. பசு.

வகர உடன்படு மெய் தோன்ற உருபுகள் சேர்ந்தன. (வினா 23.)]

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | பசு. | பசுக்கள். |
| உ. | பசுவை. | பசுக்களை. |
| ௩. | பசுவால்.<br>பசுவோடு. | பசுக்களால்.<br>பசுக்களோடு. |
| ச. | பசுவுக்கு.<br>பசுவுக்காக. | பசுக்களுக்கு.<br>பசுக்களுக்காக. |
| ரு. | பசுவில்.<br>பசுவிலிருந்து.<br>பசுவினின்று. | பசுக்களில்.<br>பசுக்களிலிருந்து.<br>பசுக்களினின்று. |
| சு. | பசுவினுடைய.<br>பசுவின்.<br>பசுவினது. | பசுக்களினுடைய.<br>பசுக்களின்.<br>பசுக்களினது. |
| எ. | பசுவில்.<br>பசுவினிடத்தில். | பசுக்களில்.<br>பசுக்களினிடத்தில். |
| அ. | பசுவே! | பசுக்களே! |

### V. காது.

குற்றிய லுகரங் கெட உருபுகள் சேர்ந்தன.

(வினா 24.)

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | காது. | காதுகள். |
| உ. | காதை. | காதுகளை. |
| ௩. | காதால்.<br>காதோடு | காதுகளால்.<br>காதுகளோடு. |
| ச. | காதுக்கு.<br>காதுக்காக. | காதுகளுக்கு.<br>காதுகளுக்காக. |
| ரு. | காதில்.<br>காதிலிருந்து.<br>காதினின்று. | காதுகளில்.<br>காதுகளிலிருந்து.<br>காதுகளினின்று. |
| சு. | காதினுடைய.<br>காதின்.<br>காதினது. | காதுகளினுடைய.<br>காதுகளின்.<br>காதுகளினது. |
| எ. | காதில்.<br>காதினிடத்தில். | காதுகளில்.<br>காதுகளினிடத்தில். |
| அ. | காதே! | காதுகளே! |

### VI. மாடு.

குற்றியலுகரங் கெடவும் டகரம் இரட்டிக்கவும் உருபுகள் சேர்ந்தன. (வினா 26. 68.)

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | மாடு. | மாடுகள். |
| உ. | மாட்டை. | மாடுகளை. |
| ௩. | மாட்டால்.<br>மாட்டோடு | மாடுகளால்.<br>மாடுகளோடு. |
| ச. | மாட்டுக்கு.<br>மாட்டுக்காக. | மாடுகளுக்கு.<br>மாடுகளுக்காக. |
| ரு. | மாட்டில்.<br>மாட்டிலிருந்து<br>மாட்டினின்று. | மாடுகளில்.<br>மாடுகளிலிருந்து.<br>மாடுகளினின்று. |
| சு. | மாட்டினுடைய.<br>மாட்டின்.<br>மாட்டினது. | மாடுகளினுடைய.<br>மாடுகளின்.<br>மாடுகளினது. |
| எ. | மாட்டில்.<br>மாட்டினிடத்தில். | மாடுகளில்.<br>மாடுகளினிடத்தில். |
| அ. | மாடே! | மாடுகளே! |

### VII. ஆறு.

குற்றியலுகரங் கெடவும் றகரம் இரட்டிக்கவும் உருபுகள் சேர்ந்தன. (வினா 26. 68.)

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | ஆறு. | ஆறுகள். |
| உ. | ஆற்றை. | ஆறுகளை. |
| ௩. | ஆற்றால்.<br>ஆற்றோடு. | ஆறுகளால்.<br>ஆறுகளோடு. |
| ச. | ஆற்றுக்கு.<br>ஆற்றுக்காக. | ஆறுகளுக்கு.<br>ஆறுகளுக்காக. |
| ரு. | ஆற்றில்.<br>ஆற்றிலிருந்து.<br>ஆற்றினின்று. | ஆறுகளில்.<br>ஆறுகளிலிருந்து.<br>ஆறுகளினின்று. |
| சு. | ஆற்றினுடைய.<br>ஆற்றின்.<br>ஆற்றினது. | ஆறுகளினுடைய.<br>ஆறுகளின்.<br>ஆறுகளினது. |
| எ. | ஆற்றில்.<br>ஆற்றினிடத்தில். | ஆறுகளில்<br>ஆறுகளினிடத்தில். |
| அ. | ஆறே! | ஆறுகளே! |

### VIII. மரம்.

அம் கெட அத்துச்சாரியை தோன்ற உருபுகள் சேர்ந்தன. (வினா 66.)

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | மரம். | மரங்கள். (வினா 32.) |
| உ. | மரத்தை. | மரங்களை. |
| ௩. | மரத்தால்.<br>மரத்தோடு. | மரங்களால்.<br>மரங்களோடு. |
| ச. | மரத்துக்கு.<br>மரத்துக்காக. | மரங்களுக்கு.<br>மரங்களுக்காக. |
| ரு. | மரத்தில்.<br>மரத்திலிருந்து.<br>மரத்தினின்று. | மரங்களில்.<br>மரங்களிலிருந்து.<br>மரங்களினின்று. |
| சு. | மரத்தினுடைய.<br>மரத்தின். (மரத்து.)<br>மரத்தினது. | மரங்களினுடைய.<br>மரங்களின்.<br>மரங்களினது. |
| எ. | மரத்தில்.<br>மரத்தினிடத்தில். | மரங்களில்.<br>மரங்களினிடத்தில். |
| அ. | மரமே! | மரங்களே! |

## அப்பியாசம். (70.)

"கண்ணிற்கணிகலங் கண்ணோட்டம்."

"அல்லின் மாரி அனைய நிறத்தவள்
சொல்லின் மாத்திரையிற் கடல்தூர்ப்பன
கல்லின் மாரியைக் கைவகுத்தான், அது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினன்."

"மண்ணினை மறைத்தன வளர்ந்தமாக்கொடி
விண்ணினை மறைத்தன விரிந்த மாத்துகள்!"

"செங்கைச் சூல வெந்தீயினைத் தீயதன்
வெங்கட்டையொடு மேற்செல வீசினன்.—"

"ஆதியை ஓத அறிவுண்டாமே."

"புவியினில் வேந்தர் எல்லாம்."

"நல்லாற்ருனடி அருள் ஆள்க! பல்லாற்ருற்
றேரினும் அஃதே துணை."
[ஆறு, ஆற்ருன், ஆற்ருல்.]

"தண் கயக்குற்ற போது."
[கயத்தில்.]

"சலத்தால் பொருள் செய்தே மார்த்தல் பசமட்
கலத்துணீர் பெய்திரீஇ அற்று."
[இரீஇ = இருத்தி. 86. இரீஇ அற்று. 137.]



**71.** DECLENSION OF அது, இது, எது, யாது.

எக.—அது, இது, எது, யாது என்பவை எவ்வாறு வேற்றுமைப்படும்?

ஒருமையிலே இன் சாரியையும் அன் சாரியையும் பெறும். பன்மையிலே அற்றுச்சாரியையும் பெறும். து என்பது வை யாகத்திரியும். [நன்னூல் 250. 304.]

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | அது, அஃது. | அவை, அவைகள். |
| உ. | அதை, அதனை | அவற்றை, அவைகளை. |
| ௩. | அதினல், அதனல்.<br>அதால். [அத்தால் எ-து வழு.]<br>அதோடு. | அவற்ருல், அவைகளால்.<br><br>அவற்ருேடு, அவைகளோடு. |
| ச. | அதற்கு. அதிற்கு. | அவற்றுக்கு, அவற்றிற்கு, அவைகளுக்கு. |
| ரு. | அதில், அதினின்று.<br>அதிலிருந்து. | அவற்றில், அவைகளில். |
| சு. | அதன், அதின்.<br>அதனுடைய, அதினுடைய.<br>அதனது. | அவற்றின்.<br>அவற்றினுடைய.<br>அவைகளின்.<br>அவைகளினுடைய. |
| எ. | அதில்.<br>அதனிடத்தில்.<br>அதினிடத்தில். | அவற்றில், அவற்றினிடத்தில்<br>அவைகளில், அவைகளிடத்தில். |

**72.** DECLENSION OF FIRST PERSONAL PRONOUN.

எஉ.—தன்மை இடமாகிய நான் என்பது எவ்வாறு வேற்றுமைப்படும்?

ஒருமையிலே இரண்டாவது முதலான வேற்றுமைகளில் நான் என்பது என் எனத்திரியும்.

பன்மையிலே முதல் வேற்றுமையில் நான் என்பது நாம் எனத்திரியும். இரண்டாமுதலிய வேற்றுமைகளில் எம் எனவும் நம் எனவுந் திரியும்.

[ நன்னூல் 285–287. 294. ]

(உ-ம்)

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | நான், யான். | நாம், நாங்கள், யாம், யாங்கள். |
| உ. | என்னை. | நம்மை, எங்களை. |
| ங. | என்னால், என்னோடு.<br>என்னுடன். | நம்மால், எங்களால்.<br>நம்மோடு, எங்களோடு. |
| ச. | எனக்கு, எனக்காக. | நமக்கு, நமக்காக.<br>எங்களுக்கு, எங்களுக்காக. |
| ரு. | என்னில், என்னின். | நம்மில், நம்மின்.<br>எங்களில், எங்களின். |
| சு. | என், எனது, என.<br>என்னுடைய. | நம், நமது, எம், எங்கள்.<br>நம்முடைய, எங்களுடைய. |
| எ. | என்னிடத்தில், என்னில். | நம்மில், நம்மிடத்தில், எம்மிடத்தில். |

☞ நாம் எ-து முன்னிலையோரையுங்குறிக்கும். நாங்கள் எ-து முன்னிலையோரை நீக்கித் தன்னையுந் தன்னைச்சேர்ந்தவரையுங் குறிக்கும்.—

அப்பியாசம். (72.)

"யான் என தென்னுஞ் செருக்கறுப்பான்
வானோர்க் குயர்ந்த உலகம் புகும்.—"

"யாமும் எம்மிருக்கை பெற்றேம், உனக்கிடையூறும் இல்லை.—"

"எனக்குத் தாய் ஆகியாள் என்னை ஈங்கிட்டுத்
தனக்குத் தாய் நாடியே சென்றாள்—தனக்குத் தாய்
ஆகியவளும் அது ஆனாற்றாய்த் தாய்க்கொண்
டேகும் அளித்திவ்வுலகு.—"

"தேர்மிசை நம்வாயில் கடிதேகுதல் செய்வானோ?—"



**73.** DECLENSION OF SECOND PERSONAL PRONOUN.

எங.—நீ என்பது எவ்வாறு வேற்றுமைப்படும்?

ஒருமையிலே இரண்டாவது முதலிய வேற்றுமைகளில் முன்னிலையிடமாகிய நீ என்பது உன் எனத்திரியும்.

பன்மையிலே, முதல் வேற்றுமையில் நீர் எனவும் நீம் எனவுந் திரியும். இரண்டாமுதலிய வேற்றுமைகளில் உம் எனத் திரியும்.

[ நன்னூல் 247. 294.]

| (உ-ம்.) வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | நீ. | நீர், நீங்கள், நீவிர், நீயிர். |
| உ. | உன்னை, நின்னை. | உம்மை, உங்களை. |
| ங. | உன்னால், நின்னால். | உம்மால், உங்களால். |
| ச. | உனக்கு, நினக்கு. [நிற்கு.] உனக்காக. | உமக்கு, உங்களுக்கு. உமக்காக. |
| ரு. | உன்னில், உன்னின், நின்னில். உன்னிலிருந்து. | உம்மில், உங்களில்; உம்மிலிருந்து, உங்களிலிருந்து. |
| சு. | உன், உனது. உன்னுடைய, நின், நின. | உங்கள், உங்களுடைய. |
| எ. | உன்னில், உன்னிடத்தில். | உம்மில், உம்மிடத்தில், உங்களிடத்தில். |

☞ செய்யுளில் நும்மை நும்மால் முதலியவும் வரும்.

அப்பியாசம். (73.)

"............வைகலுந்
கூற்றம் அளந்து நுந்நாள் உண்ணும்."

"............போர் வலாய்!
நல்கும் ஞானிலம் நானே நினக்கென்றான்."



**74.** DECLENSION OF THE REFLEXIVE PRONOUN.

எச.—தான் என்பது எவ்வாறு வேற்றுமைப்படும்?

ஒருமையிலே இரண்டாவது முதலிய வேற்றுமைகளில் படர்க்கையிடமாகிய தான் என்பது தன் எனத்திரியும்.

பன்மையிலே முதல் வேற்றுமையில் தாம் எனத்திரியும். இரண்டாம் முதலிய வேற்றுமைகளில் தம் எனத்திரியும்.

[ நன்னூல் 247. ]

| (உ-ம்.) வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | தான். | தாம், தாங்கள். |
| உ. | தன்னை. | தம்மை, தங்களை. |
| ங. | தன்னால், தன்னோடு. தன்னொடு, தன்னுடன். | தம்மால், தங்களால். தம்மோடு, தங்களோடு. |
| ச. | தனக்கு, தனக்காக. | தமக்கு, தமக்காக, தங்களுக்கு. தங்களுக்காக. |
| ரு. | தன்னின், தன்னில், தன்னிலிருந்து. | தம்மில், தங்களில், தம்மின். |
| சு. | தன், தனது, தன்னுடைய, தன, தனது. | தம், தங்கள், தமது, தங்களுடைய, தம. |
| எ. | தன்னிடத்தில், தன்னில், தன்னிடத்து. | தம்மிடத்தில், தங்களிடத்தில் |

☞ (க) தாம் என்பது இரட்டித்து தத்தம் எனவுந் தந்தம் எனவும் வழங்கும். அதின் பொருள் அவர் அவர்களுடைய என்பதாம்.

(உ-ம்.) "தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கங்களை வழுவா தொழுக அறம் வளரும்."

"தம்பொருள் என்ப தம்மக்கள்;
அவர் பொருள் தந்தம் வினையான்வரும்."

(உ.) நான், நீ, தான் என்னும் பெயர்களாற் சில முறைப்பெயர்கள் உண்டாகும்.

(உ-ம்.) தந்தை, எந்தை; தம்பி, எம்பி, தங்கை.—

## அப்பியாசம். (74.)

"நன்னிலைக்கட்டன்னை நிறுப்பானுந், தன்னை
நிலை கலக்கிக் கீழிடுவானு', நிலையினு‚
மேன்மேல் உயர்த்து நிறுப்பானுந், தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்.—"

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்தகை சான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.—"

[ தற் = தன் = தன்னை. 153. தற் = தன் = தன்னுடைய. ]

# II. VERBS.

## II. வினையியல்.

**75.** ANALYSIS OF VERBAL FORMS.

௭௫.—வினைச்சொல்லில் எத்தனை பொருளை அறியவேண்டும்?

வினைச் சொல்லில், பகுதி, விகுதி, மூவிடம், ஐம்பால், காலம், ஏவல், வியங்கோள், எச்சம், எதிர்மறை, தொழிற்பெயர், இப் பத்துப்பொருளை அறியவேண்டும்.

[ நன்னூல் 322. ]

**76.** ROOT.

௭௬. இவற்றுள் பகுதி ஆவதென்ன?
பகுக்கப்படாமற் சொல்லின் முதனிலையாய் நிற்பதே பகுதி.

[நன்னூல் 134–137.]

(உ-ம்.) நட, படி, விடு, இரு, போ.

☞ (க.) பெயர்களை அடியாகவும், இடைகளை அடியாகவும், உரிகளை அடியாகவுங்கொண்டு உண்டாகும் வினைச்சொற்களும் உண்டு.

(உ-ம்.) சித்திரம் — சித்திரித்தான். } [பெயரடி.]
அங்கிகாரம் — அங்கிகரித்தான். }
நிகர் — நிகர்த்தான். [இடையடி.]
வெல் — வெருத்தான். [உரியடி.]

(உ.) பகுதியானது முதனிலை, வினையடி, அடிப்பாடு, தாது எனவும்படும்.(A.)

## அப்பியாசம். (76.)

"நல்வினத்தின் ஊங்குந்துணையில்லை. ...... "
[ஊங்கு என்னும் இடைச்சொல்லாற் பெயர் எச்சம் உண்டாயிற்று.]

"அரம்போலுங் கூர்மையர் எனு' மரம் போல்வர்
மக்கட்பண் பில்லாதவர்."

"முல்லை ! முறுவலித்து நகுதிர் போலும்."

## 77. TERMINATIONS. [நன்னூல் 140.] (B.)

௭௭.—விகுதி ஆவதென்ன?

திணை பால் இடம் முதலியவற்றைக் காண்பித்துச், சொல்லின் ஈற்றிலே நிற்கும் உருபே விகுதி.

[நன்னூல் 325.]

☞ (க.) விகுதியானது கடைநிலை எனவும்படும்.
(உ.) இவ்விகுதிகளோடு வழங்குகிற வினைச்சொல் வினைமுற்று எனவும், முற்றுவினை எனவும்படும். [நன்னூல் 323.]

---

(A.) பெயரே ஏற்றி, மற்றேன்றனை வேண்டா
தேற்பது வினைவினைக் குறிப்பு முற்றே. [தொன்னூல்.]

பொழுது கொள்வினை வினைப்பகு பதமே.
பகுதியே வலெனும் பகாப்பதம் ஆகும்.

(B.) என், ஏன், எம், ஏம், அம், ஆம், தன்மை;
ஐ, ஆய், இ, இர், ஈர் முன்னிலை; அன், ஆன்
அள், ஆள், அர், ஆர், உ, அ ப்படர்க்கை
வினையின் விகுதி மீண்டன பிறவும்.
கள்ளெனப் பலவொழி பன்மையின் மிகலும் ஆம். [தொன்னூல்.]

பெயர்வினை இடை உரி நான்கடியானும்
பிறக்கும் வினையெனப் பேசினர் புலவர். [இலக்கணக்கொத்து.]

(உ-ம்.)

| | | விகுதி. | பகுதியும், விகுதியும். |
|---|---|---|---|
| ஆண்பெண் பொதுப்பால். | தன்மை. | என், ஏன். [கு, டு, து, று, அல், அன்.] | வந்தேன், வந்தனென்.* |
| | முன்னிலை. | ஆய், இ, ஐ. ஓய். | வந்தாய், வந்தி, வந்தை. வந்தோய். |
| பலர்பால். | தன்மை. | ஓம், அம், எம். | வந்தோம், வந்தனம்,* வந்தேம். |
| | முன்னிலை. | ஈர், ஈர்கள். இர். மின். | வந்தீர், வந்தீர்கள். வந்திர், வந்தனிர்.* நடமின். |
| ஆண்பால். | படர்க்கை. | ஆன், அன் | வந்தான், வந்தனன். |
| பெண்பால். | படர்க்கை. | ஆள், அள். | வந்தாள், வந்தனள்.* |
| பலர்பால். | படர்க்கை. | ஆர், ஆர்கள். அர், ப. மார். | வந்தார், வந்தார்கள். வந்தனர்,* நடப்ப. நடமார். |
| ஒன்றன்பால். | படர்க்கை. | து, அது. | வந்தது. |
| பலவின்பால். | படர்க்கை. | அ, ஆ. | வந்த, வந்தன,* நடவா |

* அன் சாரியையும் பெறும்.

---

**78.** TENSES.

எஅ.—காலம் ஆவது எத்தனை வகை ஆம்?

போனகாலம், நிகழ்காலம், வருங்காலம், என மூவகையாம். இவை பகுதி, விகுதி இரண்டிற்கும் நடுவே வரும் இடைநிலைகளாற் குறிக்கப்படும்.

[நன்னூல் [redacted] 423, 138]

☞ இடைநிலை இன்றி வழங்குவனவும் உண்டு; அவற்றைப் பின்வரும் அட்டவணைகளிற் காண்க. (C.)

---

**79.** SIGNS OF THE PAST TENSE.

எகூ.—போனகாலத்து இடைநிலைகள் எவை?

த் த்த், ந்த், ட், ற், க், இன் ஆகிய இவ்வேழும் போனகாலத்து இடைநிலைகள் ஆம். (D.)

[நன்னூல் 142.]

---

(C.) "க, ட, த, ற ஒற்றின் ஐம்பான் மூவிடத் திறந்தகாலந் தருந்தொழில் இடைநிலை."
[இலக். வி.]

(D.) "கு, டு, து, று என்னுங் குன்றியலுகரமோ
டெம் மூர் க, ட, த, ற, இறுதியும், பம்மார்
மின்னென்னீறும், வியங்கோட் பகுதியும்,
ஏவலு'மறையும் என்பன எதிர்வுஞ்
செய்யு'நிகழ்பெதிர்வு மெய்பெறத்தருஉம்
இடைநிலைஎலா தென்மனார் புலவர்." [இலக். வி.]

| | பகுதி. | இடைநிலை. | விகுதி. | வினைமுற்று. |
|---|---|---|---|---|
| க. | செய் | த் | என் | செய்தேன். |
| உ. | படி | த்த் | என் | படித்தேன். |
| ங. | நட | ந்த் | ஓம் | நடந்தோம். |
| ச. | உண் | ட் | ஆய் | உண்டாய். |
| ரு. | பெறு | ற் | அது | பெற்றது. |
| சு. | தொகு | க் | அது | தொக்கது. |
| எ. | அனுப்பு | இன் | ஈர் | அனுப்பினீர். |

சில வினைப்பகுதிகளோடு அளபெடையும் இன்சாரியையுங் கூடி வரவும் போனகாலத்து வினைமுற்றும்.

(உ-ம்.) தழுவு, — தழீஇனேன்.
வினை, — வினை இனேன்.
உறு, — உறீ இனேன்.

"அறன் அழீஇ அல்லவை செய்தலிற்றீதே
புறன் அழீஇப் பொய்த்து நகை.

போனகாலத்து வினைமுற்றைக் காட்டிய அட்டவணைகள்.

## I. (த் என்னும் இடைநிலை.)

பகுதி: செய்.

| இடம். | | ஒருமை. | | பன்மை. |
|---|---|---|---|---|
| (க.) தன்மை. பொதுப்பால். | | செய்தேன்.<br>செய்தனென். | | செய்தோம்.<br>செய்தேம்.<br>செய்தாம்.<br>செய்தனம் |
| (உ.) முன்னிலை. பொதுப்பால். | | செய்தாய்.<br>செய்தை.<br>செய்தி. | | செய்தீர்.<br>செய்தீர்கள்.<br>செய்திர். |
| (ங.) படர்க்கை. | ஆண்பால். | செய்தான்.<br>செய்தனன். | பலர்பால். | செய்தார்.<br>செய்தார்கள் |
| | பெண்பால். | செய்தாள்.<br>செய்தனள். | | |
| | ஒன்றன்பால். | செய்தது. | பலவின்பால். | செய்தன.<br>செய்த. |

## II. (த்த் என்னும் இடைநிலை.)

பகுதி: படி.

| இடம். | | ஒருமை. | | பன்மை. |
|---|---|---|---|---|
| (க.) தன்மை. பொதுப்பால். | | படித்தேன்.<br>படித்தனென். | | படித்தோம்.<br>படித்தேம்.<br>படித்தாம். |
| (உ.) முன்னிலை. பொதுப்பால். | | படித்தாய்.<br>படித்தை. | | படித்தீர்.<br>படித்தீர்கள். |
| (ங.) படர்க்கை. | ஆண்பால். | படித்தான்.<br>படித்தனன். | பலர்பால். | படித்தார்.<br>படித்தனர்.<br>படித்தார்கள். |
| | பெண்பால். | படித்தாள்.<br>படித்தனள். | | |
| | ஒன்றன்பால். | படித்தது. | பலவின்பால். | படித்தன.<br>படித்த. |

## II. சொல்லதிகாரத்தில் (II.) வினையியல்.

### III. (ந்த் என்னும் இடைநிலை.)

பகுதி: நட.

| இடம். | | ஒருமை. | | பன்மை. |
|---|---|---|---|---|
| (க.)<br>தன்மை.<br>பொதுப்பால். | | நடந்தேன்.<br>நடந்தனென். | | நடந்தோம்.<br>நடந்தனம்.<br>நடந்தாம், நடந்தேம்.<br>நடந்தனெம். |
| (உ.)<br>முன்னிலை.<br>பொதுப்பால். | | நடந்தாய்.<br>நடந்தி. | | நடந்தீர்.<br>நடந்தீர்கள்.<br>நடந்திர். |
| (ங.)<br>படர்க்கை. | ஆண்பால். | நடந்தான்.<br>நடந்தனன். | பலர்பால். | நடந்தார்.<br>நடந்தனர்.<br>நடந்தார்கள். |
| | பெண்பால். | நடந்தாள்.<br>நடந்தனள். | | |
| | ஒன்றன்பால். | நடந்தது. | பலவின்பால். | நடந்தன.<br>நடந்த. |

### (IV. ட் என்னும் இடைநிலை.)

பகுதி: உண்.

| | ஒருமை. | | பன்மை. |
|---|---|---|---|
| | உண்டேன்.<br>உண்டனென். | | உண்டோம்.<br>உண்டனம்.<br>உண்டாம்.<br>உண்டேம்.<br>உண்டனெம். |
| | உண்டாய்.<br>உண்டனை.<br>உண்டி. | | உண்டீர்.<br>உண்டீர்கள்.<br>உண்டனிர். |
| ஆண்பால். | உண்டான்.<br>உண்டனன். | பலர்பால். | உண்டார்.<br>உண்டனர்.<br>உண்டார்கள் |
| பெண்பால். | உண்டாள்.<br>உண்டனள். | | |
| ஒன்றன்பால். | உண்டது. | பலவின்பால். | உண்டன.<br>உண்ட. |

### V. (ற் என்னும் இடைநிலை)

பகுதி: கல்.

| இடம். | | ஒருமை. | | பன்மை. |
|---|---|---|---|---|
| (க.)<br>தன்மை.<br>பொதுப்பால். | | கற்றேன். | | கற்றோம். |
| (உ.)<br>முன்னிலை.<br>பொதுப்பால். | | கற்றாய்.<br>கற்றி.<br>[என்றி.] | | கற்றீர்.<br>கற்றீர்கள். |
| (ங.)<br>படர்க்கை. | ஆண்பால். | கற்றான்.<br>கற்றனன். | பலர்பால். | கற்றார்.<br>கற்றார்கள். |
| | பெண்பால். | கற்றாள்.<br>கற்றனள். | | |
| | ஒன்றன்பால். | கற்றது. | பலவின்பால். | கற்றன.<br>கற்ற. |

### VI. (க் என்னும் இடைநிலை.)

பகுதி: தொகு.

| | ஒருமை. | | பன்மை. |
|---|---|---|---|
| | தொக்கேன். | | தொக்கோம். |
| | தொக்காய். | | தொக்கீர்.<br>தொக்கீர்கள்.<br>[நகுதிர் = நக்கீர்.] |
| ஆண்பால். | தொக்கான். | பலர்பால். | தொக்கார்.<br>தொக்கார்கள் |
| பெண்பால். | தொக்காள். | | |
| ஒன்றன்பால். | தொக்கது. | பலவின்பால். | தொக்கன.<br>தொக்க. |

## VII. (இன் என்னும் இடைநிலை.)

| இடம். | பால். | பகுதி. ஒருமை. | அனுப்பு. பன்மை. |
|---|---|---|---|
| (க.) தன்மை. பொதுப்பால். | | அனுப்பினேன். அனுப்பினென். | அனுப்பினேம். அனுப்பினம். |
| (உ.) முன்னிலை. பொதுப்பால். | | அனுப்பினய். அனுப்பினே. | { அனுப்பினீர். அனுப்பினீர்கள். அனுப்பினிர். |
| (ங.) படர்க்கை. | ஆண்பால். | அனுப்பினன். அனுப்பினன். | பலர்பால். { அனுப்பினர். அனுப்பினர்கள். } அனுப்பினர். |
| | பெண்பால். | அனுப்பினள், அனுப்பினள். | |
| | ஒன்றன்பால். | அனுப்பிற்று, (போயிற்று.) அனுப்பினது. அனுப்பியது. [போச்சு, போச்சுது எ-ன வழு.] | பலவின்பால். { அனுப்பின. |

### அப்பியாசம். (79.)

"ஆக்கம் இழந்தேம் என்றலறுவார்
ஊக்கம் ஒருவந்தங் கைத்துடையார்.—"

"சிந்தை செய்கையிற் றிகைத்தனே."

"ஏங்கினள், இளைத்தாள், திகைத்தாள், மனம்
வீங்கினள் விம்மினள் விழுந்தாள் அரோ!"

"பெரும்பொருள்வைத்தீர்; வழங்குமின்!"

"...............இதுவேண்டும் எனமுன்
றந்தனன் என்றனன் ..............."

"புண்டரீக மென் பதத்தினைப் புகழ்ந்தனள், புகழ
வண்டறு மது மாலை கைக்கொடுத்தனள், மகிழ்ந்து."

"நின்றுனூற்றி வாழ்தி எனினு'நின் வாழ்நாட்கள்
சென்றன செய்வதுணா!"
[வாழ்—வாழ்ந்தேன்—வாழுவேன்.]

"பல்லான்றகேள்விப் பயன் உணர்வார் பாடழிந்
தல்லல் உழப்ப தறிதிரே!"

"இம்மேதினி புரந்தோன்."

"ஆர்த்தனர், களித்தனர், ஆடிப் பாடினர்,
வேர்த்தனர், தடித்தனர், சிலிர்த்துமெய்ம்மயிர்
போர்த்தனர், மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினர்,
தூர்த்தனர் நீணிதிசொல்லினார்க்கெலாம்."

"முற்றும் உணர்ந்தனரில்லை, முழுவதுஉடன்
கற்றனம் என்று களியற்க!........."

"செய்தான் இருவினையின் பயத்தைச் சேரும் சென்றென்றி,
எய்தான் பயத்தைப்பிறனே துய்த்தல் இயல்பென்றி.—"

[என், என்றேன், என்றி.]

"மிக்கார்தம் கேட்டின்கண் மேன்மையில்லாச் சிறியார் போல்
நக்காங்கே எயிறுடைந்த நறவமுமில்லை; கார் வேங்கை
தக்கார்போற் கைம்மறித்த காந்தள்; அந்தோ தகாதெனவே
தொக்கார் போற் பன்மாவும் மயிலுந் தோன்றித்துளங்கினவே."

[மிகு. நகு. தகு. தொகு. 95. வினை.]

"ஆழ்திரைக் கடல் அகடு கீண்டொழுகியதன்றே."

"அரசரோட மரர்தம்மை அறிவரிதாயதன்றே."

"நன்றென வணங்கினர் நால்வர் ஓடினர்."



**80.** SIGNS OF THE PRESENT TENSE.

அ0.—நிகழ்காலத்தைக் குறிக்கும் இடைநிலைகள் எவை?

கிறு, க்கிறு, கின்று, க்கின்று, ஆநின்று, ஆகிய இவ்வைந்தும் நிகழ்காலத்தைக் குறிக்கும் இடைநிலைகளாம்.

[நன்னூல். 143.]

(உ-ம்.)

| | பகுதி. | இடைநிலை. | விகுதி. | வினை முற்று. |
|---|---|---|---|---|
| க. | படி | கிறு | ஏன் | படிகிறேன். |
| உ. | படி | க்கிறு | ஏன் | படிக்கிறேன். |
| ௩. | செய் | கின்று | ஓம் | செய்கின்றோம். |
| ௪. | அழி | க்கின்று | ஆன் | அழிக்கின்றான். |
| ௫. | நட | ஆநின்று | ஆய் | நடவாநின்றாய். |

## நிகழ்காலத்து வினைமுற்றைக் காட்டிய அட்டவணைகள்.

| | | I. (கிறு என்னும் இடைநிலை.) பகுதி: செய். | | II. (க்கிறு என்னும் இடைநிலை.) பகுதி: படி. | |
|---|---|---|---|---|---|
| இடம். | | ஒருமை. | பன்மை. | ஒருமை. | பன்மை. |
| (௧.) தன்மை. பொதுப்பால். | | செய்கிறேன் | செய்கிறோம். | படிக்கிறேன். | படிக்கிறோம். |
| (௨.) முன்னிலை. பொதுப்பால். | | செய்கிறாய். | செய்கிறீர். செய்கிறீர்கள். | படிக்கிறாய். | படிக்கிறீர். படிக்கிறீர்கள். |
| (௩.) படர்க்கை. | ஆண்பால். | செய்கிறான். | பலர்பால். செய்கிறார். செய்கிறார்கள் | படிக்கிறான். | பலர்பால். படிக்கிறார் படிக்கிறார்கள். |
| | பெண்பால். | செய்கிறாள். | | படிக்கிறாள். | |
| | ஒன்றன்பால். | செய்கிறது. செய்கின்றது | பலவின்பால். செய்கின்றன | படிக்கிறது. படிக்கின்றது | பலவின்பால். படிக்கின்றன. |

| | | III. (கின்று என்னும் இடைநிலை.) பகுதி: வாழ். | | IV. (க்கின்று என்னும் இடைநிலை) பகுதி: நட. | |
|---|---|---|---|---|---|
| இடம். | | ஒருமை. | பன்மை. | ஒருமை. | பன்மை. |
| (௧.) தன்மை. பொதுப்பால். | | வாழ்கின்றேன். வாழ்கின்றனென். | வாழ்கின்றோம். வாழ்கின்றனம். வாழ்கின்றாம். வாழ்கின்றனெம். வாழ்கின்றேம். | நடக்கின்றேன் | நடக்கின்றோம் |
| (௨.) முன்னிலை. பொதுப்பால். | | வாழ்கின்றாய். வாழ்கின்றாய். வாழ்கின்றி. | வாழ்கின்றீர். வாழ்கின்றீர்கள் வாழ்கின்றனிர். | நடக்கின்றாய். | நடக்கின்றீர். நடக்கின்றீர்கள் நடக்கின்றனிர். |
| (௩.) படர்க்கை. | ஆண்பால். | வாழ்கின்றான். வாழ்கின்றனன். | பலர்பால். வாழ்கின்றார். வாழ்கின்றனர் வாழ்கின்றார்கள். | நடக்கின்றான். | பலர்பால். நடக்கின்றார். நடக்கின்றார்கள். |
| | பெண்பால். | வாழ்கின்றாள். வாழ்கின்றனள். | | நடக்கின்றாள். | |
| | ஒன்றன்பால். | வாழ்கின்றது. | பலவின்பால். வாழ்கின்றன. | நடக்கின்றது. | பலவின்பால். நடக்கின்றன. |

## V. (ஆநின்று என்னும் இடைநிலை.)

பகுதி: போது.

| இடம். | | ஒருமை. | | பன்மை. |
|---|---|---|---|---|
| (௧) தன்மை. பொதுப்பால். | | போதாநின்றேன். | | போதாநின்றோம். |
| (௨.) முன்னிலை. பொதுப்பால். | | போதாநின்றாய். | | போதாநின்றீர். போதாநின்றீர்கள். |
| (௩.) படர்க்கை. | ஆண்பால். | போதாநின்றான். | பலர்பால். | போதாநின்றார். |
| | பெண்பால். | போதாநின்றாள். | பலர்பால். | போதாநின்றார்கள். |
| | ஒன்றன்பால். | போதாநின்றது. | பலவின்பால். | போதாநின்றன. |

அப்பியாசம். (80.)

"பண்புகொள் குணங்கள்கீதம் பாணியிற் பாடுகின்றான்."

"கறைசெயிர் கருந்துயர்க்கடலில் வீழ்கின்றாய்."

**81.** SIGNS OF THE FUTURE TENSE.

௮௧. வருங்காலத்தைக் குறிக்கும் இடை நிலைகள் எவை?

வ், ப், ப்ப், இம்மூன்றும் வருங்காலத்தைக் குறிக்கும் இடை நிலைகள் ஆம்.

[நன்னூல் 144.]

(உ-ம்.)

| | பகுதி. | இடைநிலை. | விகுதி. | வினை முற்று. |
|---|---|---|---|---|
| ௧. | செய். | வ் | ஏன் | செய்வேன். |
| ௨. | உண். | ப் | ஓம் | உண்போம். |
| ௩. | நட. | ப்ப் | ஆய் | நடப்பாய். |

## வருங்காலத்து வினைமுற்றைக் காட்டிய அட்டவணைகள்.

### I. (வ் என்னும் இடைநிலை.)

பகுதி: செய்.

| இடம். | பால். | ஒருமை. | பால். | பன்மை. |
|---|---|---|---|---|
| (க.) தன்மை. பொதுப்பால். | | செய்வேன். செய்கு. செய்வல். | | செய்வோம். செய்வம். செய்வேம். செய்தும். செய்கும். |
| (உ.) முன்னிலை. பொதுப்பால். | | செய்வாய். செய்தி. | | செய்வீர். செய்வீர்கள். |
| (ங.) படர்க்கை. | ஆண்பால். | செய்வான். | பலர்பால். | செய்வார். செய்வார்கள். செய்ப. |
| | பெண்பால். | செய்வாள். | | |
| | ஒன்றன்பால். | செய்யும். | பலவின்பால். | செய்யும். செய்வ. செய்குவ. |

### II. (ப் என்னும் இடைநிலை.)

பகுதி: உண்.

| இடம். | பால். | ஒருமை. | பால். | பன்மை. |
|---|---|---|---|---|
| (க.) தன்மை. பொதுப்பால். | | உண்பேன். உண்கு. | | உண்போம். உண்கும். |
| (உ.) முன்னிலை. பொதுப்பால். | | உண்பாய். உண்டி. [போதி | | உண்பீர். உண்பீர்கள். |
| (ங.) படர்க்கை. | ஆண்பால். | உண்பான். | பலர்பால். | உண்பார். உண்பார்கள். உண்ப. |
| | பெண்பால். | உண்பாள். | | |
| | ஒன்றன்பால். | உண்ணும். | பலவின்பால். | உண்ணும். உண்ணுவ. |

### III. (ப்ப என்னும் இடைநிலை.)

பகுதி: நட.

| இடம். | பால். | ஒருமை. | பால். | பன்மை. |
|---|---|---|---|---|
| (க.) தன்மை. பொதுப்பால். | | நடப்பேன். | | நடப்போம். |
| (உ.) முன்னிலை. பொதுப்பால். | | நடப்பாய். [வெள்குதி.] | | நடப்பீர். நடப்பீர்கள். |
| (ங.) படர்க்கை. | ஆண்பால். | நடப்பான். | பலர்பால். | நடப்பார். நடப்பார்கள். நடப்ப. நடமார். |
| | பெண்பால். | நடப்பாள். | | |
| | ஒன்றன்பால். | நடக்கும். | பலவின்பால். | நடக்கும். நடப்பன. |

☞ (க.) செய்யுளில் கு என்னுஞ் சாரியையும் வரும்.

(உ-ம்.) செய்குவேன்.

(உ.) ஒன்றன்பாலிலும், பலவின்பாலிலும் இடைநிலை கெட, உம் என்னும் விகுதி சேரும். பெரும்பாலும் பிறவினைகளிலே க்க் பகுதிக்கும் அவ்விகுதிக்கும் நடுவே வரும். விகாரமும் வருவதுண்டு?

(உ-ம்.) செய்யும், படிக்கும். ஆம், [ஆகும்.] போம், [போகும்.] . சாம், [சாகும்.] கூஉம், [கூவும்.]

## அப்பியாசம். (81.)

"யாமும் அவ்வயின் வருதும்........."

"நின்று மாதவம் புரிதியே னினைவு முற்றுதி........."

"வல்லூற்றுவரில் கிணற்றின்கட் சென்றுண்பர்.—"

"மூன்றுலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்.—"

"ஓரா அலும் ஒட்டலுஞ் செய்பவோ?"

"கெடுவல் யான் என்ப தறிக, தன்னெஞ்சம்
நடுவொரீஇ அல்லசெயின்.—"

"உள்ளத்தால் உள்ளலுந்தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வேம் எனல்."

"அன்றறிவாம் என்னாதறஞ் செய்க."

"...............கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன் போன்ம்."

[போன்ம் = போலும்.]

"...............மிதிலையார் கோமான்
புரியும் வேள்வியுங் காண்டு நாம்."

"............நின்கருத்தினை முடித்தும் என்றகன்றான்."

"சிறையால் அகப்படுத்தல் ஆகா தறைகோ."

"வள்ள வாய்ச செழுங் கமலத்தில் வண்டு பாண் மிழற்றும்,
அள்ளல் அங்கருஞ் சேற்றிடை ஆமை கண் படுக்கும்;
பள்ள நீர்ச்செழும் பணைதொறும் பணிலமுத்துயிர்க்கும்;
கள்ளுலா' மலர்ப்பொதும்பரிற் களிமயில் அகவும்.—"

"மலைவளம் பெரிதென்கோ யான்? வால் வளைபாந்து மேயும்
அலைவளம் பெரிதென்கோ யான்? யாதென அறைவன், மாதோ?"

"படுகொலை புரிவ மாதர் படைநெடுங் குவளைக் கண்ணே!
அடிமிசை முறை யிட்டென்றும் அரற்றுவ சிலம்பே! சூழ்ந்து
கடிமது நுகர்வ அன்னோர் கருங்குழற் காமர் வண்டே!"

"வேண்டி ஈதியோ, வெள்குதியோ, விம்மனையால்
மாண்டு போதியோ, மறுத்தியோ, எங்ஙனம் வாழ்தி?"

## 82. RULES FOR THE FORMATION OF THE THREE TENSES.

௮௨.—முக்காலங்களுக்கும் பொதுவான விதிகளெவை?

(க.) தன்வினைக்கும், பிறவினைக்கும் பொதுவாய் நிற்கும் பல வினைப்பகுதிகள், நிகழ்காலத்திலே கிறு என்னும் இடைநிலையைப் பெறும்பொழுது தன் வினையாகவும், க்கிறு என்னும் இடைநிலையைப் பெறும்பொழுது, பிறவினையாகவும் வழங்கும். அவற்றிற்கு முறையே போனகாலத்தில் ந்த் என்னும் இடைநிலையும், த்த் என்னும் இடைநிலையும், வருங்காலத்தில் வ் என்னும் இடைநிலையும், ப்ப் என்னும் இடைநிலையும் வரும்.

(உ-ம்.)

| பகுதி. | | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|---|
| அழி | தன்வினை. | அழிகிறேன் | அழிந்தேன் | அழிவேன். |
| | பிறவினை. | அழிக்கிறேன் | அழித்தேன் | அழிப்பேன். |

கெடு, மேய், விரி முதலியவும் அவ்வாறெனக்காண்க.

(உ.) தன்வினையாகி ங்கு, கு, ம்பு, சு, டு, து, ஈற்றிலுள்ள பகுதிகளும், பிறவினையாகி க்கு, ப்பு, ச்சு, ட்டு, ஈற்றிலுள்ள பகுதிகளும், பெரும்பாலும் நிகழ்காலத்திலே கிறு என்னும் இடைநிலையையும், போனகாலத்திலே இன் என்னும் இடைநிலையையும், வருங்காலத்திலே வ் என்னும் இடைநிலையையும் பெறும்.

(உ-ம்.)

| | பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|---|
| தன்வினை. | அடங்கு, | அடங்குகிறேன், | அடங்கினேன், | அடங்குவேன். |
| பிறவினை. | அடக்கு, | அடக்குகிறேன், | அடக்கினேன், | அடக்குவேன். |
| தன்வினை. | புலம்பு, | புலம்புகிறேன், | புலம்பினேன், | புலம்புவேன். |
| தன்வினை. | பேசு, | பேசுகிறேன், | பேசினேன், | பேசுவேன். |
| பிறவினை. | அனுப்பு, | அனுப்புகிறேன், | அனுப்பினேன், | அனுப்புவேன். |
| பிறவினை. | பாய்ச்சு, | பாய்ச்சுகிறேன், | பாய்ச்சினேன், | பாய்ச்சுவேன். |
| தன்வினை. | பாடு, | பாடுகிறேன், | பாடினேன், | பாடுவேன். |
| பிறவினை. | நாட்டு, | நாட்டுகிறேன், | நாட்டினேன், | நாட்டுவேன். |

(ங.) அகர வீற்றுப்பகுதிகள் நிகழ்காலத்திலே க்கிறு என்றும், போனகாலத்திலே ந்த் என்றும், வருங்காலத்திலே ப்ப் என்றும், இடை நிலைகளைப் பெறும்.

ஆகார வீற்றுச் சில வினைப்பகுதிகளும் அவ்வாறும்.

(உ-ம்.)

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| நட, | நடக்கிறேன், | நடந்தேன், | நடப்பேன். |
| பற, | பறக்கிறேன், | பறந்தேன், | பறப்பேன். |
| ஏமா | ஏமாக்கிறேன், | ஏமாந்தேன். | ஏமாப்பேன். |

(ச.) ண், ளு ஈறுள்ள பகுதிகள் முககாலத்திலும் முறையே கிறு, ட், வ் ஆவது, ப் ஆவது, இடை நிலைகளாகப் பெறும்.

(உ-ம்.)

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| உண், | உண்கிறேன், | உண்டேன், | உண்பேன். |
| ஆளு, | ஆளுகிறேன், | ஆண்டேன், | ஆளுவேன். |

(ரு.) ன், லு ஈறுள்ள பகுதிகள் முக்காலத்திலும் முறையே கிறு, ன், ற், வ் ஆவது, ப் ஆவது இடை நிலைகளாகப் பெறும்.

(உ-ம்.)

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம் | வருங்காலம் |
|---|---|---|---|
| தின், | தின்கிறேன், | தின்றேன், | தின்பேன். |
| செல்லு, | செல்லுகிறேன், | சென்றேன், | செல்லுவேன். |
| சொல்லு, | சொல்லுகிறேன், | சொன்னேன், | சொல்லுவேன். |

(சா.) தனிக் குறிலையணைந்த டு, று, கு, ஈறுள்ள பகுதிகள் நிகழ்காலத்திலே கிறு என்னும் இடைநிலையையும் போனகாலத்திலே ஒற்றின் மிகுதலையும், வருங்காலத்திலே வ் என்னும் இடை நிலையையும் பெறும்.

(உ-ம்.)

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| படு, | படுகிறேன், | பட்டேன், | படுவேன். |
| பெறு, | பெறுகிறேன், | பெற்றேன், | பெறுவேன். |
| தகு, | தகுகிறேன், | தக்கேன், | தகுவேன், |

(எ.) சில பகுதிகள் அவ்வவற்றிற்குரிய சில விகாரங்களைப் பெறும்.

(உ-ம்.)

| | பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|---|
| (க.) | வா, | வரு-கிறேன், | வந்தேன், | வருவேன். |
| | தா, | தரு-கிறேன், | தந்தேன், | தருவேன். |
| (உ.) | எல், | ஏற்-கிறேன், | ஏற்றேன், | ஏற்பேன். |
| | கல், | கற்-கிறேன், | கற்றேன், | கற்பேன். |
| | கேள், | கேட்கிறேன், | கேட்டேன், | கேட்பேன். |
| | நில், | நிற்-கிறேன், | நின்றேன், | நிற்பேன். |
| (ங.) | இரு, | இருக்-கிறேன், | இருந்தேன், | இருப்பேன். |
| *(ச.) | விள்ளு, | விள்ளு-கிறேன், | விண்டேன், | விள்ளுவேன். |
| | ஈனு, | ஈனு-கிறேன், | ஈன்றேன், | ஈனுவேன். |
| | போடு, | போடு-கிறேன், | போட்டேன், | போடுவேன். |
| | கொள்ளு, | கொள்ளு-கிறேன், | கொண்டேன், | கொள்ளுவேன், |
| (ரு.) | காண், | காண்-கிறேன், | கண்டேன், | காண்பேன். |
| | வாழு, | வாழு-கிறேன், | வாழ்ந்தேன், | வாழ்வேன் |
| (சு.) | பெய், செய், நெய், வை, பொரு, அழு, உழு, தொழு, | கிறேன், | தேன். | வேன். |
| (எ.) | விழு, | கிறேன், | விழுந்தேன், வீழ்ந்தேன். | விழுவேன். |
| (அ.) | ஆகு, | ஆகுகிறேன், ஆகிறேன், | ஆனேன், ஆகினேன். ஆயினேன், | ஆவேன். ஆகுவேன். |
| | போ, | போகிறேன், போகுகிறேன், | போனேன், போகினேன். போயினேன், போந்தேன். | போவேன். போகுவேன். |
| (கூ.) | சா, | சாகிறேன், | செத்தேன், | சாவேன். சாகுவேன். |
| (௰.) | வே, | வேகிறேன், | வெந்தேன், | வேகுவேன். வேவேன். |
| | நோ, | நோகிறேன், | நொந்தேன். | நோகுவேன் நோவேன். |

## அப்பியாசம். (82.)

"விண்டு நீங்கினர் விண்ணவர், இருசுடர் மீண்ட,
எண்டிசா முகம் இருண்டது, சுழன்ற தெவ்வுலகும்.—"
[பகுதிகள்: விள்ளு. மீளு. இருளு. சுழலு.]

"மூண்டெழுபெரும் பழிமுடிக்கும் வெவ்வினை."

"......கற்றோர்க்குச்
சென்ற இடம் எல்லாஞ் சிறப்பு."
[கல், செல், சென்றேன், சென்று, சென்ற.]

"மடங் கொன்ற றிவகற்றுங்கல்வி."

"வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை; வென்றது உந்
தூண்டிற்பொன் மீன் விழுங்கி அற்று."

"கட்ட செச்செல்." [ருடு.]

"............உவரிபுக்கொளிக்கும்..." [புகு.]

---

"பொருள் அற்றார் பூப்பர் ஒருகால்,
அருள் அற்றார் அற்றார், மற்றாதல் அரிது." [அறு.]

---

"செற்றுவீக்கும்மேல் வாராமுன்'ல்வினை
மேற் சென்று செய்யப்படும்." [செறு.]

---

"கற்க கசடறக் கற்பவை, கற்றபின்
நிற்க அதற்குத் தக."

[கல். நில்]

---

"............மெல்லிய வாழைக்குந்
தான் ஈன்ற காய் கூற்றம்......"

[ஈனு, ஈன்றேன், ஈன்ற.]

---

"............எரியிற்
சீறி வைதனர், செருக்கினர், நெருக்கினர், செற்றார்."

---

"தொழூஉண் சுவையினும் உழூஉண் இனிது."

---

"கல்லிடைப் பிறந்து, போந்து, கடலிடைக் கலந்த நீத்தம்."

---

"இங்கிப்பால் எனைத்திருடும் கள்ளனைக்
கண்டேன், கண்டேன்; இவன் பேர் நெஞ்சம்!
பொங்குற்ற நெஞ்சத்தா னெடுநாள்
நொந்தேன்: இன்று பொன்றுவிப்பேன்.—"

[காண். உறு. நோ.]

---

**83.** PARADIGM OF THE VERBS.

ஆசி.—இம்மூன்று காலங்களும் விகுதிகளோடே வழங்குகிற அட்டவணையைச் சொல்லு.

[நன்னூல் 324. 145.]

| எண் | இடம் | பால் | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|---|---|
| ஒருமை. | தன்மை. | | படிக்கிறேன்,<br>செய்கிறேன்,<br>படிக்கின்றனென்,<br>நடவாநின்றேன், | படித்தேன்,<br>செய்தேன்,<br>நடந்தனென்,<br>உண்டு, [நன்னூல் 331.]<br>வந்து, | படிப்பேன்.<br>செய்வேன்.<br>நடப்பனென்.<br>நடப்பல், உண்கு.<br>காண்பன்.<br>வாழ்து, சென்று. |
| | முன்னிலை. | | படிக்கிருய்,<br>செய்கின்றாய்,<br>நடவாநின்றுய், | படித்தாய்,<br>நடந்தனே,<br>நடந்தி, நடந்தோய், [நன். 353.] | படிப்பாய். [நன். 335.]<br>படிப்பை,<br>போதி. |
| | படர்க்கை. | ஆண்பால். | படிக்கிருன்,<br>படிக்கின்றனன், | படித்தான்,<br>படித்தனன், | படிப்பான். [நன். 325.] |
| | | பெண்பால். | படிக்கிருள்,<br>படிக்கின்றனள், | படித்தாள்,<br>படித்தனள், | படிப்பாள். [நன். 326.] |
| | | ஒன்றன்பால். | படிக்கிறது,<br>[நன். 328.] | படித்தது,<br>சொல்லினது.<br>சொல்லிற்று, சொல்லியது. | படிக்கும்.<br>செய்யும். |
| பன்மை. | தன்மை. | | படிக்கிறோம்,<br>[நன். 332.] | படித்தோம்,<br>நடந்தாம்,<br>நடந்தனம்,<br>நடந்தேம்,<br>நடந்தனெம், உண்டும்,<br>வந்தும், | படிப்போம்.<br>வாழ்தும்.<br>செய்கும்.<br>சேறும். |
| | முன்னிலை. | | படிக்கிறீர்கள்,<br>படிக்கிறீர்,<br>[நன். 337.] | நடந்தீர்கள்,<br>நடந்தீர்,<br>நடந்திர்,<br>நடந்தனிர், | படிப்பீர்கள்.<br>படிப்பீர். |
| | படர்க்கை. | பலர்பால். | படிக்கிருர்கள்,<br>படிக்கிருர்,<br>படிக்கின்றனர், | படித்தார்கள்,<br>படித்தார்,<br>நடந்தனர், | படிப்பார்கள்.<br>படிப்பார். [நன். 327.]<br>நடப்பர்<br>என்ப, என்மர்.<br>என்மனர். |
| | | பலவின்பால். | படிக்கின்றன,<br>[நன். 329.] | படித்தன,<br>நடந்தன,<br>நடந்த, | படிக்கும்.<br>நடப்பன. [நன். 348.] |

[இவை முதனிலை, இடைநிலை, கடைநிலை என பகுத்துக் காண்க.]

84. IMPERATIVE.

அச.—ஏவலாவது என்ன? [நன்னூல் 335.] (E.)

ஏவலாவது கட்டளைப்பொருளுள்ள வினையாகிய முன்னிலையிடத்தையே பெறும். வினைப்பகுதியே வழக்கமாய் ஒருமை

(E.) ஏவல் ஒருமைக்கியலும், ஆய், இ, மோ;
ஏவல் பன்மைக் கிர், தீர், மின், மினீர்.
இருமைக்கொரோவிடத்தாகும் குவ்வே. [இலக். திரட்டு.]

யேவலாம். உம் அல்லது உங்கள் புணர்ந்தால் பன்மை யேவலாம். செய்யுளிலே பல விகுதிகளையும் பெறும்.

| (உ-ம்.) | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| | படி. | படியும். படியுங்கள். |
| | செய்யுளில் : | |
| | உரையாய். உரைமோ. | உரையீர். உரைமின். உரைமினோ. |
| | உரைதி. போதி. அருள்தி. | உரைதீர். உரைதிர். [போதிர். அருள்திர்.] |
| | கேட்டி. (கேள் + தி.) | கேளீர். கேண்மினீர். சொல்லுமின். |
| | அருளு கு. இருக்கு. | அருளுரு. |
| | [வாராய். தாராய்.] | [வம்மின். தம்மின்.] |

☞ [வருங்காலத்து வினைமுற்றுகளையும் வியங்கோள் வினைமுற்றையும் ஒத்துநோக்காண்க.]

அப்பியாசம். (84.)

"வந்தமோ மகளே, உரைமாநிலம்
கூறுபாரீர் நாம் வெகுளவாசகம்."

"மைந்த, நீ கோடீ எங்கள் வாழ்க்கை நாள் யாவும் என்பார்"

"கோமகற்கினிய தெய்வப் படைக்கலங் கொடுத்தி."
[கொடுத்தி = கொடு.]

"தென்காலே இனி நீங்க நம்புதியே! நாண் மலர்காள் அரும்புதிரே!"

"............ஆக்கினையைக்
கோடீ" எனவுரைதிர் ஆரணன் கூறினன்."

"....... ....பெறுகென அறிந்தனர் அரியால்."

"சொல்லுமின அரசன் நீராம் போந்த ஆறெனக்கும் என்றான்."

"............மணியாலும்
நாமிசெண்டு வீதியீர்!..... ......"

**85.** THE OPTATIVE.

அ௫.—வியங்கோளாவதென்ன?

வியங்கோளானது இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் உரித்தாய் மரியாதை ஏவற் பொருளும் விருப்பப் பொருளு முள்ள வினையாம். இதற்கு விகுதிகள் க, இய, இயர், அல், தல், ஆக என்பவையாம்.

[நன்னூல் 338.]

(உ-ம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| ஒருமை. | நான் | வாழ்க, | வாழ்வேனாக, | செய்யக்கடவேன். |
| | நீ | வாழிய, | வாழ்வாயாக, | செய்யக்கடவாய். |
| | அவன் | வாழியர், | வாழ்வானாக, | செய்யக்கடவான். |
| | அவள் | கொள்ளல், | வாழ்வாளாக, | செய்யக்கடவாள். |
| | அது | | வாழ்வதாக, | செய்யக்கடவது. |
| பன்மை. | நாம் | வாழ்க, | வாழ்வோமாக | செய்யக்கடவோம். |
| | நீர் | வாழிய, | வாழ்வீராக, | செய்யக்கடவீர். |
| | நீங்கள் | வாழியர், | வாழ்வீர்களாக, | செய்யக்கடவீர்கள். |
| | அவர்கள் | கொள்ளல், | வாழ்வார்களாக, | செய்யக்கடவார்கள். |
| | அவை | | வாழ்வனவாக, | செய்யக்கடவன. |

அப்பியாசம். (85.)

"ஏழினோ டேழ் எனும் உலகும் எஞ்சினும்
வாழி நின் புகழ், என்று வாழ்த்தினர்.—"

"காக்க பொருளாக அடக்கத்தை."

"அடிகள் சொற்றுக என்றலும் அந்தணன் அறைவான்."

"தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென்றகமகிழ்க! தம்மினுங்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக! கற்றதெல்லாம்
எற்றே இவர்க்கு நாம் என்று."

"கழனி வாழ்கென வான்முளை வித்தினர் கலிப்பு."
[வாழ்கு = வாழ்க.]

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந் தந்
தகுதியான் வென்று விடல்."



**86.** DEPENDANT VERBAL FORMS, OR ADVERBIAL PARTICIPLES.

௮௬.—வினையெச்சம் என்பன எவை?

பால் காட்டும் முற்றுவிகுதிகளைப் பெறாமல், எச்சவிகுதிகளைப்பெற்று, முக்காலத்து வினை முற்றுகளைக்கொண்டு முடிவது வினையெச்சம். வினையெச்சங்கள் மூன்றாம். அவற்றுள்,

(க.) வினைப்பகுதியோடு போனகாலத்து இடைநிலையும் உகர விகுதியும் வரவும், இன் என்னும் இடைநிலையின் ஈற்றிலுள்ள ன் கெடவும் போனகாலத்து வினையெச்சமாம்.

[நன்னூல் 322. 343. 342.]

| (உ-ம்.) | பகுதி. | இடைநிலை. | விகுதி. | வினையெச்சம். |
|---|---|---|---|---|
| | படி | த்த் | உ | படித்து. |
| | அனுப்பு | இன் | | அனுப்பி. |
| | இருத்து. | இன் | னகரங் கெட | இருத்தி, இரீஇ. |

குறிப்பு. (க.) செய்யுளிலே செய்பு, செய்யா, என்பனவற்றைப் போல்வனவும் வரும்.

(உ.) ஆகி என்பது ஆய் எனவும், போகி என்பது போய் எனவும் வரும்.

## அப்பியாசம். (86. க.)

"காணியயானுஞ் சென்றேன்."

"வஞ்சித்தொழுகு' மதியிலிகாள! யாவரையும்
வஞ்சித்தோம் என்று மகிழன்மின் :
வஞ்சித்த
எங்கும் உளன் ஒருவன் காணுங்கொல், என்றஞ்சி
அங்கங் குலைவதறிவு."

"புணரி நீர் சூழுந்து பூவுலகில் யாவும்
உணரினினக்கில்லை ஒப்பு..." [ சூழுந்து = சூழ்ந்து. ]

"கொங்குயிர்த்த பூந்தடத்துலாய்."
[ உலாய் = உலாவி. ]

"நாட்டிடம் படர்ந்து போகி நாடுது' நாங்கள்."

"ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை."

[ வினாய் = வினாவி. ]

"கல்லாக் கழிப்பர் தலையாயார், நல்லவை
துவ்வாக் கழிப்பர் இடைகள்..."

(உ.) பகுதியோடு போனகாலத்து இடைநிலையும், ஆல் என்னும் விகுதியும் வரவும்; பகுதியானது க்க் என்னும் இடைநிலை வந்தும் வராதும் இல், இன் என்னும் விகுதிகளை பெறவும், வருங்காலத்து வினையெச்சமாம்.

| (உ-ம்.) | பகுதி. | இடைநிலை. | விகுதி. | வருங்காலத்து வினையெச்சம். |
|---|---|---|---|---|
| | செய் | த் | ஆல், இல், இன், | செய்தால், செய்யில், செய்யின். |
| | படி | த்த் | ஆல், இல், இன், | படித்தால், படிக்கில், படிக்கின். |
| | அனுப்பு | இன் | ஆல், இல், இன், | அனுப்பினால், அனுப்பில், அனுப்பின். |

☞ (௫.) ஆடிய, ஆடியர், நடப்பான், செய்வான், விடுபாக்கு, நடந்தக்கால், என்பனவும் இவை போல்வனவும் வரும். உளரேல், நடப்பரேல் எனவும் வரும். (F.)

## அப்பியாசம். (86. உ.)

"விண்ணின்று பொய்ப்பின்."
[ பொய் + ப்ப் + இன். ]

"வானம்வறக்கு மேல்."
[ வருங்காலத்துப் பெயர் எச்சத்தோடு ஏல் என்று வந்தது. ]

"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை." [ வினா. 142. ]
[ நீ + ப்ப் + இன். = நீப்பின். ப்ப் எ-து செய்யும் விகாரம். ]

"ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர்,
இழுக்கத்தின் ஏதம் படுபாக்கறிந்து."
[ படு + பாக்கு = படுபாக்கு. ]

"நன்றி ஒருவற்குச் செய்தக்கால்."
[ செய்தக்கால் = செய்தால். இதிற் செய்த எ-து பெயர் எச்சம் ஆதலால் செய்தகால் எ-து, ககரம் இரட்டிக்காமல் இருக்கவேண்டும். ]

"குன்றிக்கால்" = குன்றியக்கால். [ செய்யுள் விகாரம். ]

"ஏதிலார் குற்றம் போற் றங்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.—"
[ காண் + கு + இல். 108. ]

"வாலுயர் நோற்றம எவன் செய்யுந் தன்னெஞ்சந்
தான் அறி குற்றப்படின்.—"
[ படு + இன் = படின். ]

"வருந்தித் தாங்கற்றன ஓம்பாது மற்றும்
பரிந்து சிலசற்பான் றொடங்கல், கருந்தனங்
கைத்தலத்த உய்த்தச் சொரிந்திட்ட ரிப்பரித்தாங்
கெய்த்றப் பொருள் செய்திடல்."

"ஆடன் மான் றேர்க்குழாம் அவனி காணிய
வீடெனும் உலகின் வீழ் விமானம் போன்றன."

(௫.) க்கிறு என்னும் நிகழ்கால்த்து இடைநிலையைப் பெற்ற வினைப்பகுதியோடுக்க என்னும் விகுதியையும், கிறு என்னும் நிகழ்காலத்து இடைநிலையைப் பெற்ற வினைப்பகுதியோடு அ என்னும் விகுதியையுஞ் சேர்த்தால், முக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சமாம்.

(F.) பின் முன் கால் கடை வழி இடத்தென்னும்
அன்ன மரபிற் காலங் கண்ணிய
என்னக் கிளவியும் அவற்றியல்பெனவே.— [தொல்.]

| (உ-ம்.) | பகுதி. | விகுதி. | முக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சம். |
|---|---|---|---|
| | படி | க்க | படிக்க. |
| | அனுப்பு | அ | அனுப்ப. |
| | செய் | அ | செய்ய. |

☞ (க.) செய்யுளில், செய்க, செய்குப, நடப்ப எனவும் இவைபோல்வனவும் வரும்.
(உ.) வினைஎச்சம் வினைக்குறை எனவும் படும்.

## அப்பியாசம். (86. ௲.)

"தந்தை மகற் காற்று நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்."
[இரு + ப்ப் + அ = இருக்க.]

"விருப்பிலார் இல்லத்து வேறிருந் துண்ணும்
வெருக்குக் கண் வெங்கருனை வேம்பாம் ..."



## 87. RELATIVE VERBAL FORMS, OR ADJECTIVE PARTICIPLES.

அஎ.—பெயர் எச்சம் என்பன எவை?

பால் காட்டும் முற்று விகுதிகளைப் பெறாமல் அ, உம் என்னும் எச்சவிகுதிகளைப் பெற்றுப், பெயர்ச்சொல்லைக் கொண்டு முடியும் எச்சம் பெயரெச்சம் ஆம். பெயரெச்சங்கள் மூவகையாம். இவற்றுள்,

(க.) வினைப்பகுதியானது போனகாலத்து இடைநிலையோடு அகர விகுதியையும் பெற்றால் போனகாலத்துப் பெயரெச்சம் ஆம்.

[நன்னூல் 340.]

| (உ-ம்.) | பகுதி. | இடைநிலை. | விகுதி. | போனகாலத்துப் பெயரெச்சம். |
|---|---|---|---|---|
| | படி | த்த் | அ | படித்த. |
| | செய் | த் | அ | செய்த. |
| | அனுப்பு | இன் | அ | அனுப்பின. / அனுப்பிய. |

(க.) நடத்திய, தழீஇய என்பவை போல்வனவும் வரும்.

(உ.) ஆகின என்பது ஆயின, ஆன, ஆகிய, ஆய எனவும் வரும்.
போகின, போயின, போன என்றும் வரும்.

(உ.) வினைப்பகுதியானது நிகழ்காலத்து இடைநிலையோடு அகரவிகுதியையும் பெற்றால் நிகழ்காலத்துப் பெயரெச்சமாம்.

| (உ-ம்.) | பகுதி. | இடைநிலை. | விகுதி. | நிகழ்காலத்துப் பெயரெச்சம். |
|---|---|---|---|---|
| | படி | க்கிறு | அ | படிக்கிற. |
| | செய் | கிறு | அ | செய்கிற. |

(௩.) வருங்காலத்து அஃறிணைப்படர்க்கை வினைமுற்று வருங்காலத்துப் பெயரெச்சமாகவும் வழங்கப்படும்.

(உ-ம்.) படிக்கும்.
செய்யும்.

☞ ஆகும் என்பது ஆம் எனவும், போகும் என்பது போம் எனவும், உலாவும் என்பது உலாம் எனவும் வரும்.

[ஒரூஉம், சாம். நன்னூல் 341.]

## அப்பியாசம். (87.)

"தொழுத கையினன்."
[தொழு, தொழுதேன், தொழுத.]

"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ' மழை."
[துப்பு = நன்மை, உணவு. ஆய = ஆன.]

"நுணங்கிய கேள்வியர் அல்லார்
வணங்கிய வாயினர் ஆதல் அரிது."

[நுணங்கு, + இன் + அ. வணங்கு, + இன் + அ. னகரம் யகரம் ஆனது செய்யுள் விகாரம்.]

"உலகந் தழீ இய தொட்பம்."
[தழுவு + இன் + அ + து = தழுவினது = தழீ இயது. 95.]

"விண்ணவா போய பின்னர்."
[போய = போன.]

"............அப்பாற்
போன பின் பலங்கழர்க்கும் புனித மாநதியை உற்றார்."

"...........பண்டோர்
ஆறு போகிய ஆறு போம் ஆறு போன்றதுவே."

"ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு."
[அவாவும் = அவாம்.]

"சாந்துணையுந் தீயனவே செய்திடினுந் தாம் அவரை
ஆந்துணையுங் காப்பர் அறிவுடையோர்."

[ஆ + கு + உம் = ஆகும், ஆம்.
சா + கு + உம் = சாகும், சாம். } செய்யுள் விகாரம்]

"வேம் என்னெஞ்சம்"
[வேம் = வேவும், வேகும்.]

"பொன்றும் போதுற்றதுற்றது போதுமே."

**88.** NEGATIVE VERBS. (G.)

௮௮.—எதிர்மறையாவதென்ன ?

வினையின் தொழிலை மறுக்கிற வினைச்சொல் எதிர்மறை என்னப்படும். இது ஆ, இல், அல் முதலிய விகுதிகளைக் கொண்டு முடியும்.



**89.** FINITE NEGATIVE VERBS.

௮௯.—எதிர்மறைவினைமுற்று எவ்வாறு வரும்?

வினைப்பகுதியும் விகுதியும் இடைநிலையின்றிப் புணர்வது எதிர்மறைவினை முற்றும். இது முக்காலத்துக்கும் பொதுவாம். (H.)

[ நன்னூல் 3[illegible]. ]

| பகுதி. | விகுதி. | | முக்காலத்துக்கும் பொதுவான எதிர்மறை. | | |
|---|---|---|---|---|---|
| செய். படி. நட. பாடு. | என், | ஒருமை. | செய்யேன். படியேன். | நடவேன். | பாடேன். |
| | ஆய், | | செய்யாய். படியாய். | நடவாய். | பாடாய். |
| | ஆன், | | செய்யான். படியான். | நடவான். | பாடான். |
| | ஆள், | | செய்யாள். படியாள். | நடவாள். | பாடாள். |
| | ஆது, ஆ, | | செய்யாது. படியாது. செய்யா. படியா. | நடவாது. நடவா. | பாடாது. பாடா. |
| செய். படி. நட. பாடு. | ஓம், எம், | பன்மை. | செய்யோம். படியோம், படியேம். நடவோம், நடவேம். பாடோம். | | |
| | ஈர், ஈர்கள், | | செய்யீர். படியீர். செய்யீர்கள். படியீர்கள். | நடவீர். நடவீர்கள். | பாடீர், பாடீர்கள். |
| | ஆர், ஆர்கள், | | செய்யார். படியார். செய்யார்கள். படியார்கள். | நடவார். நடவார்கள். | பாடார். பாடார்கள். |
| | ஆ, | | செய்யா. படியா. | நடவா. | பாடா. |

(G.) எதிர்மறைக் கிடைநிலை இன்றிஎன், எம், ஓம்,
ஆய், ஈர், ஆன், ஆள், ஆர், ஆ, அது, அ
ஐம்பான் மூவிடத் தாகும் என்ப. [தொன்னூல்.]

(H.) நிலைமொழி மறையே, வருமொழி மறையே,
இருமொழி மறையே, எனமூ வகை மறை. [இலக்கணக்கொத்து.]
(உ-ம்.) உண்ணாது வந்தான். உண்டு வாரான். உண்ணாது வாரான.

"விதிச்சொன் மறைப்பொருள் ஆகி வருநவும்,
மறைச்சொன் விதிப்பொருள் ஆகி வருநவும்,
விதிச்சொலின் முதனிலை மறைப்பொருள் பெறுநவும்,
மறைச்சொலின் முதனிலை விதிப்பொருள் பெறுநவும்
உள என மொழிகுவர் ஒரு புடை பெயரே.—"

# நன்னூல்.

## I. எழுத்ததிகாரத்தில்

### (I) எழுத்தியல்.

**56.** AN INVOCATION.

ருசு. பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவன் எழுத்தே.

**57.** DIVISIONS OF ORTHOGRAPHY.

எழுத்திலக்கணம் இத்துணைத்தென்பது.

ருஎ. எண்,பெயர், முறை,பிறப் புருவ மாத்திரை,
முதல்,ஈ றிடைநிலை, போலி, என்று
பதம்,புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

[இப்பன்னிரு பகுதியினையும் உடைத்து அவ்வெழுத்திலக்கணம்.]

க. § எண்.

**58.** LETTERS.

எழுத்தின்னதென்பது.

ருஅ. மொழிமுதற் காரணம் ஆம்அணுத் திரள் ஒலி
எழுத்தது முதல்சார் பென இரு வகைத்தே.

[வினா 11.]

[மொழிக்கு முதற்காரணமாய் அணுத்திரளின் காரியமாய் வரும் ஒலி யாவது எழுத்து; அது முதல்எழுத்தென்றும், சார்பெழுத்தென்றும், இரு வகையினை உடைத்து.]

**59.** 30 PRIMARY LETTERS. VOWELS AND CONSONANTS.

முதலெழுத்தின்விரி.

ருகூ. உயிரும் உடம்புமா' முப்பது' முதலே.

[வி௵ 11.]

[உயிரும் உடம்பும் ஆகும் முப்பதெழுத்தும் முதல் எழுத்தாம்.]

**60.** 10 KINDS OF SECONDARY LETTERS.

சார்பெழுத்தின்விரி.

கூ0. உயிர்மெய், ஆய்தம், உயிர்அள' பொற்றள
பஃகிய இ, உ, ஐ, ஔ, மஃகான்,
தனிநிலை, பத்தும் சார்பெழுத்' தாகும்.

[இப்பத்தும் சார்பெழுத்தாம்.]

**61.** 369 SECONDARY LETTERS.

கூக. உயிர்மெய் இரட்டுநூற்' றெட்டுயர்' ஆய்தம்
எட்டுயிர் அளபெழு' மூன்றொற்' றளபெடை
ஆறேழ்; அஃகும் இம்முப் பானேழ்;
உகரம் ஆறு' றைகான் மூன்றே;
ஔகான் ஒன்றே; மஃகான் மூன்றே;
ஆய்தம் இரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி' முந்நூற்' றெழுபான் என்ப.

[உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு, குறுகாத ஆய்தம் எட்டு, உயிர்அளபெடை இருபத்தொன்று, ஒற்றளபெடை நாற்பத்திரண்டு, குற்றியல் இகர முப்பத்தேழு, குற்றியல் உகர முப்பத்தாறு, ஐகாரக்குறுக்க மூன்று, ஔகாரக்குறுக்கம் ஒன்று, மகரக்குறுக்க மூன்று, ஆய்தக்குறுக்கம் இரண்டுடனே, சார்பெழுத்தினது மிகுந்த விரி முந்நூற்றறுபத்தொன்பதாம் என்று சொல்லுவர் புலவர்.]

## உ. § பெயர்.

**62.** NOUNS: ARBITRARY AND APPELLATIVE: COMMON AND PROPER.

[பெயர்க்கெல்லாம் பொது இலக்கணம்.]

௬௨. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

[விஞ 48.]

[இடுகுறிப் பெயரும், காரணப் பெயரும் ஆகிய இரண்டும் பலபொருட்குப் பொதுப்பெயர்ஆயும், ஒருபொருட்குச் சிறப்புப்பெயர்ஆயும், வருவனஆம்.]

(உ-ம்.) மரம் ... ... ... இடுகுறிப் பொதுப்பெயர்.
பனை ... ... ... இடுகுறிச் சிறப்புப்பெயர்.
அணி... ... ... காரணப் பொதுப்பெயர்.
முடி ... ... ... காரணச் சிறப்புப்பெயர்.
மறவன், பங்கயம், முள்ளி. ... ... காரணஇடுகுறிப்பெயர்.

**63.** VOWELS 12. CONSONANTS 18.

௬௩. அம்முதல் ஈராறு ஆவி; கம்முதல்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.

[விஞ 11.]

[அகரமுதல் ஔகாரம் ஈறுகக் கிடந்த பன்னிரண்டனையும் ஆவி என்றும்; ககரமுதல் னகரம் ஈறுகக் கிடந்த பதினெட்டனையும் மெய் என்றும் நூல்களால் சொன்னர் அறிவுடையோர்.]

**64.** SHORT VOWELS.

௬௪. அவற்றுள்,—அ,இ,உ,எ, ஒக்குறில் ஐந்தே.

[விஞ 3.]

[ஆவி மெய்என்றவற்றுள், இவ்வைந்தும் குற்றெழுத்தாம்.]

**65.** LONG VOWELS.

௬௫. ஆ,ஈ,ஊ,ஏ, ஐ,ஓ,ஔ, நெடில்.

[விஞ 4.]

[இவ்வேழு நெட்டெழுத்தாம்.]

## 66. DEMONSTRATIVE LETTERS.

சுசு. அ,இ,உம்முதல் தனிவரில், சுட்டே.

[வினா 5.]

[இம்மூன்றெழுத்தும் மொழிக்குப் புறத்தும், அகத்தும், முதற்கண் தனித்துச் சுட்டுப்பொருள் உணர்த்தவரிற் சுட்டெழுத்தாம்.]

(உ-ம்.) அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன், } புறத்தும்; { அவன், இவன், உவன், } அகத்தும் வந்தன.

☞ அவன் என்பதன்கண் அகரம் அறம் என்பதின்கண் அகரம்போலப் பின் எழுத்துக்களோடு தொடர்ந்து நின்று ஒருபொருளை உணர்த்தாது வேறுநின்று சுட்டுப்பொருளை உணர்த்தலின் அகத்துவரும் இதனையுந் "தனிவரின்" என்றார்.

## 67. INTERROGATIVE LETTERS.

சுஎ. எய் யா முதலும்; ஆ,ஓ, ஈற்றும்;
ஏ,இரு வழியும் வினா ஆகும்மே.

[வினா 6.]

[புறத்தும், அகத்தும், மொழிமுதற்கண் எகரமும், யாவும்; ஈற்றின்கண் ஆகாரமும், ஓகாரமும்; இவ்விரண்டிடத்தினும் ஏகாரமும் தனித்து வினாப் பொருள் உணர்த்தவரின் வினா எழுத்தாம்.]

(உ-ம்.) எக்கொற்றன், யாவன், } ... ... முதற்கண்வந்தன.
கொற்றனா, கொற்றனோ, ... ஈற்றின்கண்வந்தன.
ஏவன், கொற்றனே, ... ... ஈரிடத்தும்வந்தன.

## 68. STRONG OF HARD CONSONANTS. [TENUES OR SURD.]

சுஅ. வல்லினம் க,ச,ட, த,ப,ற, என ஆறே.

[வினா 8.]

[இவ்வாறும் வல்லினம் ஆம்.]

## 69. WEAK CONSONANTS. [NASALS.]

சுகூ. மெல்லினம் ங,ஞ,ண, ந,ம,ன, என ஆறே.

[வினா 9.]

[இவ்வாறும் மெல்லினம் ஆம்.]

**70.** MIDDLE CONSONANTS. [LIQUIDS.]

௭0. இடையினம் ய,ர,ல, வ,ழ,ள, எனஆறே.
[வினு 10.]

[இவ்வாறும் இடையினம் ஆம்.]

**71.** PRIMARY LETTERS TAKEN IN PAIRS.

௭௧. ஐ,ஔ, இ,உச் செறிய, முதல்எழுத்
திவ்விரண் டோர்இனம் ஆய்வரல் முறையே.

[இனம்இல்லாத ஐகார ஔகாரங்கள் ஈகார ஊகாரங்கட்கினம் ஆகிய இகர உகரங்களைத் தமக்கும் இனம்ஆகப்பொருந்த முதல் எழுத்துகள் இரண்டிரண்டு ஒரினமாய்வருதல் முறை; ஆதலால் அவை இன எழுத்தென்றும் பெயரவாம்.]

(உ-ம்.) அ,ஆ; இ,ஈ; உ,ஊ; எ,ஏ; ஐஇ; ஒ,ஓ; ஔ,உ;
க,ங; ச,ஞ; ட,ண; த,ந; ப,ம; ய,ர; ல,வ; ழ,ள; ற,ன;
என இரண்டிரண்டோரினமாய்வந்தது காண்க.

**72.** THE GROUNDS OF THIS ARRANGEMENT IN PAIRS.

[இனம் என்றதற்குக் காரணம்.]

௭௨. தான முயற்சி அளவு, பொருள்,வடி
வானஒன் றுதிஓர் புடைஒப் பினமே.

[தானம் முதலிய இவற்றுள் ஒன்று முதலாக ஒருபுடை ஒத்தலால் இனம் ஆம்.]

(உ-ம்.) அ,ஆ என்பன இரண்டிற்கும் தானம், கண்டம் [௭௫];
முயற்சி, அங்காத்தல் [௭௬];
குறிலினது விகாரமே நெடில் ஆதலால் பொருள் ஒன்று;
வடிவு அ, ஆ.
இவை மாத்திரையில் மாத்திரம் ஒத்திரா.

௩. § முறை.

**73.** WHY THE ALPHABET IS ARRANGED AS IT IS.

௭௩. சிறப்பினும், இனத்தினும், செறிந்தீண் டம்முதல்
நடத்தல் தானே முறைஆ கும்மே.

[சிறப்பினானும், இனத்தினானும் பொருந்தி இவ்வுலகத்து அகரமுதலாக வழங்குதல் தானே எழுத்தினது முறைஆம்.]

(உ-ம்.) குறிலினதுவிகாரம் நெடில், ஆதலால் குறில்முன் நிற்பது சிறப்பினால்.
வலியோர் மெலியோர்க்கு முன்நிற்றல்போல வல்லெழுத்து முன் நிற்பதுசிறப்பினால்.
நெடிலும் மெல்லெழுத்தும் இனமாய், பின்நிற்பது, இனத்தினால்.

---

## ௪. § பிறப்பு.

**74. THE PRODUCTION OF LETTER-SOUNDS.**

௭௪. நிறைஉயிர் முயற்சியின் உள்வளி துரப்ப,
எழும்அணுத் திரள்உரம், கண்டம், உச்சி,
மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்,
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.

[ஒலிஎழுத்தாகிய காரியத்திற்கு வேண்டுங்காரணங்களின் ஒரு ஆற்றானும் குறைவின்றி நிறைந்த உயிரினது முயற்சியால் உண்ணின்ற வளி எழுப்ப, எழுஞ்செவிப்புலன்ஆம் அணுத்திரள் உரம்முதலியநான்கிடத்தையும் பொருந்தி, இதழ்முதலிய நான்கின்தொழில்களால் வெவ்வேறெழுத்தாகிய ஒலிகளாய்த் தோன்றுதல் அவற்றின் பிறப்பாம்.]

---

**75. VOWELS AND LIQUIDS FROM THE THROAT; NASALS THE NOSE; TENUES THE CHEST.**

[முதலெழுத்துகளுக்கு இடம்.]

௭௫. அவ்வழி,—ஆவி இடைமை இடமிட றாகும்;
மேவு மென்மை மூக் குரம் பெறும் வன்மை.

[மேற்கூறிய நெறியாற் பிறக்குங்கால் ஆவி, இடையினம், என்னும் இருவகை எழுத்தினதிடம் மிடறாம்; மெல்இனம்மூக்கை இடம்ஆகப் பொருந்தும்; வல்லினம் நெஞ்சை இடம்ஆகப் பெறும்.]

---

**76. அ, ஆ BY THE MERE OPENING OF THE MOUTH.**

௭௬. அவற்றுள்,—முயற்சியுள் அ, ஆ அங்காப் புடைய.

[மேல்இடம் வகுக்கப்பட்ட முதல் எழுத்துகளுள் அகர ஆகாரங்கள் நால்வகை முயற்சியுள் அண்ணத்தின் தொழிலாகிய அங்காத்தலை உடைய வாய்ப் பிறக்கும்.]

---

**77.** இ,ஈ,எ,ஏ,ஐ HOW PRONOUNCED.

[முயற்சி.]

எஎ. இ,ஈ,எ,ஏ, ஐ,அங்காப்போ
டண்பல் முதனா விளிம்புற வருமே.

[இவ்வைந்தெழுத்தும் அங்காப்புடனே முன்னம்பல்லை அடிநாவிளிம்பு பொருந்தப் பிறக்கும்.]

---

**78.** உ, ஊ, ஒ, ஓ, ஔ BY THE LIPS.

[முயற்சி.]

எஅ. உ,ஊ,ஒ,ஓ, ஔ,இதழ் குவிவே.

[இவ்வைந்தெழுத்தும் பிறத்தற்கேதுவாகிய முயற்சி இதழ்குவிவாம்.]

---

**79.** க,ங; ச,ஞ; ட,ண HOW PRONOUNCED.

எகூ. க,ங,வும், ச,ஞ,வும், ட,ண,வு முதல் இடை
நுனிநா அண்ணம் உற முறை வருமே.

[சகச. சூத்திரங்காண்க.]

[கவ்வும், ஙவ்வும், முதல்நா முதல்அண்ணத்தையும்; சவ்வும், ஞவ்வும், இடைநா இடைஅண்ணத்தையும்; டவ்வும், ணவ்வும், நுனிநா நுனிஅண்ணத்தையும் பொருந்த இம்முறையே பிறக்கும்.]

---

**80.** த,ந DENTALS.

அ௦. அண்பல் அடி,நா முடிஉறத் த,ந,வரும்.

[அண்பல்அடியை நாநுனிபொருந்தத் தவ்வும் நவ்வும் பிறக்கும்.]

**81.** ப,ம, LABIALS.

அக. மீகீழ் இதழுறப் பம்மப் பிறக்கும்.

[மேல்இதழுங் கீழ்இதழும் பொருந்தப் பவ்வும் மவ்வும் பிறக்கும்.]



**82.** ய HOW FORMED.

அஉ. அடிநா அடிஅணம் உறயத் தோன்றும்.

[அடிநா அடிஅண்ணத்தைப் பொருந்த யகரம் பிறக்கும்.]



**83.** ர,ழ LINGUALS.

அ௩. அண்ண நுனிநா வருட ர,ழ,வரும்.

[அண்ணத்தை நுனிநாத்தடவ ரவ்வும், ழவ்வும், பிறக்கும்.]



**84.** ல,ள HOW PRONOUNCED.

அச. அண்பல் முதலும் அண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி, ஒற்றவும், வருடவும்,
லகார ளகாரமாய் இரண்டும் பிறக்கும்.

[இதுவும் நிரன்நிறைப்பொருள். (சகச) காண்க.]

[அண்பல்முதலை நாவிளிம்பு வீங்கி ஒற்ற லகாரம் ஆகியும், அண்ணத்தை நாவிளிம்புவீங்கி வருட ளகாரம்ஆகியும், இவ்விரண்டெழுத்தும்பிறக்கும்.]



**85.** வ HOW PRONOUNCED.

அரு. மேற்பல் இதழுற மேவிடும் வவ்வே.

[மேல்வாய்பல்லைக் கீழ்வாய்உதடு பொருந்த வகரம் பிறக்கும்.]

**86.** ற,ன HOW PRONOUNCED.

அசு. அண்ணம் நுனிநா நனிஉறில் ற,ன,வரும்.

[அண்ணத்தை நுனிநா மிகப்பொருந்தில் றவ்வும், னவ்வும், பிறக்கும்.]

**87.** THE PRONUNCIATION OF ஃ AND OF SECONDARY LETTERS.

[சார்பு எழுத்திற்கு இடம்முயற்சி.]

அஎ. ஆய்தக் கிடம்தலை; அங்கா முயற்சி.
சார்பெழுத் தேனவும் தம்முதல் அனைய.

[ஆய்தம் பிறத்தற்கு இடம்தலை; முயற்சிஅங்காத்தலாம்; ஒழிந்தசார்பெழுத்துகளும் இடமுயற்சிகள் தம்முதலெழுத்துகளோடு ஒப்பனவாய்ப்பிறக்கும்.]

**88.** THOUGH GENERAL RULES ARE GIVEN EACH LETTER HAS ITS OWN PRONUNCIATION.

[புறனடை.]

அஅ. எடுத்தல், படுத்தல், நலிதல், உழப்பின்
திரிபுந் தத்தமில் சிறிதுள ஆகும்.

[பலஎழுத்திற்குப் பிறப்பொன்றாகச் சொல்லப்பட்டனவேனும், எடுத்தல் படுத்தல் நலிதல் என்னும் எழுத்திற்குரிய ஒலிமுயற்சியான் ஒன்றற்கொன்று பிறப்புவேறுபாடுகளும் அவ்வவற்றின்கண் சிறிது சிறிது உளவாம்.]

**89.** VOWEL CONSONANTS.

[உயிர்மெய் சார்ந்துவருதல்.]

அகூ. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்,
ஏனை உயிரோ டுருபு திரிந்தும்,
உயிர்அள வாய்,அதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடும் ஒற்று முன் னாய்வரும் உயிர்மெய்.
[வினா 13.]

[மெய் புள்ளியை விட்டு அகரத்தோடுகூடியவழி விட்ட உருவே உருவாகியும், ஒழிந்த உயிர்களோடு கூடியவழி உருவுவேறுபட்டும் தன்மாத்திரை தோன்றாது உயிர்மாத்திரையே மாத்திரையாய் தன்வரிவடிவினதுவிகாரவடிவே வடிவாய், உயிர்வடிவை ஒழித்து, மெய் உயிர் என்னும் பெயர் ஆகிய இரண்டிடத்தும் பிறந்த உயிர்மெய் என்னும் பெயருடனே, ஒற்றொலிமுன்னும் உயிர் ஒலிபின்னும் ஆகிவரும் உயிர்மெய்எழுத்து.]

---

**90.** AYTHAM.

௯0. குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் ஆறன் மிசைத்தே.
[வி௲ 12.]

[புள்ளிவடிவினதாய் ஆய்தம் குற்றெழுத்தின் முன்னதாய் உயிரோடு கூடிய வல் எழுத்து ஆறன் மேலதாய் வரும்.]

(உ-ம்.) எஃகு, கஃசு, கஃடு, இருபஃது, அஃபு, கஃறு
[வல்லினவகையால் ஒருமொழிக் கண்வந்தது.]
அஃகடிய, அஃறிணை. [புணர்ச்சி விகாரத்தால் வநதது.]
விலஃஃகி வீங்கிருள் ஓட்டுமே, மாதர்
இலஃஃகு முத்தின் இனம்.
[செய்யுள் விகாரத்தால்வந்தது.]
— ஆக முற்றாய்தம் எட்டு. [61.]

---

**91.** PROLONGATION OF THE SOUND OF VOWELS.

[உயிர் அளபெடை.]

௯௧. இசைகெடில் மொழிமுதல், இடை,கடை நிலைநெடில்
அளபெழும்; அவற்றவற் றினக்குறில் குறியே.
[வி௲ 14.]

[செய்யுட்கண் இசைகுன்றில் மொழிமுதலினும், இடையினும், கடையினும்; நின்ற நெட்டெழுத்து எழும் அவ்விசை நிறைக்கத்தத்த மாத்திரையின் மிக்கொலிக்கும்; அவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு அவற்றின்பின் அவற்றிற்கினம் ஆகிய குற்றெழுத்துகள் வரிவடிவின்கண் அறிகுறியாய் வரும்.]

(உ-ம்.) 1. ஆஅகை, ஈஇகை, ஊஉகம், பேஎகன், ஐஇயல், தோஒகை, மௌஉகல்.

[முதனிலை அளபெடை.]

2. படாஅகை, பரீஇகம், கழூஉமணி, பரேஎரம், வைஇயம்,
பரோஒரம், மனௌஉகம்.

[இவை இடைநிலை அளபெடை.]

3. கடாஅ, குரீஇ, குழூஉ, மிலேஎ, கடைஇ, அரோஒ, அரௌஉ.

[இவை கடைநிலை அளபெடை; ஆக இடவகையால் உயிரளபெடை இருபத்தொன்று.] [61]

4. குரீஇ, ஆடூஉ, மகடூஉ.

[இவை இயற்கை அளபெடை; மற்றவை செய்கை அளபெடை.]



**92.** THE PROLONGATION OF THE SOUND OF CERTAIN CONSONANTS.

[ஒற்றளபெடை.]

௯௨. ங,ஞ,ண, ந,ம,ன, வ,ய,ல,ள, ஆய்தம்,
அளபாம் குறில்இணை, குறிற்கீழ், இடைகடை;
மிகலே அவற்றின் குறிஆம், வேறே.
[வின 14.]

[செய்யுட்கண் இசைகுன்றின் குறில் இணைக்கீழும், குறிற்கீழுமாய், மொழிஇடையினும் ஈற்றினும் நின்ற இப்பத்தொற்றும், ஆய்தமும், அவ் வோசை நிறைக்கத் தம் மாத்திரையின் மிக்கொலிக்கும்; அவ்வாறு அளபெடுத்தன அறிதற்கு அவற்றின்பின் அவ்வெழுத்துகளே வரிவடிவின் கண் வேறு அறிகுறியாய் வரும்.]

(உ.-ம்.) 1. அரங்ங்கம், முரஞ்ஞ்சு, முரண்ண்டு, பருந்ந்து, அரும்ம்பு, மூன்ன்று, சூல்ல்கள், திரள்ள்கள், விஃஃகி.

[குறிலிணைக்கீழ் மொழி இடையில்.]

2. மங்ங்கலம், மஞ்ஞ்சு, மண்ண்ணு, பந்ந்து, எஃஃகு.

[குறிற்கீழ் மொழி இடை.]

3. பாண்ண், மரம்ம், கலன்ன், குரல்ல், திரள்ள்.

[குறிலிணைக்கீழ் மொழியீற்றில்.]

4. மண்ண், அம்ம், பொன்ன், கல்ல், கொள்ள்.

[குறிற்கீழ் மொழியீற்றில்.]

ஆய்தம் மொழியின் இறுதியில் குறிலிணைக்கீழுங் குறிற்கீழும்வாரா; அவ்விரண்டையும் விலக்கி (4×11=44—2=42.) ஒற்றளபெடை நாற்பத்திரண்டாம். [61.]

## 93. SHORTENED இ.

[குற்றியல் இகரம்.]

௯௩. யகரம் வரக்குறள் உத் திரி இகரமும்,
அசைச்சொல் மியாவின் இகரமும் குறிய.

[யகரம் வருமொழிக்கு முதல் ஆகிவர நிலைமொழிக்கு ஈறுகிநின்ற குற்றியல் உகரம் திரிந்த இகரமும், மியா என்னும் அசைச்சொல்லின்கண் இகரமும் குற்றியல் இகரங்கள்ஆம்.]

(உ-ம்.) நாகு + யாது=நாகியாது முதல்.
கேண்மியா, சென்மியா.

[குற்றியல் உகரம் முப்பத்தாறினலும், அசைச்சொல் மியாவினலும் குற்றியல் இகரம் முப்பத்தேழாம்.] (61.)

## 94. SHORTENED உ.

௯௪. நெடிலோ டாய்தம் உயிர்,வலி,மெலி, இடை,
தொடர்மொழி இறுதி வன்மைஊர் உகரம்
அஃகும்; பிறமேல் தொடரவும் பெறுமே.

[தனிநெடில் ஏழுடனே, ஆய்தம் ஒன்றும், மொழிஇடை ஈறுகளின் வரப்பெறாத ஔகாரம் ஒழித்து ஒழிந்த உயிர்பதினொன்றும், வல்லெழுத்தாறும், மெல்லெழுத்தாறும், வல்லெழுத்துகளோடு தொடராதவகரம் ஒழித்து ஒழிந்தஇடை எழுத்தைந்தும், ஆகிய (முப்பத்தாறு) எழுத்தினுள் யாதானும் ஒன்று ஈற்றுக்கு அயல் எழுத்தாய்த்தொடரப்பட்டு மொழிஇருதிக்கண் வல்எழுத்துகளுள் யாதானும் ஒன்று பற்றுக்கோடாக அதனை ஊர்ந்து வரின் அவ்வுகரம் தன்மாத்திரையிற் குறுகும்; அது தன்மாத்திரையில் குறுகுதற்கும் மொழி நிரம்புதற்கும் காரணம்; இவ்வோரெழுத்துத் தொடர் தன்மாத்திரையின் அமையாது பிற எழுத்துகளுள் ஒன்றும் பலவும் மேலே தொடரவும் பெறும்.]

(உ-ம்.) நாகு, ஆசு, காடு, காது, காபு, காறு. ... ... ... ... நெடிற்றொடர். ௬.
எஃகு, கஃசு, கஃடு, இருபஃது, அஃபு, கஃறு. ... ... ஆய்தத்தொடர். ௬.
வரகு, பலாசு, முருடு, எருது, துரபு, கயிறு. ... ... ... உயிர்த்தொடர். ௬.
சுக்கு, கச்சு, கட்டு, கத்து, கப்பு, கற்று. ... ... ... வன்றொடர். ௬.
கங்கு, பஞ்சு, வண்டு, பந்து, அம்பு, கன்று. ... ... ... மென்றொடர். ௬.
ஆய்கு, ஆய்சு, ஆய்து, ஆய்பு. ... ... ... ... ... இடைத்தொடர். ௪.

ஆக, குற்றியல் உகரம் முப்பத்துநான்காகும். முப்பத்தாறு என்பது பொதுப்படக்கூறினர். (௬௧.)

**95.** SHORTENED ஐ AND ஔ.

[ஐகார ஔகாரக் குறுக்கங்கள்.]

௯௫. தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
நையும்; ஔவு முதல் அற் றாகும்.

[ஐகாரம் தன்னைக் கருதித்தன்பெயர் கூறும் அளவில் குறுகாது; ஒழிந்த மொழிமுதல் இடைகடைஎன்னு மூன்றிடத்துமுன்னும் பின்னும் இரு மருங்கும் ஆய எழுத்தின் தொடர்பால் தன்மாத்திரையிற் குறுகும். ஔகார மும் தன்பெயர்கூறும் அளவிற்குறுகாது; ஒழிந்தமொழிமுதற்கண் பின் வரும் எழுத்தின்தொடர்பால் தன்மாத்திரையிற்குறுகும்.]

(உ-ம்.) 1. ஐப்பசி, மைப்புறம். ... ...மொழிமுதலில்.
2. இறைவன், பொறையன். ... மொழியிடையில்.
3 குவளை, திணை. ... ... ...மொழியீற்றில்
4 ஔவல்.

**96.** SHORTENED ம.

௯௬. ண, ன, முன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்.

[ணகார னகாரங்களின் ஒன்று நின்று தொடர்ந்திட, அதன்முன் வரி னும்; வகாரம் வந்து தொடர்ந்திட அதன்மேல் நிற்பினும் மகரம் தன அரைமாத்திரையிற் குறுகும்.]

(உ-ம்.) 1. மருளினும் எல்லாம் மருண்ம். 2. திசைஅறி மீகாமனும் போன்ம். 3. தரும் வளவன். } கஉ0, ௬௪௪, சூத்திரங்கள் காண்க.

**97.** SHORTENED ஃ.

[ஆய்தக்குறுக்கம்.]

௯௭. ல, ள, ஈற் றியைபின்ஆம் ஆய்தம் அஃகும்.

[லகார ளகார ஈற்றுப்புணர்ச்சியினால் வரும் "குறில் வழி ல,ள,த்தவ் வணையின் ஆய்தம் ஆகவும் பெறூஉம்," என்ற ஆய்தம் இருமருங்கும் ஆய எழுத்தின் தொடர்பால் தன்அரைமாத்திரையில் குறுகும்.]

(உ-ம்.) கல் + தீது = கஃறீது.
முள் + தீது = முஃடீது.
[உஉஅ. சூத்திரங்காண்க.]

## ரு. § உருவம்.

**98.** எ AND ஒ AS WELL AS MUTE CONSONANTS SOMETIMES HAVE A DOT.

கூ௭. தொல்லை வடிவின எல்லா எழுத்தும்; ஆண்

டெய்தும் எகரம்ஒ காரமெய் புள்ளி.

[எல்லா எழுத்தும் பலவேறுவகைப்பட வளைந்து வழங்கும். பழைய வடிவினை உடையவாம். அவ்வடிவினவாய் வழங்கும் இடத்துத் தனித்தும் உடம்பூர்ந்தும் வரும். எகரமும், ஒகரமும், தனிமெய்களும், இயல்பாய் புள்ளியைப் பிற்காலத்தொழித்து, வளைந்து ஏகார ஓகாரங்களோடும் உயிர்மெய்களோடும் ஐயப்படவழங்கும் வழக்கினை உடையஅன்றித்துணியப்படும் தொல்லைவடிவினதுறுப்பாய் புள்ளியைப் பெறும்.]

(உ-ம்.) எ,எ; ஒ,ஒ; கெ,கே; கொ,கோ; க,க்.

---

## கா. § மாத்திரை.

**99.** QUANTITY

கூகூ. மூன்றுயிர் அளபிரண் டாநெடில்; ஒன்றே

குறிலோ டைஔக் குறுக்கம், ஒற்றள

பளைஒற் றி,உக் குறுக்கம், ஆய்தம்;

கால்குறள் மஃகான் ஆய்த மாத்திரை.

[வி௵ 16.]

[உயிர்அளபெடைக்கு மாத்திரை மூன்றாம்; நெடிலுக்கு மாத்திரை இரண்டாம்; குறிலுக்கும், ஐகாரக்குறுக்கத்திற்கும், ஔகாரக்குறுக்கத்திற்கும், ஒற்றளபெடைக்கும், தனித்தனி மாத்திரை ஒன்றாம், ஒற்றிற்கும், குற்றியல் இகரத்திற்கும், குற்றியல் உகரத்திற்கும், ஆய்தத்திற்கும், தனித்தனி மாத்திரை அரையாம்; மகரக்குறுக்கத்திற்கும், ஆய்தக்குறுக்கத்திற்கும், தனித்தனி மாத்திரை காலாம்.]

---

**100.** A MEASURE.

[மாத்திரைக்களவு.]

க00. இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை.

[மாந்தருடைய இயல்பாகவே எழும் இமைப்பொழுதும், நொடிப்பொழுதும், ஒருமாத்திரை என்னும் வரையறைப்பொழுதாம்.]

**101.** LETTERS LENGTHENED INDEFINITELY.

[புறனடை.]

௧௦௧. ஆவியும் ஒற்றும் அளபிறந் திசைத்தலும்
மேவும், இசைவிளி பண்டமாற் றாதியின்.

[முதல்சார்பனைத்தும் ஆய ஆவியும் ஒற்றும் மேற்கூறிய அளவிறந்து மிக்கொலித்தலையும் பொருந்தும் இசை விளி பண்டமாற்று முதலியவற் றின்கண்.]

(உ-ம்.) காவல் உழவர் கடுங்களத்துப் போர்வஹி
நாவலோ, ஓஒஒவென்றிசைக்கு நாள்ஓதை—மாவலவன்
கொல்யானை மேல்இருந்து கூற்றிசைத்தாற் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு.

---

ஏ. § மொழிக்கு முதலாம் எழுத்துக்கள்.

**102.** INITIAL LETTERS: GENERAL RULE.

௧௦௨. பன்னீர் உயிரும், க, ச, த, ந, ப, ம, வ, ய,
ஞ, ங, ஈர் ஐந்துயிர் மெய்யு மொழிமுதல்.

[பன்னிரண்டு உயிரும் உயிர்ஊர்ந்த இப்பத்துமெய்யு மொழிக்கு முத லாம்.]

---

**103.** WHEN வ் IS INITIAL: SPECIAL RULE.

௧௦௩. உ, ஊ, ஒ, ஓ, அலவொடு வம்முதல்.

[இந்நான்கும் அல்லாத எட்டுயிரோடும் வகரம் மொழிக்கு முதல்ஆம்.]

(உ-ம்.) வளி, வாளி, விளி, வீளி, வெளி, வேளை, வைக்கோல், வௌவால்.

---

**104.** WHEN ய் IS INITIAL: SPECIAL RULE.

௧௦௪. அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ, யம்முதல்.

[இவ்வாறுயிரோடும் யகரம் மொழிக்கு முதல் ஆம்.]

(உ-ம்.) யவனர், யானை, யுகம், யூகி, யோகம், யௌவனம்.

**105.** WHEN ஞ் IS INITIAL: SPECIAL RULE.

க0ரு. அ,ஆ எ,ஒவ்வோ டாகு' ஞம்முதல்.

[இந்நான்கு உயிரோடும் ஞகரம் மொழிக்கு முதல்ஆம்.]

(உ-ம்.) ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கல்.



**106.** WHEN ங் IS INITIAL: SPECIAL RULE.

க0சா. சுட்டியா, எகர வினாவழி அவ்வை

ஒட்டி ஙவ்வு முதல்ஆ கும்மே.

[மூன்றுசுட்டும், யாவினாவும் எகரவினாவும், ஆய இடைச்சொற்களின் பின் அகரத்தை ஒட்டி ஙவ்வும் மொழிக்கு முதல்ஆம்.]

(உ-ம்.) அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம், யாங்ஙனம்.



## அ. § மொழிக்கீறும் எழுத்துக்கள்.

**107.** FINAL LETTERS: [24.] GENERAL RULE.

கOஎ. ஆவி, ஞ,ண, ந,ம,ன, ய,ர,ல வ,ழ,ளமெய்,

சாயும் உகரநால் ஆறும் ஈறே.

[தனித்தும் ஒற்றேடும் வரும் ஆவிமுதல்ஆக இங்ஙனம் கூறிய இருபத்துநான்கெழுத்தும் மொழிக்கு ஈறும்.]

(உ-ம்.) 1.. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. சுட்டும் அ. இ, உ, வினாவும், எ, உவம உருபடியாகிய ஒ.
2. வின, பலா, கரி, கடு, சே, தை, கோ, கௌ.
3. உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வாள், அஃகு.



**108.** WHEN SHORT LETTERS AND ஔ ARE FINAL: SPECIAL RULE.

கOஅ. குற்றுயிர் அளபின் ஈறும்; எகரமெய்

யோடே லாதொந் நவ்வோ டாம்;ஔ

ககர வகரமோ டாகும் என்ப.

[குற்றுயிர் அளபெடையின்கண் வரிவடிவின் அறிகுறியாய்த் தனித்தீறும்; எகரம் மெய்யோடு ஈறாகாது; ஒகரம் நகரம் ஒன்றுடன் ஈறும், ஔகாரம் ககரவகரங்கள் இரண்டுடனும் ஈறும் என்றுசொல்லுவர் புலவர்.]

(உ-ம்.) ஆஅ, ஆஏ, நொ, கௌ, வௌ.

**109.** IN VOWEL CONSONANTS, THE CONSONANT IS FIRST.

கO௯. நின்ற நெறியே உயிர் மெய்ம்முதல் ஈறே.

[உயிர்மெய்யினது முதல்யாது, அதன் ஈறியாது எனின், ஒற்றுமுன்னும் உயிர்பின்னுமாய் ஒலித்து நின்றநெறியே மெய்அதன்முதல்ஆம், உயிர் அதன் ஈறும்]

---

௯. § மொழிக்கிடையெழுத்துக்கள்.

**110.** LETTERS COMING TOGETHER IN WORDS.

கக0 க,ச,த,ப, ஒழித்தஈர் ஏழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ர,ழ,ஒழித்தீரெட்
டாகும்; இவ்விருபான் மயக்கு மொழிஇடை
மேவும்; உயிர்மெய் மயக்கள வின்றே

[மெய்பதினெட்டனுள் க,ச,த,ப, என்னும் நான்கையும் ஒழித்த பதி ஞன்குமெய்யும் பிறமெய்களோடு கூடுங்கூட்டம் வேற்றுநிலை மெய்ம்ம யக்கம்ஆம். ரகார ழகாரம் என்னும் இரண்டனையும் ஒழித்து ஒழிந்த பதி ஞறுமெய்யும் தம்மோடு கூடுங்கூட்டம் உடனிலைமெய்ம்மயக்கம்ஆம். இவ்விரண்டுபகுதிமயக்கமும் மொழிக்கிடையேவரும் இவ்வாறு மெய்யு டன் மெய்ம்மயங்குதல் அன்றி உயிருடன்மெய்யும் மெய்யுடன்உயிரும் மாறி, உயிருமெய்யுமயங்கு மயக்கத்திற்கு வரையறை இன்று, வேண்டிய ஆறே மயங்கும்.]

(உ-ம்.) சக்கு, கச்ச, பத்து, செப்பு, சேர்தல், வாழ்தல்.
அங்ஙனம், அங்கு; மஞ்ஞை, மஞ்ச; வட்டம், வட்கல்;
வண்ணம், வண்டு; வெந்நீர், வேந்து; அம்மை, அம்பு;
வெய்யர், வெய்து; வெல்லம், வெல்க; தெவ்வர், தெவ்யாது;
கொள்ளல், கொள்க; கற்றல், கற்பு; அன்னை அன்பு.

---

**111.** ங MAY PRECEDE க், AND வ் MAY PRECEDE. ய்.

ககக. ஙம்முன் கவ்வாம்; வம்முன் யவ்வே.

[ஙகரமுன்னர்க் ககரமும்; வகரமுன்னர் யகரமும் மயங்கும்.]

(உ-ம்.) கங்கன்; தெவ்யாது.

**112.** AFTER ஞ் AND ந் MAY COME ச், த் RESPECTIVELY; AND ய் AFTER BOTH.

௧௧௨. ஞ,ந,முன் தம்இனம் யகரமோ டாகும்.

[இவ்விரண்டு மெய்முன்னரும் தமக்கினமாகிய சகர தகரங்களும், யகரமும் மயங்கும்.]

(உ-ம்.) கஞ்சன், உரிஞ்யாது, கந்தன், பொருந்யாது.



**113.** க்,ச்,ப் MAY COME AFTER ட் AND ற்.

௧௧௩. ட,ற,முன் க,ச,ப, மெய்யுடன் மயங்கும்.

[இவ்விரண்டு மெய்முன்னரும் க,ச,ப என்னுமூன்றுமெய்யும் இணங்கி மயங்கும்.]

(உ-ம்.) கட்கம், கட்சி, நுட்பம்; கற்க, கற்சிறர்,கற்ப.



**114.** AFTER ண் AND ன் MAY COME ட்,ற்,க்,ச்,ஞ்,ப்,ம்,ய் AND வ்.

௧௧௪. ண,ன,முன் இனம்க,ச, ஞ,ப,ம,ய, வவ்வரும்.

[இவ்விரண்டு மெய்முன்னரும் தமக்கு இனமாகிய டறக்களும், க,ச, ஞ,ப,ம,ய,வ, என்னும் எழுமெய்யும் மயங்கும்.]

(உ-ம்.) விண்டு, வெண்கலம், வெண்சோறு, வெண்ஞமலி, வெண்பல், வெண்மலர், மண்யாது, மண்வலிது.—
புன்றலை, புன்கண், புன்செய், புன்ஞமலி, புன்பயிர், புன்மலர், பொன்யாது, பொன்வலிது.



**115.** AFTER ம் MAY COME ப்,ய்,வ்.

௧௧௫. மம்முன் ப,ய,வ, மயங்கும் என்ப.

[மகரமெய் முன்னர்ப் பகர யகர வகரங்கள் மயங்கும் என்றுசொல்லுவர் புலவர்.]



**116.** AFTER ய்,ர் AND ழ் THE 10 INITIAL CONSONANTS MAY COME. [102.]

௧௧௬. ய,ர,ழ, முன்னர் மொழிமுதல் மெய்வரும்.

[இம்மூன்று மெய்முன்னரும் மொழிக்குமுதற்கு விதந்து கொண்ட பத்து மெய்யும் மயங்கும்.]

(உ-ம்.) வேய். வேர். வீழ். } கடிது, சிறிது, தீது, பெரிது, நீண்டது, மாண்டது, ஞான்றது, யாது, வலிது.
வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு.



**117.** AFTER ல் AND ள் ARE FOUND க்,ச்,ப்,வ்,ய்.

ககள. ல,ள,முன் க,ச,ப, வ,ய ஒன் றும்மே.

[இவ்விரண்டு மெய்முன்னரும் க,ச,ப,வ,ய என்னும் ஐந்து மெய்யும் மயங்கும்.]

(உ-ம்.) வேல். வாள். } கடிது, சிறிது, பெரிது, வலிது, யாது.



**118.** ALL EXCEPT ர் AND ழ் MAY BE FOUND DOUBLED.

ககஅ. ர,ழ அல்லன தம்முன் தாம்உட னிலையும்.

[ரகார ழகாரம் அல்லன ஆகிய வேற்று நிலை மெய்ம்மயக்கத்துள் கூறிய பன்னிரண்டுமெய்யும், உடனிலைக்கே உரிய க,ச,த,ப நான்கும், தம்முன் தாம் உடனின்று மயங்கும்.]



**119.** WHAT LETTERS FOLLOW ய், ர், ழ்.

ககக. ய,ர,ழ ஒற்றின்முன் க,ச, த,ப, ங,ஞ,ந,ம,
ஈரொற் றாம்;ர,ழத் தனிக்குறில் அணையா.

[ய,ர,ழ என்னுமூன்றொற்றும் இவற்றின்முன் மயங்கும் என விதித்த பத்தொற்றுள் இங்ஙனம் கூறிய எட்டொற்றும் தனிமெய்யும் உயிர் ஊர்ந்த மெய்யுமாய், மயங்குவன அன்றி, ஈரொற்றாயும் மயங்குவனவாம். ரகார ழகார ஒற்றும் தனிக்குறிலும் மயங்குந் தன்மையஆயினும் மொழிக்குறுப்பாக வருவதும் நிற்பதுமாய் மயங்கா.]

(உ-ம்.) வேய் வேர் வீழ் } க்குறை, ச்சிறை, ந்தலை, ப்புறம்.
வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு.
காய்ந்தனம், சேர்ந்தனம், வாழ்ந்தனம்.

**120.** ல்,ள் WHEN CHANGED IN POETRY INTO ன் AND ண் MAY BE FOLLOWED BY ம்.

உ௨௰. ல,ள மெய் திரிந்த ன,ண முன் மகாரம்
நைந்தீர் ஒற்றும், செய்யுள் உள்ளே.

[லகார ளகார ஒற்றுத் திரிந்த னகார ணகாரங்கள் முன்வரும் மகர ஒற்று முன்னர்க்கூறிய ஆறே குறுகி, அவற்றுடன் ஈரொற்றுடனிலை ஆம், செய்யுள் அகத்து.]

(உ-ம்.) திசை யறி மீகானும் போன்ம். [போலும்.]
மயிலியன் மாதர் மருண்ம். [மருளும்.]
[ம-ச. காண்க.]



**121.** WHEN LETTERS EXPRESS THEIR OWN NAMES THEY ARE NOT BOUND BY THESE RULES.

௧௨௧. தம்பெயர் மொழியில், முதலு மயக்கமும்,
இம்முறை மாறியும் இயலும் என்ப.

[எழுத்துகள் தம்பெயர்களை மொழிந்து, நிலைமொழி வருமொழி ஆகப் புணர்க்கும் இடத்தெல்லாம் மொழிமுதற்கும் இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவும் ஆகிய எல்லா எழுத்தும் முதல் ஆம்; மயக்கத்திற்கு இங்ஙனம் விதித்தனவும் விலக்கியனவும் ஆகிய எல்லா எழுத்தும் மயங்கும் என்று சொல்லுவர்புலவர்.]

(உ-ம்) "அவற்றுள் லளஃகான் முன்னர் யவ்வுந்தோன்றும்,"
[என்றதில், லகரம் மொழிக்கு முதலாகியும், அவற்றுள் என்ற சுடன் இறுதியிலே நின்ற ளகர ஒற்றேடு மயங்கியும் நின்றது.]



## ௧௦ § போலி.

**122.** FINAL ம் SOMETIMES BECOMES ன்.

௧௨௨. மகர இறுதி அஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன உளவே.
[விஞ 17.]

[பால் பகா அஃறிணைப் பெயர்களினிடத்து இறுதி மகரம் னகரத் தோடொத்து நடப்பன உள ஆம்.]

(உ-ம்.) அகம்—அகன். (இது மொழிஇறுதிப்போலி.)

### 123. அ AND ஐ INTERCHANGED.

௧௨௩. அ,ஐ முதல் இடை ஒக்கும் ச,ஞ,ய முன்.

[வி௲. 17.]

[மொழி முதலினும், இடையினும், அகர ஐகாரங்கள் வேற்றுமை இன்றி ஒத்து நடப்பன ஆம். சகர ஞகர யகரங்கட்கு முன்னர் வருமாயின்.]

(உ-ம்.) பசல்... ... ... பைசல். | அமச்சு... ... ... அமைச்சு.
மஞ்சு ... ... ...மைஞ்சு. | இலஞ்சி ... ... ...இலைஞ்சி
மயல்... ... ... மையல். | அரயர்... ... ... அரையர்
(மொழிமுதற்போலி.) | (மொழியிடைப்போலி.)

### 124. ந் CHANGED INTO ஞ்.

௧௨௪. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும், என்மரும் உளரே.

[வி௲ 17.]

[மொழியிடைக்கண் சிலவிடத்து ஐகாரத்தின் பின்னும், யகர ஒற்றின் பின்னும் இயல்பாய் வரும் நகரத்தோடு ஞகரம் உறழும், என்றுசொல்லு வாரும் உளர்.]

(உ-ம்.) செய்ந்நின்ற ... ... செய்ஞ்ஞின்ற.
ஐந்நூறு ... ... ... ஐஞ்ஞூறு.
[illegible] [இப்போலி அருகி வரும்.]

### 125. அ + இ = ஐ; அ + ய் = ஐ; அ + உ = ஔ; அ + வ = ஔ.

௧௨௫. அம்முன் இகரம் யகரம் என்றிவை
எய்தின் ஐ,ஒத் திசைக்கும்; அவ்வோ
டுவ்வும் வவ்வும் ஔ ஓர் அன்ன.

[வி௲ 17.]

[அகரத்தின் முன்னர் இகரமும் யகரமும் தம்முள்ஒத்து எய்தின் ஐ என்னு நெட்டெழுத்தொலிக்கும்; அகரத்தோடு உகரமும் வகரமும் தம்முள் ஒத்து ஒருதன்மையஆக எய்தின் ஔ என்னு நெட்டெழுத்தொலிக்கும்.]

(உ-ம்.) அஇ = ஐ.

கய் வேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய் வேல் பறியா நகும்.

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்
செவ்வியான் கேடு நினைக்கப்படும்.



**126.** THE PARTICLES ASSUMED BY LETTERS IN NAMING THEM.

௧௨௬. மெய்கள் அகரமு’ நெட்டுயிர் காரமும்,
ஐ,ஔக் கானும், இருமைக் குறில்இவ்
விரண்டொடு கரமும்ஆம் சாரியை பெறும்பிற.

[மெய்கள் அகரச்சாரியையும், நெட்டுயிர்கள் காரச்சாரியையும், அவற்றுள் ஐகார ஔகாரங்கள் காரச்சாரியையுடனே கான்சாரியையும், உயிர்க்குறிலும் உயிர்மெய்க்குறிலும் காரம், கான், என்னும் இவ்விரண்டுடனே கரச் சாரியையும் பெறும்.]

(உ-ம்.) ககரம், ஆகாரம், ஐகான், ஔகான்.
அகாரம், அஃகான், அகரம்.



**127.** LETTERS WHEN TAKEN TOGETHER IN WORDS ARE STILL SUBJECT TO THE ABOVE RULES..

௧௨௭. மொழிஆய்த் தொடரினு’ முன்அனைத் தெழுத்தே.

[இவ்வெழுத்துகள் பதமாயினும் அப்பதம் தம்மோடும் உருபோடும் புணரினும் அவற்றுற்பிறழாது, முன்னர்க்கூறிய அப்பத்திலக்கணத்தையும் உடைய ஆம்.]

எழுத்தியல் முற்றிற்று.

# நன்னூல்

## I. எழுத்ததிகாரத்தில்

### (II.) பதவியல்.

### [க.] தமிழ்மொழி ஆக்கம்.

#### க. § பதம்.

**128.** WORDS.

கஉஅ. எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருடரில்
பதம்ஆம்; அது பகாப் பதம் பகு பதம்என
இருபால் ஆகி, இயலும் என்ப.

[எழுத்துகள் தாமே ஒவ்வொன்று தனித்தும் இரண்டுமுதலாகத் தொடர்ந்தும் பிறபொருளைத் தருமாயின், அதுபதம்ஆம்; அப்பதம் பகாப்பதம் எனவும், பகுபதம் எனவும் இரண்டு பகுதியஆகி நடக்கும் என்று சொல்லுவர் புலவர்.]

**129.** WORDS OF ONE LETTER: (42.)

கஉகூ. உயிர்,மவில் ஆறும்; த,ப நவில் ஐந்தும்;
க,வ,ச,வி னாலும்; யவ்வில் ஒன்றும்;
ஆகுநெடி னொ,து, வாம்குறில் இரண்டோ
டோரெழுத் தியல்பதம் ஆறேழ் சிறப்பின.

[உயிர்வருக்கத்தும், மவ்வருக்கத்தும், அவ்வாறும்; தவ்வருக்கத்தும், பவ்வருக்கத்தும், நவ்வருக்கத்தும், ஐவ்வைந்தும்; கவ்வருக்கத்தும், வவ்வருக்கத்தும், சவ்வருக்கத்தும், நந்நான்கும்; யவ்வருக்கத்தொன்றும்; ஆகும்

நெட்டெழுத்தான் ஆகியமொழி நாற்பதும். நொவ்வும், துவ்வும், ஆகும் குற்றெழுத்தான்ஆகிய மொழிஇரண்டுடனே ஓர்எழுத்தான் ஆகிய மொழி இந்நாற்பத்திரண்டும் சிறப்பினஆம்.]

(உ-ம்.) (1.) ஆ. ஈ. ஊ. ஏ. ஐ. ஓ.
(2.) மா. மீ. மூ. மே. மை. மோ.
(3.) தா. தீ. தூ. தே. தை.
(4.) பா. பூ. பே. பை. போ.
(5.) நா. நீ. நே. நை. நோ.
(6.) கா. கூ. கை. கோ.
(7.) வா. வீ. வே. வை.
(8.) சா. சீ. சே. சோ.
(9.) யா. நொ. து.



**130.** UNCOMPOUNDED WORDS, FROM 2 TO 7 LETTERS; COMPOUNDED WORDS FROM 2 TO [illegible] LETTERS.

௧௩௦. பகாப்பதம் ஏழும், பகுபதம் ஒன்பதும்,
எழுத்தீ ருகத் தொடரும் என்ப.
[விஞ 123.]

[பகாப்பதம் இரண்டெழுத்துமுதல் ஏழெழுத்தீருகவும்; பகுபதம் இரண்டெழுத்துமுதல் ஒன்பதெழுத்தீருகவும், தொடரும் என்று சொல்லுவர் புலவர்.]

(உ-ம்.) அணி, அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத்திரட்டாதி. [பகாப்பதம்.]
கூனி, கூனன், குழையன், பொருப்பன், அம்பலவன்,
அரங்கத்தான், உத்திராடத்தான், உத்திரட்டாதியான். ... ... ... ...[பகுபதம்.]



## உ. § பகாப்பதம்.

**131.** UNCOMPOUNDED WORDS.

௧௩௧. பகுப்பால் பயன்அற் றிடுகுறி ஆகி,
முன்னே ஒன்றாய் முடிந்தியல் கின்ற
பெயர்,வினை, இடை,உரி, நான்கும் பகாப்பதம்.

[பகுபதம் போல் இதனைப் பகுத்துப்பார்க்கின் அப்பகுப்பால் பகுதி விகுதி முதலிய உறுப்பின் பயன் விளைவதின்றிக் காரணத்தால் வரும் அப்பதம்போலாது இடுகுறியாய்ப் பகுதிவிகுதிமுதலிய ஆறுறுப்பானும் பின்பு முடிக்கப்படும் அப்பதம் போலாது; படைப்புக்காலம் தொட்டு ஒன்றாய் முடிந்து நடக்கின்ற பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல், என்னும் நான்கும் பகாப்பதம் ஆம்.]

(உ-ம்.) நிலம், நீர். ... ... ... ... பெயர்ப்பகாப்பதம்.
நட, வா. ... ... ... ... வினைப்பகாப்பதம்.
மன், மற்று. ... ... ... ... இடைப்பகாப்பதம்.
உறு, கழி,தவ்வி. ... ... ... ... உரிப்பகாப்பதம்.

---

## ௩. § பகுபதம்.

**132.** COMPOUNDED WORDS.

௧௩௨. பொருள், இடம்,காலம், சினை,குணம், தொழிலின்,
வருபெயர், பொழுதுகொள் வினைபகு பதமே.

[இங்ஙனம் கூறிய பொருள் ஆதி ஆறும் காரணம் ஆக வரும் பெயர்ச் சொற்களும், தெரிநிலையாயும் குறிப்பாயும் காலத்தைக்கொள்ளும் வினைச் சொற்களும் ஆகிய இரண்டும் பகுபதம் ஆம்.]

(உ-ம்.) (1.) பொன்னன். ... ... ... பொருள்.
அகத்தன். ... ... ... ...இடம்.
ஆதிரையான். ... ... ... காலம்.
கண்ணன். ... .. ... ... சினை.
கரியன். ... ... ... ... குணம்.
ஊரணன். ... ... ... ... தொழில்.
} பெயர்ப்பகுபதம்.

(2.) நடந்தான்.
நடக்கின்றான்.
நடப்பான்.
} இவை முக்கால வினைமுற்றுப்பகுபதம்.

[முதலியவும் அன்ன.]

---

**133.** THE ELEMENTS OF COMPOUNDED WORDS

௧௩௩. பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை,
சந்தி, விகாரம், ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியும் எப்பதங்களும்.

[விஞ 123.]

[இங்ஙனம் கூறிய பகுதி முதலிய ஆறு உறுப்பினுள்ளும், இப்பதப் பொருள் அமைதிக் கேற்பன வற்றைக் கருதி அறிவுடையோரால் கூட்டி முடிப்ப எவ்வகைப்பட்ட பகுபதங்களுமுடியும்.]

## ச. § பகுதி.

**134.** THE ROOT: GENERAL RULE.

கா௩ச. தத்தம் பகாப்பதங் களே பகுதி ஆகும்.

[விஞ 76.]

[பெயர்ப்பகுபதங்களுள்ளும், வினைப்பகுபதங்களுள்ளும், தத்தம் முதனிலை ஆய பகாப்பதங்களே அவற்றின் பகுதி ஆம்.]

**135.** UNCOMPOUNDED WORDS DENOTING QUALITY: SPECIAL RULE.

[பண்புப்பகுதிகள்.]

கா௩ரு. செம்மை, சிறுமை, சேய்மை, தீமை,
வெம்மை, புதுமை, மென்மை, மேன்மை,
திண்மை, உண்மை, நுண்மை, இவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.

[விஞ 94.]

[இங்ஙனம் கூறிய பதினொன்றும் இவற்றிற்கெதிரான வெண்மை, கருமை, பொன்மை, பசுமைகளும் பெருமை அணிமை, நன்மை, தண்மை, பழமை, வன்மை, கீழ்மை, நொய்மை, இன்மை, பருமையும் இவை போல்வன பிறவும் சொல் நிலையால் பகுபதங்கள் ஆயினும் பகுதிஆய பண்புப் பொருளினின்றும் வேறுபொருள் பகுக்கப்படாத நிலைப்பதம் ஆம்.]

**136.** THESE WORDS WHEN USED AS ADJECTIVES.

கா௩சா. ஈறுபோ தல்,இடை உகரம் இய்யாதல்,
ஆதிநீ டல்,அடி அகரம்ஐ ஆதல்.
தன்ஒற் றிரட்டல்,முன் நின்றமெய் திரிதல்,
இனமிகல், இனையவும், பண்பிற் கியல்பே.

[விஞ 121.]

[மேல்செம்மை சிறுமை முதலாகத் தெரித்த வாய்பாடுகளின் இறுதி விகுதி போதலும், இடையில் நின்ற உகரம் இகரம் ஆதலும், முதல் நின்ற குறில் நெடில் ஆதலும், முதல் நின்ற அகரம் ஐகாரம் ஆதலும், இடையே தன் ஒற்று மிகுதலும், முன்பு நின்ற மெய்திரிதலும், வரும் எழுத்திற்கு இன எழுத்து மிகுதலும் இவைபோல்வன பிறவும், அப்பண்பினுக்கு இயல்பாம்.]

(உ-ம்.) (1.) நன்மை ... நல்லன். [ஈறு கெட்டது.]
(2.) சிறுமை ... சிறியன். [ஈறுகெட்டு, உகரம் இகரமாகத் திரிந்தது.]
(3.) பசுமை ... பாசி. [ஈறுகெட்டு, ஆதி நீண்டது.]
(4.) பசுமை ... பைங்கண். [இடைநின்ற உயிர்மெய்யும் மவ்விகுதியுங் கெட்டு, அகரம் ஐகாரமாகி, வரும் எழுத்திற்கு இனம் மிகுந்தது.]
(5.) வெறுமை ... வெற்றிலை. [மைவிகுதிபோய், இடையிலே ஒற்று இரட்டித்தது.]
(6.) செம்மை ... சேதாம்பல். [ஈறுகெட்டு, முதல் நீண்டு, மகர ஒற்று தகரமாய்த் திரிந்தது.]
(7.) நெடுமை ... நெடுங்காலம். [மைகெட்டு, இனம் மிகுந்தது.]



**137.** SIMPLE ROOTS AND IMPERATIVES: SPECIAL RULE.

[தெரிநிலைவினைப்பகுதிகள்.]

௧௩௭. நட, வா, மடி, சீ, விடு, கூ, வே, வை,
நொப், போ, வெள, உரிஞ், உண், பொருந், திரும், தின்,
தேய், பார், செல், வவ், வாழ், கேள், அஃகென்
றெய்திய இருபான் மூன்றும் ஈற்றவும்,
செய்என் ஏவல் வினைப்பகாப் பதமே.

[நட, வா, மடி, சீ, விடு, கூ, வே, வை, நொ, போ, வெள, உரிஞ், உண், பொருந், திரும், தின், தேய், பார், செல், வவ், வாழ், கேள், அஃகு என்று முதனிலையாய் எய்திக் கிடந்த இவ்விருபத்து மூன்றும் உயிரும் ஒற்றும் குற்றுகரமும் ஆகிய ஈற்றினை உடைய இத்தொடக்கத்து, வாய்பாடுகள் எல்லாம் செய் என்னும் ஏவலினது பகாப்பதம் ஆகிய பகுதியும், ஏனை வினையினது பகாப்பதம் ஆகிய பகுதியும் ஆம்.]



**138.** CAUSAL IMPERATIVES: SPECIAL RULE.

[ஏவல்வினை, பிறவினை.]

௧௩௮. செய்என் வினைவழி விப்பிதனி வரில்
செய்விஎன் ஏவல் இணையின்ஈர் ஏவல்.

[வி. 103.]

[மேற்கூறிய செய் என்னும் வாய்பாட்டு முதனிலைத் தனிவினையின் பின் வி, பி என்னும் இவ்விரண்டு விகுதியினுள் ஒன்று வருமாயின்

செய் என்னும் ஏவல்மேல் ஓர் ஏவலாய்ச் செய்வி என்னும் வாய்பாட்டு ஏவற் பகுதி ஆம்; அவற்றின் பின் இவ்விகுதிகள் தன்னொடும் பிறிதோடும் இணைந்து வருமாயிற் செய்விப்பி என்னும் வாய்பாட்டேவற் பகுதி ஆம்.]

(உ-ம்.) நடப்பி, வருவி.
நடப்பிப்பி, வருவிப்பி.

---

போக்கு, பாய்ச்சு, ஊட்டு, நடத்து, எழுப்பு, பயிற்று. } பிறவிகுதிகளும் வந்தன.

---

**139.** ROOTS MAY UNDERGO ALTERATIONS: SPECIAL RULE.

[புறநடை.]

௧௩௯. விளம்பிய பகுதிவே றாதலும் விதியே.

[ஏவற்பகுதி வேறாதல் போல, அதன் பின்னே விளம்பிய வினைப் பகுதி வேறாதலும் விதி ஆம் விலக்கன்று.]

---

## ௫. § விகுதி.

**140.** PERSONAL TERMINATIONS OF VERBS.

௧௪௦. அன்,ஆன்; அள்,ஆள்; அர்,ஆர், பம்,மார்;
அ,ஆ;கு, டு,து,று, என்,ஏன், அல்,அன்;
அம்,ஆம், எம்,ஏம், ஓமோ டும்மூர்
க,ட,த,ற; ஐ,ஆய், இ;மின், இர்,ஈர்;
ஈயர், க,ய;உம்; என்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினும் சிலவே.
[வி௵ 77.]

[இங்ஙனம் அன், ஆன், முதல் முப்பத்தேழ்ஆகச் சொல்லப் படுவனவும், இவைபோல்வன பிறவும், தெரிநிலை வினையின் விகுதிகள் ஆம்; பெயர் இடத்தும் இவற்றுள் சில விகுதி ஆம்.]

## ௬. § இடைநிலை.

### 141. THE MEDIAL PARTICLE OF NOUNS.

[பெயர்க்கு இடைநிலை.]

கசக. இலக்கியம் கண்டதற் கிலக்கணம் இயம்பலில்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெயர் அல்பெயர்க் கிடைநிலை எனலே.
[வினு 93.]

[அறிவுடையோரான் நியமிக்கப்படும் இலக்கியம் கண்டு, அதனுக்கு அவ்விலக்கியத்தின் அமைதியே இலக்கணமாகக் கூறலின் மேற்கூறிய பகுதியையும் விகுதியையும் பகுத்து, இடையே நின்றது யாது; அதனை வினையால் அணையும் பெயர் அல்லாத பெயர்கட்கு இடைநிலை என்று சொல்லுக.]

(உ-ம்.) அறிஞன். ... ... .. ஞ் இடைநிலை.
புலைச்சி. ... ... ... ச் இடைநிலை.

### 142. THE SIGNS OF THE PAST TENSE.

கசஉ. த,ட,ற,ஒற் றின்னே ஐம்பால் மூவிடத்
திறந்த காலம், தருந்தொழில் இடைநிலை.
[வினு 79.]

[தகர டகர றகர மெய்களும், இன், என்னும் குற்றொற்றும் ஐம்பால் மூவிடத்தும் இறந்த காலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகள் ஆம்.]

### 143. SIGNS OF THE PRESENT TENSE.

கசங. ஆநின்று, கின்று, கிறு,மூ விடத்தின்
ஐம்பா னிகழ்பொழு தறைவினை இடைநிலை.
[வினு 80.]

[ஆநின்று என்பதூஉம், கின்று என்பதூஉம், கிறு என்பதூஉம், ஐம்பால் மூவிடத்தினும் நிகழ்காலத்தைத்தரும் வினைப்பகுபத இடைநிலைகள் ஆம்.]

**144.** SIGNS OF THE FUTURE TENSE.

கசச. பவ் வ மூவிடத் தைம்பால் எதிர்பொழு
திசைவினை இடைநிலை ஆம், இவைசிலஇல.

[வினை 81.]

[பகர ஒற்றும், வகர ஒற்றும், ஐம்பால் மூவிடத்தும் எதிர்காலத்தைத் தரும் வினைப்பகுபத இடைநிலைகள் ஆம்; இம்முக்காலமும் முறையே காட்டும் தகர ஒற்றுமுதல் வகர ஒற்றீருய இடைநிலைகள் சில முற்று வினை எச்ச வினைகட்கில ஆம்.]



**145.** TIME INDICATED WITHOUT THE ABOVE MIDDLE PARTICLES.

கசரு. றவ்வோ டுகர உம்மைநிகழ் பல்லவும்,
தவ்வோ டிறப்பும், எதிர்வும், டவ்வொடு
கழிவும், கவ்வோ டெதிர்வும்;மின் ஏவல்,
வியங்கோள், இம்,மார், எதிர்வும்; பாந்தம்
செலவொடு வரவும்; செய்யு'நிகழ் பெதிர்வும்;
எதிர்மறை மும்மையும்; ஏற்கும் ஈங்கே.

[வினை 83.]

[றகரத்தோடு கூடிய உகர ஈறும், உம்ஈறும், இறந்தகாலமும், எதிர்காலமும்; தகரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் அவ்விருகாலமும்; டகரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் இறந்தகாலமும்; ககரத்தோடு கூடிய அவ்விரண்டீறும் எதிர்காலமும்; மின்ஈறும், ஏனை ஏவலின்வரும் அனைத்தீறும், வியங்கோள் ஈறும், இகரஈறும், மார்ஈறும், எதிர்காலமும், பகரஈறு இறந்தகாலமும், எதிர்காலமும்; செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றீறு நிகழ்காலமும், எதிர்காலமும்; முற்றுவிகுதி எச்சவிகுதிகளோடு புணர்தற்குரிய எதிர்மறை ஆகாரஈறு மூன்றுகாலமும்; ஏற்கும் மேலைச்சூத்திரத்து இவை சிலஇலஎன்றவற்றுள்.]

(உ-ம்.) சென்று, சென்றும். ... ...போனகாலம்.
வந்து, வந்தும். .. ... ... போன.
உண்டு, உண்டும். ... ...போன.
உண்மின், உண், உண்ணாய்....எதிர்.
சேறி, உண்மார். ... ... ...எதிர்.
உண்ப. .. ... ... ... எதிர்.
உண்ணூன். ... ... முக்காலம்.

சேறு, சேறும். ... ... ... எதிர்கா.
வருது, வருதும். ... ... ...எதிர்.
உண்கு, உண்கும். ... ... எதிர்.
உண்க, வாழிய, வாழியர். ... ...எதிர்.
உண்ணும். . ... ... ... நிகழ் எதிர்.

கவனிப்பு:—வருதி, பெயர்தி. [நிகழ்காலம்]; வருகிற [நிகழ்]; வந்த [போன]; வரும் [எதிர்.] இவை போலவன வருவனவாம்.

## உ. § வடமொழி ஆக்கம்.

**146.** LETTERS COMMON TO TAMIL AND SANSCRIT AND THOSE PECULIAR TO THE LATTER.

கசசு. இடையி னான்கும், ஈற்றில் இரண்டும்,
அல்லா அச்சை வருக்க முதல்ஈ
றியவ்வாதி நான்மை, ளவ்ஆகும், ஐயைம்
பொதுஎழுத் தொழிந்தநால் ஏழும் திரியும்.

[விரு 18.]

[ஆரியமொழியுள் அச்சென்று வழங்கும் உயிர் பதினாறனுள்ளும், இடையில் நின்ற ஏழாம் உயிர்முதல் நான்கும், ஈற்றில் நின்ற இரண்டும், ஆன ஆறும் ஒழிந்துநின்ற அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ, என்னும் பத்தும், அல் என வழங்கு முப்பத்தேழு மெய்யுள்ளும், க, ச, ட, த, ப என்னும் ஐந்து வருக்கத்தின் இடையில் உரப்பியும், எடுத்தும், கனைத்தும், சொல்லப்பட்டு நிற்கு மூன்றும் ஒழிந்த க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம என்னும் பத்தும், ய, ர, ல, வ என்னும் நான்கும், ள, வ்வும் ஆகும் இருபத்தைந்தும் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொது எழுத்தாம். இவை அன்றி மேல் உயிருள் ஒழிந்த ஆறும், ஐந்து வருக்கங்களினும் இடைகளின் ஒழிந்த பதினைந்தும், முப்பதாம் மெய் முதலான எட்ட னுள் ளகரம் ஒழிந்த ஏழும் ஆன இருபத்தெட்டும், ஆரியத்திற்குச் சிறப் பெழுத்தாய்த் தமக்கேற்ற பொது எழுத்தாகத்திரிந்து வடமொழி ஆம்.]

**147.** LETTERS PECULIAR TO SANSCRIT HOW EXPRESSED IN TAMIL.

கசஎ. அவற்றுள்,—ஏழாம் உயிர்இய்யும் இருவும்; ஐவருக்கத்
திடையில் மூன்றும் அவ்வம் முதலும்;
எட்டே யவ்வு' முப்பது ச,யவும்;
மேல்ஒன்று ச,டவும்; இரண்டு ச,தவும்;
மூன்றே அ,கவும்; ஐந்திரு கவ்வும்;
ஆ,ஈ றையும்; ஈஈ றிகரமும்.

[மேல் திரியும் என்றவற்றுள் சிறப்பெழுத்தாகிய ஏழாம் உயிர் இகரமு மிருவும் ஆம்; ஐந்து வருக்கங்களினும் இடையினின்ற மூன்றும் அவ்வவ் வருக்கங்களின் முதல் எழுத்தாம்; எட்டாமெய் ஆன சவ்வருக்கத்துள் எடுத்துச் சொல்லுமெய் ஒரோஇடத்து யகரமும் ஆம்; முப்பத்தொன்று மெய் மொழிமுதற்கண் சகரமும் இடைக்கண்டகரமும் ஆம்; முப்பத்தி ரண்டாமெய் மொழிமுதற்கண் சகரமும் இடைக்கண் தகரமும் ஆம்; முப்பத்துமூன்றுமெய் மொழிமுதற்கண் அகரமும், இடைக்கண் ககரமும் ஆம்; முப்பத்தைந்தாமெய் இரண்டு ககரம் ஆம்; பொது எழுத்துள் மொ ழிஇறுதி ஆகாரம் ஐகாரம் ஆம்; மொழிஇறுதி ஈகாரம் இகரம் ஆம்.]

(உ-ம்.) மாலை, ... ... மாலா. | சபை, ... ... சபா.
புரி, ... ... புரீ. | சயம்பு, ... ... சயம்பூ.

**148.** WORDS WHICH IN SANSCRIT BEGIN WITH ர், ல் or ய் TAKE அ, இ, உ.

கசஅ. ரவ்விற் கம்முதல் ஆமுக் குறிலும்,
லவ்விற் கிம்முதல் இரண்டும், யவ்விற்
கிய்யு' மொழிமுதல் ஆகிமுன் வருமே.

[ரகர லகர யகரங்களை முதல் ஆக உடைய ஆரிய மொழிகள் வடமொ ழி ஆங்கால் அகர இகர உகரம் என்னும் இம்மூன்று குற்றுயிரும் இங்ஙனம் சொன்ன ஆறே அவ்வடமொழிகட்கு முதலாய் அம்மூன்றெழுத்திற்கு முன்னர்வரும்.]

(உ-ம்.) அரங்கம், [*Ranga.*] இராமன், [*Râma.*] உரோமம், [*Rōma.*]
இலாபம், [*Lâb'ha.*] உலோபம், [*Lōb'ha.*]
இயக்கன், [*Yaksha.*]

**149.** SANSCRIT WORDS IN WHICH ய், ர், ல், ம், வ், ந FOLLOW A MUTE CONSONANT.

கசசூ. இணைந்தியல் காலை ய, ர, லக் கிகரமும்;
மவ்வக் குகரமு நகரக் ககரமும்,
மிசைவரும்; ரவ்வழி உவ்வும் ஆம்பிற.

[ஆரியமொழியுள் இரண்டெழுத்து இணைந்து ஒரெழுத்து நீர்மையாய் நடக்குங்கால் பின்னிற்கும் ய, ர, ல க்கள்மீதே இகரமும்; மகர வகரங்கள் மீதே உகரமும்; நகரமீதே அகரமும் வந்து வடமொழி ஆம். இணைந்துமுன்னிற்கும் ரகரத்திற்குப்பின்னர் உகரமும் வரும்.]

(உ-ம்.) வாக்கியம், [*Vákya.*] வக்கிரம், [*Vakra.*] சுக்கிலம், [*Sukla.*]
பதுமம், [*Padma.*] பக்குவம், [*Pakva.*]
அரதநம், [*Ratna.*]

**150.** LETTERS PECULIAR TO TAMIL.

கரு0. ற, ன, ழ, எ ஒவ்வும், உயிர்மெய்யும் உயிர்அள
பல்லாச் சார்பும் தமிழ்; பிற பொதுவே.

[முதலும் சார்பும் ஆன நாற்பதெழுத்துள்ளும் றகர, னகர, ழகர, எகர, ஒகரம் ஆனமுதல் எழுத்தைந்தும், உயிர்மெய்யும உயிர் அளபெடையும் அல்லாத சார்பெழுத்தெட்டும், தமிழிற்கே சிறப்பெழுத்தாம்; ஒழிந்த இருபத்தேழும் தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுஎழுத்தாம்.]

பதவியல் முற்றிற்று.

# நன்னூல்.



## I. எழுத்ததிகாரத்தில்

### (III.) உயிரீற்றுப்புணரியல்.



### க. § புணர்ப்பு.

---

**151.** COMBINATION OF LETTERS.

கருக. மெய்உயிர் முதல்ஈ றும்இரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடும் அல்வழி வேற்றுமைப்
பொருளில் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.



[மெய்யையும் உயிரையும் முதலும் ஈறுமாக உடைய பகாப்பதம் பகுபதம் என்னும் இரண்டு பதங்களும், தன்னொடுதானும், பிறிதொடு பிறிதுமாய், அல்வழிப்பொருளினான் ஆதல், வேற்றுமைப் பொருளினான் ஆதல், பொருந்தும் இடத்து, நிலைமொழியும் வருமொழியும் இயல்போடும், விகாரத்தோடும், பொருந்துவது மேற்கூறிய புணர்ச்சி ஆம்.]

(உ-ம்.) (1.) மொழிக் காரணம். ... வேற்றுமைப்பொருளில் விகாரம்.
(2.) பாலொடுதேன். ... ... வேற்றுமைப்பொருளில் இயல்பு.
(3.) அறந்தபோயிற்று. ... அல்வழிப்பொருளில் இயல்பு.
(4.) கட்டிக்கொண்டான். ... அல்வழிப்பொருளில் விகாரம்.

**152.** INFLECTED AND UNINFLECTED COMBINATION.

[அல்வழிவேற்றுமை என்பன.]

கருஉ. வேற்றுமை ஐமுதல் ஆறும்; அல்வழி
தொழில்,பண் புவமை, உம்மை, அன்மொழி
எழுவாய், விளி,ஈர் எச்சமுற் றிடை,உரி,
தழுவு தொடர்அடுக் கெனஈர் ஏழே.

[வி௵ 21, 22.]

[வேற்றுமைப் புணர்ச்சி: பெயரே, ஐ,ஆல், என்னுஞ்சூத்திரத்து ஐமுதலிய ஆறு உருபும் தொக்கும், விரிந்தும், வரப் பதங்கள் பொருந்துந் தொடர்ச்சி ஆம். அல்வழிப் புணர்ச்சி: வினைத்தொகை முதலிய ஐந்து தொகை நிலையும், எழுவாய்முதல் ஒன்பது தொகா நிலையும், எனப் பதங்கள் பொருந்துந்தொடர்ச்சி பதினான்காம்.]

[I. வேற்றுமை.]

(உ-ம்.) (1.) பொன்னுடையான். கல்லெறிந்தான். சாத்தன்மகன் மலைவீழ்அருவி. மலையுச்சி. மலைமுழை. } வேற்றுமைத் தொகைநிலை.

(2.) பொன்னையுடையான். கல்லால் எறிந்தான். சாத்தனுக்கு மகன். மலையின்வீழ் அருவி. மலையினது உச்சி. மலையின்கண்முழை. } வேற்றுமைத்தொகா நிலை.

[II. அல்வழி.]

(3.) கொல்யானை, வினைத்தொகை. { கொன்ற யானை. கொல்கின்ற யானை. கொல்லும் யானை.

(4.) கருங்குவளை. ... ... ... கருமையாகியகுவளை. [பண்புத்தொகை.]
ஆயன் சாத்தன் ... ... ஆயனாகிய சாத்தன். [இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகை.]

(5.) மதிமுகம். ... ... ... ... மதியைப்போன்றமுகம். [உவமைத்தொகை.]

(6.) இராப்பகல். ... ... இராவும் பகலும். [உம்மைத்தொகை.]

(7.) பொற்றொடி. ... ... ... பொற்றொடியை அணிந்தவள். [அன்மொழித்தொகை.]

(8.) கொற்றன் வந்தான். ... எழுவாய்த்தொடர்.

(9.) கொற்றா வோ. .. ... ... விளித்தொடர்.

(10.) உண்டசாத்தன். ... ... தெரிநிலைப்பெயர் எச்சத்தொடர்.
பெரியசாத்தன். ... ... ... குறிப்புப்பெயர் எச்சத்தொடர்.

(11.) உண்டுவந்தான். ... ... தெரிநிலைவினை எச்சத்தொடர்.
விருந்தின்றி உண்ணான். ... குறிப்புவினை எச்சத்தொடர்.

(12.) உண்டான் சாத்தன். .. ... தெரிநிலை முற்றுத்தொடர்.
குழையன் கொற்றன் ... ... குறிப்புமுற்றுத்தொடர்.

(13.) அணங்குகொல். ... ... இடைத்தொடர்.

(14.) சாலிபேதை. ... ... ... உரித்தொடர்.

(15.) பாம்பு பாம்பு. ... ... அடுக்குத்தொடர்.

**153.** NATURAL COMBINATION.

[இயல்பு.]

கருங. விகாரம் அனைத்து மேவல தியல்பே.

[மேல்வரும் விகாரவகை அனைத்தும் மேவாதது இயல்புப் புணர்ச்சி ஆம்.]

(உ-ம்.) பொன் + மலை = பொன்மலை.

## உ. § விகாரம்.

**154.** THE THREE KINDS OF CHANGES.

[விகாரப்புணர்ச்சி.]

கருச. தோன்றல், திரிதல், கெடுதல் விகாரம்
மூன்று மொழிமூ விடத்தும் ஆகும்.
[வினா 20.]

[மெய் எனும், உயிர் எனும், உயிர்மெய் எனும், சாரியை எனும், ஒன்றும் பலவும் தோன்றுதலும், திரிதலும், கெடுதலும், மேற்சொன்ன விகாரம் ஆகும். இம்மூவகை விகாரமும் நிலைமொழி வருமொழிகளின் முதல் இடை கடை என்னும் மூன்றிடத்தும் ஏற்றபெற்றி வரும்.]

(உ-ம்) பூ + கொடி = { பூக்கொடி. / பூங்கொடி. } [தோன்றல்.]
பல + தலை = பஃறலை. [திரிதல்.]
நிலம் + வலயம் = நிலவலயம். [கெடுதல்.]

**155.** POETICAL CHANGES.

கருரு. வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல்,
விரித்தல், தொகுத்தலும், வருஞ்செய்யுள் வேண்டுழி.
[வினா 42.]

[அல்வழி வேற்றுமையான் வருமேற்கூறிய மூன்று விகாரமுமே அன்றி, ஆறுக இங்ஙனங் கூறியு விகாரங்களும் வருவனவாம் செய்யுளகத்து, அடிதொடை முதலிய நோக்கி அமைக்கவேண்டும் இடத்து.]

**156.** WORDS MAY SUFFER THE LOSS OF THEIR INITIAL, MEDIAL OR FINAL LETTERS.

கருசு. ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே.
[வினா 42.]

[அடி தொடை முதலிய நோக்கித் தொகுக்கும் வழிதொகுத்தல் அன்றி, வழக்கின்கண் மரூஉப்போலச் செய்யுட்கண் மரூஉவாய் அடிப்பாடாக ஒருமொழி முதல், இடை, கடை, என்னு மூன்றிடத்தும் குறைந்து வருதலும் செய்யுள் விகாரம் ஆம்.]

(உ-ம்.) மரையிதழ் புரையும் அஞ்செஞ்சீறடி. ... தாமரைஇதழ் முதற்குறை.
வேதினவெரிநின் ஓதிமுதுபோத்து. ... ... ஓந்தி இடைக்குறை.
நீலுண்டுகிலிகை கடுப்ப. ... ... ... நீலம் கடைக்குறை.

**157.** IN THE SAME COMBINATION THERE MAY BE MORE THAN ONE KIND OF CHANGE.

கருஎ. ஒருபுணர்க் கிரண்டு மூன்றும் உறப்பெறும்

[ஒருபுணர்ச்சிக்கண் தோன்றல், திரிதல், கெடுதல், என்ற விகாரம் எத்துணை வரும் என்றையுறற்க, ஒன்றே அன்றி இரண்டு மூன்றும் வரப்பெறும்.]

(உ-ம்.) நிலம் + பனை = நிலப்பனை. [கெடுதலுந் தோன்றலும்.]
பனை + காய் = பனங்காய். [மூன்று விகாரங்களும்.]

### ரு. § பொதுப்புணர்ச்சி.

**158.** ஞ், ந், ம், ய், வ் AFTER OTHER LETTERS.

கருஅ. எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கு
முன்வரு ஞ,ந,ம,ய வக்கள் இயல்பும்;
குறில்வழி யத்தனி ஐ,நொ,து முன்மெலி
மிகலுமாம் ண,ள,ன,ல வழிநத் திரியும்.
[வினா 31. 39. 40.]

[இயல்பாகவும் விதி ஆகவும் இருபத்துநான்கெழுத்தையும் ஈறாக உடைய பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல், திசைச்சொல், வடசொல், என்பன நிலைமொழி ஆகநிற்க, இவற்றிற்கு முன்னர்வரும் ஞகார நகார மகார யகார வகாரங்கள் அல்வழி வேற்றுமை ஆய இருவழியும் இயல்பாதலும், குற்றெழுத்தின் பின்வரும் யகாரஒற்றே

ஓரெழுத்தொருமொழி ஆன உயிர், உயிர்மெய், என்னும் ஐகாரமே, நொ,து, என்பவற்றிற்கு முன்னர். வரும் ஞகார நகார மகாரங்கள் பிறசொற்கள் முன்இயல்பாதல் அன்றி மிக்குமுடிதலும் ஆம்; ணகார ளகார னகார லகாரங்கட்கு முன்வரும் நகாரம் பிறவீற்றின்முன் இயல்பாதல் அன்றித்திரியும்.]

(உ-ம்.) (1.) வின + ஞான்றது = வினஞான்றது. [இயல்பு.]

[பிறவும்அன்ன.]

---

(2.) மெய், கை, + ஞான்றது, நீண்டது, மாண்டது = மெய்ஞ்ஞான்றது. கைஞ்ஞான்றது. மெய்ந்நீண்டது. கைந்நீண்டது. மெய்ம்மாண்டது. கைம்மாண்டது.

[மெலிமிகுந்தது.]

---

(3.) நொ, து, + ஞெள்ளா, நாகா, மாடா = நொஞ்ஞெள்ளா. துஞ்ஞெள்ளா. நொந்நாகா. துந்நாகா. நொம்மாடா. தும்மாடா.

[மெலிமிகுந்தது.]

---

(4.) மண் + நன்று = மண்ணன்று.
முள் + நன்று = முண்ணன்று.
பொன் + நன்று = பொன்னன்று.
கல் + நன்று = கன்னன்று.
} ண, ள, ன, ல முன் நகரந்திரிந்தது.

---

**159.** COMMON NOUNS AND THOSE OF THE HIGHER CLASS.

கருகூ. பொதுப்பெயர் உயர்திணைப் பெயர்கள் ஈற்றுமெய்
வலிவரின் இயல்பாம், ஆவி ய,ர,முன்
வன்மை மிகா;சில விகாரம் ஆம் உயர்திணை.

---

[இருதிணைப் பொதுவான பெயர்க்கும் உயர்திணைப் பெயர்க்கும் ஈறான மெய்கள் வல்லின முதல்மொழி வந்தால் இயல்பாம். உயிரே யகரமே ரகரமே என்னும் இவ்வீற்ற இருபெயர்கள் முன்னரும் வரும் க,ச,த,ப க்கள் மிகாஆம். மெய் உயிர்ஈற்று உயர்திணைப்பெயர்கள் நாற்கணங்களோடும் புணரும் இடத்து நிலைமொழி வருமொழிகள் விகாரப்படுவனவும் சில உள ஆம்.]

(உ-ம்.) சாத்திதாய் = குறிது, சிறிது, தீது, பெரிது. கை, செவி, தலை, புறம். குறியன், சிறியன், தீயன், பெரியன். குறிது, சிறிது, தீது, பெரிது. கை, செவி, தலை, புறம். குறியன், சிறியன், தீயன், பெரியன்.

[அல்வழி வேற்றுமை இரண்டிடத்தும் வலிவர இயல்பாதல் காண்க.]

**160.** THE STRONG CONSONANTS NOT DOUBLED AFTER INTERROGATIVES, OR VOCATIVES.

௧௬௦. ஈற்றியா வினா,விளிப்பெயர் முன்வலி இயல்பே.

[மூன்றீற்று வினாமுன்னும், யா என்னும், வினாப்பெயர் முன்னும், உயிர் ஈறு ஒற்றீறு ஆய விளிப்பெயர்கள் முன்னும், வரும் வல்லினம் இயல்பாம்.]

(உ-ம்.) நம்பியா கொண்டான், சென்றான், தந்தான், போயினான்.
நம்பியோ கொண்டான்.
யா குறிய.
நம்பிகொள், செல், தா, போ.



**161.** THE SECOND PERSON OF VERBS OR IMPERATIVES ENDING IN A VOWEL OR IN ய், ர், ழ்.

௧௬௧. ஆவி ய,ர,ழ இறுதிமுன் னிலைவினை,
ஏவல்,முன் வல்லினம் இயல்பொடு விகற்பே.

[உயிரையும், ய,ர,ழ என்னும் மூன்றொற்றையும் இறுதியாகவுடைய விகுதி உருபினவாய முன்னிலை வினைமுன்னும் வரும் வல்லினம் இயல்புடனே விகற்பமாம்.]

(உ-ம்.) உண்டனை. } கொற்றா, சாத்தா, தேவா, பூதா.
உண்டாய்.
உண்டிர்.
தாழ்.
நடகொற்றா, நடக்கொற்றா.



௪. § உயிரீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப் புணர்ச்சி.

**162.** VOWEL AND VOWEL; ய் OR வ் INSERTED.

௧௬௨. இ,ஈ,ஐ வழி யவ்வும்; ஏனை
உயிர்வழி வவ்வும்; ஏமுன் இவ்இருமையும்;
உயிர்வரின், உடம்படு மெய் என்றாகும்.
[வினா 23.]

[இகர ஈகார ஐகாரங்களின் வழியே, யகரமும்; அ,ஆ, உ,ஊ, ஒ,ஓ, ஔ என்னும் இவ்வேழ் உயிர்களின் வழியே வகரமும்; ஏகாரத்தின் வழியே யகரமும் வகரமும், உயிர்முதன்மொழி வந்தால், உடம்படு மெய் என்று வரும்.]

**163.** INITIAL INTERROGATIVE AND DEMONSTRATIVE LETTERS EXCEPTION TO (162, 158.)

௧௱௬௩. எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்;
பிறவரின் அவையும்; தூக்கிற் சுட்டு
நீளின் யகரமும்; தோன்றுத னெறியே.
[வினா 25.]

[எ என்னும் வினா இடைச்சொல் முன்னும், அ, இ, உ என்னும் மூன்று சுட்டிடைச்சொல் முன்னும், உயிரும் யகரமும் வந்தால் வகரமும்; ஒழிந்த மெய்கள் வந்தால் அம்மெய்களும்; செய்யுட்கண் சுட்டு நீண்டிசைத்த வழியகரமும் மிகுதல் முறை ஆம்.]

(உ-ம்.) எவ்வணி, எவ்யானை.
அவ்வணி, அவ்யானை.
எக்குதிரை, அக்குதிரை.
ஆ, + இடை, = ஆயிடை = அவ்விடம்.

---

**164.** FINAL உ. [EXCEPTION TO 126.]

௧௱௬௪. உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்;
யவ்வரின் இய்யா முற்றும் அற்றொரோவழி.
[வினா 24.]

[குற்றியலுகரம் உயிர்முதல் மொழி வந்தால் தனக்காதாரம் ஆன மெய் நிற்கத் தான்கெடும்; யகரமுதன்மொழி வந்தால் இகரம் ஆகத்திரியும்; முற்றியல் உகரமும் அவ்விரு விதியும் பெறும் ஒரோவிடங்களின்.]

(உ-ம்.) நாகு, எஃகு, வரகு, கொக்கு, குரங்கு, தெள்கு } + அரிது { நாகரிது, எஃகரிது, வரகரிது, கொக்கரிது, குரங்கரிது, தெள்கரிது.
அருமை { நாகருமை, எஃகருமை, வரகருமை, கொக்கருமை, குரங்கருமை. தெள்கருமை.

---

கதவு { + அரிது = கதவரிது.
+ அருமை = கதவருமை.
+ யாப்பு = கதவியாப்பு. } முற்றுகரம் கெட்டதுந் திரிந்ததுங்காண்க.

---

தன் மு[redacted]தான் அழைப்பதுவே,
எ-தில் குற்றியல் உ[redacted]கெடாமல் வுகர உடம்படுமெய் பெற்றதுகாண்கள்.

## ரு. § உயிரீற்றுமுன்வல்லினம்.

**165.** க, ச, த, ப AFTER A VOWEL ARE DOUBLED. [GENERAL RULE.]

கசுரு. இயல்பினும் விதியினு' நின்ற உயிர்முன்
க,ச, த,ப மிகும்வித வாதன மன்னே.
[வி௵ 27.]

[இயல்பினும், விதியினும், இறுதிஆக நின்ற உயிர்களின் முன்னர்வரும் க,ச,த, ப க்கள் பெரும்பாலும் மிகும் விதந்து சொல்லாதன.]

**166.** NAMES OF TREES. [EXCEPTION.]

கசுசு. மரப்பெயர் முன்னர் இனமெல் எழுத்து
வரப்பெறு நவும்உள, வேற்றுமை வழியே.
[வி௵ 161.]

[உயிர்ஈற்று மரப்பெயர்கள்முன் மேலைப் பொதுவிதியான் வல்லெழுத்து மிகாது, வரும்வல்லெழுத்திற்கு இனம் ஆன மெல்லெழுத்து மிகப்பெறுவனவும் சில உள வேற்றுமைக்கண்.]

(உ-ம்.) விளங்காய்.

## சு. § அகரஈற்றுச் சில சொற்கள்.

**167.** EXCEPTIONS TO (165.) [WORDS IN அ.]

கசுஎ. செய்யிய என்னும் வினைஎச்சம், பல்வகைப்
பெயரின் எச்சமுற் றாறன் உருபே,
அஃறிணைப் பன்மை, அம்ம;முன் இயல்பே,
[வி௵ 27.]

[இங்ஙனம் விதந்த அகரஈற்றுச் சொற்கள் ஆறன் முன்னும் வரும் வல்லினம் இயல்பாம்.]

(உ-ம்.) உண்ணிய கொண்டான்... வினைஎச்சம்.
உண்ட குதிரை. ... ... பெயர்எச்சம்;
உண்டன குதிரைகள். ... வினைமுற்று.
தன கைகள். ... ... ஆறன்உரு[redacted]
பல குதிரைகள். ... ... அ[redacted]ப்பன்மை.
அம்ம கொற்று. ... ... அம்[redacted]

**168.** EXCEPTION TO (165.): வாழிய.

கசுஅ. வாழிய என்பதன் ஈற்றின் உயிர்மெய்
ஏகலும் உரித்தஃ தேகினும் இயல்பே.

[ விஞ 85. ]

[ வாழிய என்னும் வியங்கோள் முற்றினது ஈற்றுயிர் மெய் குறைதலும் உரித்து, குறைந்துஇகர ஈறாய் நின்றாலும் வல்லினம் பொது விதியான் மிகாது, சிறப்பு விதியுட் கூறியஇயல்பே ஆம். ]

(உ-ம்.) வாழி கொற்றா.

---

**169.** EXCEPTION TO (165.): சாவ.

கசுகூ. சாவஎன் மொழிஈற் றுயிர்மெய் சாதலும்விதி.

[ விஞ 86. ]

[ சாவ என்னும் செய் என் எச்சவினைச் சொல்லினது ஈற்றுயிர்மெய் கெட்டுப்புணர்தலும் விதிஆம். ]

(உ-ம்.) சாக்குத்தினான். [சாவக்குத்தினான்.]

---

**170.** EXCEPTION TO (165.): பல AND சில DOUBLED.

கஎ0. பல,சில, எனும்இவை தம்முன் தாம்வரின்
இயல்பு மிகலும், அகரம் ஏக
லகரம் றகரம் ஆகலும், பிறவரி
ணகரம் விகற்பம் ஆகலும், உளபிற.

[ பல,சில என்னும் இவ்விரு சொல்லும் தம்முன்னர்த்தாம் வருமாயின் இயல்பாதலும், மிகுதலும், அகரம்கெட லகரம் றகரம் ஆகலும், இவற்றின் முன் பிறமொழிகளுள் யாதாயினும் ஒன்று வரின் அகரம் நிற்றலும் நீங்கலும் உளஆம். ]

(உ-ம்.) பல பல. ... ... பற்பல.
சில சில. .... ... சிற்சில.

---

பலப்பல. { பலகலை.
சிலச்சில. { பல் + நாள் = பன்னாள்.
{ சில் + மணி = சின்மணி.

---

பல + சாலை = பல்சாலை, பலசாலை.
சில + யானை = சில்யானை, சிலயானை.

---

## ௭. § ஆகாரஈற்றுச் சிலசொற்கள்.

**171.** EXCEPTION TO (165.): WORDS IN ஆ.

௧௭௧. அல்வழி ஆ,மா, மியா,முற்று, முன்மிகா.

[ விஞ 27. ]

[ அல்வழிக்கண், ஆவும், மாவும் ஆகிய இருபெயரும், மியா என்னு முன்னிலையசை இடைச்சொல்லும், ஆகார ஈற்றஃறிணைப்பன்மை எதிர் மறைமுற்று வினையும், நிற்க இவற்றின் முன்வரும் வல்லினம் மிகா. ]

(உ-ம்.) ஆ + குறிது = ஆகுறிது.
மா + குறிது = மாகுறிது.
கேண்மியா + கொற்றா = கேண்மியாகொற்றா;
உண்ணா + குதிரைகள் = உண்ணாகுதிரைகள்.

---

**172.** EXCEPTION TO (165.): FINAL ஆ SHORTENED IN POETRY.

௧௭௨. குறியதன் கீழ்ஆக் குறுகலும், அதனோ
டுகரம் ஏற்றலும், இயல்பும்ஆம் தூக்கின்.

[ விஞ 41. ]

[ குற்றெழுத்தின் கீழ்நின்ற ஆகாரம் குறுகலும், அக்குறுகலுடனே உக ரம் பெறுதலும், அவ்விரண்டும் இன்றித்தன் இயல்பின் நிற்றலும் ஆகிய மூன்று விதியும் பெறும் செய்யுட்கண். ]

(உ-ம்.) நில விரி கானல் வாய். ... ... ... நிலா விரி: (குறுகல்.)
கனவு. ... ... ... ... கனா (குறுகலோடு உ பெற்றது.)
நிலா வணக்கு வெண்மணான் மேனின்று (இயல்பு.)

## அ. § இகரஈற்றுச் சிலசொற்கள்.

**173.** EXCEPTION TO (165.): SPECIAL RULE REGARDING அன்றி, இன்றி.

கஎங. அன்றி, இன்றிஎன் வினைஎஞ் சிகரம்
தொடர்பினுள் உகரம் ஆய்வரின் இயல்பே.

[அன்றி, இன்றி என்னும் வினையெச்சக் குறிப்புச்சொல்லினது ஈற்று இகரம் செய்யுட்கண் உகரமாய் வருமாயில் க, ச, த, பக்கள் பொது விதியான் மிகாது இயல்பாம்.]

(உ-ம்.) நாளன்றுபோகி. ... ... ... ... நாள், அன்றி.
விண்ணின்றுபொய்ப்பின். ... ... விண், இன்றி.



**174.** EXCEPTION TO (165.): SPECIAL RULE REGARDING நாழி AND உரி.

கஎச. உரிவரி ணாழியின் ஈற்றுயிர் மெய்கெட
மருவும் டகரம்; உரியின் வழியே
யகரஉயிர் மெய்யாம், ஏற்பன வரினே

[உரி என்னும் அளவுப்பெயர் வரின் நாழி என்னும் அளவுப்பெயரினது ஈற்றுயிர்மெய் கெட அவ்வழி டகர ஒற்று வரும்; உரி என்னும் அளவுப்பெயரின்பின் யகர உயிர்மெய் வரும் அவ் உயிர்மெய் வருதற்கேற்ற வருமொழிகள் வருமாயின்.]

(உ-ம்.) நாழி + உரி = நாடுரி.
உரி + உப்பு = உரிய உப்பு.



**175.** EXCEPTION TO (165.): SPECIAL RULE REGARDING புளி.

கஎரு. சுவைப்புளி முன்இன மென்மையுந் தோன்றும்.
[விஞ 161.]

[புளி என்னும் மரமும் பழமும் அன்றி, அறுசுவையுள் ஒன்றை உணர்த்தும் பெயர்முன் வரும் வல்லினம் மிகுதலே அன்றி அவற்றிற் கினம் ஆய மெல்லினமும் ஒரோவழி மிகும்.]

(உ-ம்.) புளி + கறி = புளிங்கறி.

**176.** EXCEPTION TO (165.): இ, ஐ, BEFORE STRONG LETTERS.

௧௭௬. அல்வழி இ,ஐ, முன்னர் ஆயின்
இயல்பு மிகலும், விகற்பமும் ஆகும்.

[ இகர ஐகார ஈற்று அஃறிணைப் பெயர்முன் வல்லினம் அல்வழிக்கண் வருமாயின் இயல்பாயும், பொதுவிதியான் மிகுந்தும், ஒன்றற்கே ஒருகால் மிகாதும் ஒருகால்மிகுந்தும் புணரும்.]

(உ-ம்.) பருத்தி + குறிது = பருத்திக்குறிது.
யானை + குறிது = யானை குறிது.
ஆடி + திங்கள் = ஆடித்திங்கள்.
சித்திரை + திங்கள் = சித்திரைத்திங்கள்.
கிளி + குறிது = கிளிகுறிது, கிளிக்குறிது.
திணை + குறிது = திணைகுறிது, திணைக்குறிது.

௩. § ஈகாரஈற்றுச் சிலசொற்கள்.

**177.** EXCEPTION TO (165.): SPECIAL RULE REGARDING ஆ + பீ.

௧௭௭. ஆமுன் பகரஈ அனைத்தும்வரக் குறுகு
மேலன அல்வழி இயல்பா கும்மே.

[ ஆ என்னும் பெயர்முன் நின்ற பகர ஈகாரம் இருவழியும் நாற்கணங்களும் வரில் குறுகும்; குறுகி விதி இகர ஈறாகநின்ற அதன்மேல் வரும் வல்லினம் அல்வழிக்கண் மேலைச் சூத்திரத்துட் கூறிய விதி மூன்றனுள் இயல்பைப்பெறும். ]

(உ-ம்.) ஆ + பீ = ஆப்பி. } அல்வழி.
ஆப்பி + அரிது = ஆப்பியரிது. } அல்வழி.
ஆப்பி + குளிர்சசி = ஆப்பிக்குளிர்சசி வேற்றுமை.

**178.** EXCEPTION TO (165.): SPECIAL RULE REGARDING பீ, நீ, மீ.

௧௭௮. பவ் ஈ,நீ,மீ, முன்னர் அல்வழி
இயல்பாம்; வலிமெலி மிகலும் ஆமீக்கே.

[ பகர ஒற்றை ஊர்ந்து நின்ற ஈகார ஈற்றிடக்கர்ப்பெயரும், நீ என்னு முன்னிலை ஒருமைப் பொதுப்பெயரும், மீ என்னும் மேலாய பண்பையும், அப்பண்பாகுபெயராய் மேல் ஆய இடமுதலியவற்றையும் உணர்த்தி நிற்கும் பலபொருள் ஒருசொல்லும் நிற்க இவற்றின் முன்வரும் வல்லினம் அல்வழிக்கண் இயல்பாம்; இங்ஙனம் புணரும் மீ என்னும் சொற்குமுன் அல்வழிக்கண் வல்லெழுத்து மிகலும் ஆம், மெல்லெழுத்து மிகலும் ஆம். ]

(உ-ம்.) பீ + குறிது = பீகுறிது.
நீ + குறியை = நீகுறியை.
மீ + கண் = மீகண்.
மீ + கூற்று = மீக்கூற்று.
மீ + தோல் = மீந்தோல்.

---

### ௧௦. § உகரஈற்றுச் சிலசொற்கள்.

**179.** EXCEPTION TO (165.) WORDS IN உ.

௧௭௯. மூன்றா றுருபெண், வினைத்தொகை சுட்டீ
றாகும் உகர முன்னர் இயல்பாம்.
[ விரு 27. ]

[ முற்றுகரவீற்று மூன்றும் உருபே, ஆறும் உருபே, இயல்பாயும் விகாரமாயும் வரும் எண்ணே, வினைத்தொகையே, சுட்டுப்பெயரே, என்னும் இவற்றின்முன் வரும் வல்லினம் இயல்பாம். ]

(உ-ம்.) சாத்தனொடு கொண்டான்.
சாத்தனது கை.
எழு புலி
இரு செவி.
தரு சோறு.
அது குறிது. [அல்வழி.]
அது கொண்டான். [வேற்றுமை.]

---

**180.** EXCEPTION TO (165.): SPECIAL RULE REGARDING உ BEFORE அன்று IN POETRY.

௧௮௦. அதுமுன் வரும்அன் றான்றும் தூக்கின்.

[ அது என்னும் சுட்டுப்பெயர்முன்வரும் அன்றென்னும் வினைக்குறிப்புச்சொல் முதல் நீளும் செய்யுளகத்து. ]

(உ-ம்.) அது + அன்று = அதான்று.

---

**181.** EXCEPTION TO (165.): SHORTENED உ.

கஅக. வன்றொடர் அல்லன முன்மிகா, அல்வழி.

[ வன்றொடர் ஒழிந்த ஐந்தன் பகுதிக் குற்றுகர ஈற்றின் முன்னும் வரும் வல்லினம் மிகா அல்வழிக்கண். ]

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | நாகு | + கடிது | = | நாகு கடிது. | [நெடிற்றொ[redacted].] |
| | எஃகு | + சிறிது | = | எஃகு சிறிது. | [ஆய்தத்தொடர்.] |
| | வரகு | + தீது | = | வரகு தீது. | [உயிர்த்தொடர்.] |
| | குரங்கு | + பெரிது | = | குரங்கு பெரிது. | [மென்றொடர்.] |
| | தெள்கு | + சிறிது | = | தெள்கு சிறிது. | [இடைத்தொடர்.] |

---

**182.** SHORTENED உ.

கஅஉ. இடைத்தொடர், ஆய்தத் தொடர், ஒற் றிடையின்
மிகாநெடில் உயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

[ இடைத்தொடர் முன்னும், ஆய்தத்தொடர் முன்னும், ஒற்றிடையே மிகாத நெடிற்றொடர் முன்னும், உயிர்த்தொடர் முன்னும், வரும் வல்லினம் மிகா வேற்றுமைக்கண். ]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | தெள்கு | + கடுமை | = | தெள்கு கடுமை. | [இடைத்தொடர்.] |
| | எஃகு | + கடுமை | = | எஃகு கடுமை. | [ஆய்தத்தொடர்.] |
| | நாகு | + கடுமை | = | நாகு கடுமை. | [ஒற்றிடையில் மிகாநெடிற்றொடர்.] |
| | வரகு | + பெருமை | = | வரகு பெருமை | [உயிர்த்தொடர்.] |

---

**183.** EXCEPTION TO (165.): SHORTENED உ IN THE TERM டு, று.

கஅ௩. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
ட, றஒற் றிரட்டும் வேற்றுமை மிகவே.
[ விஞ 26.]

[ நெடிற்றொடர்க் குற்றுகரஈற்று மொழிகளுள்ளும், உயிர்த்தொடர்க் குற்றுகரஈற்று மொழிகளுள்ளும், அவ்வுகரப் பற்றுக்கோடாகிய வல்லெழுத்துஆறனுள் டகார றகாரமான இரண்டொற்றும் பெரும்பாலும் வேற்றுமைக்கண் இரட்டும். ]

(உ-ம்.) ஆடு + கால் = ஆட்டுக்கால். } வேற்றுமை.
பாறு + செவி = பாற்றுச்செவி

எருத்துமாடு, வெருக்குக்கண் எனவும் வரும்.

காடு + அரண் = காட்டரண். [அல்வழியிலும்.]
காடு + அகம் = காடகம். [இயல்பு.]



**184.** EXCEPTIONS TO (165.): A FEW WORDS ENDING IN உ AFTER A SOFT CONSONANT.

கஅச. மென்றொடர் மொழியுள் சிலவேற் றுமையில்
தம்இன வன்றொடர்; ஆகா மன்னே.
[ விஞ 26. ]

[ மென்றொடர்க் குற்றுகர மொழிகளுள் சிலவேற்றுமைக்கண் தமக்கினம் ஆனவன்றொடர் ஆதலை ஒழிந்தன பெரும்பால். ]

(உ-ம்.) கன்று + ஆ = கற்று.
கரும்பு + வில் = கருப்புவில்.



**185.** EXCEPTION TO (165.): FINAL உ CHANGED INTO ஐ.

கஅரு. ஐஈற் றுடைக்குற் றுகரமும் உளவே.
[ விஞ 26. ]

[ ஐகாரச் சாரியையை இறுதியிலே பெற்று வரும் மென்றொடர்க் குற்றுகர மொழிகளும் சில உள. ]

(உ-ம்.) பண்டு + காலம் = பண்டைக்காலம்.



**186.** EXCEPTION TO (165.): WORDS IN உ INDICATING POINTS OF THE COMPASS.

கஅசா. திசையொடு திசையும், பிறவுஞ் சேரின்,
நிலைஈற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் ன,ல,வாய்த் திரிதலும் ஆம்பிற.
[ விஞ 160. ]

[திசைச்சொல்லோடு திசைச்சொல்லும், பிறசொல்லும் புணரும் இடத்து நிலைமொழி ஈற்றின்நின்ற உயிர்மெய்யும், அதன்மேல் நின்றககர ஒற்றும் கெடுதலும், அங்ஙனம் நின்ற றகர ஒற்று னகர ஒற்றாயும், லகர ஒற்றாயும், திரிதலும் ஆம்.]

(உ-ம்.) வடக்கு, தெற்கு + கிழக்கு = வடகிழக்கு. தென்கிழக்கு.



வடக்கு + திசை = வடதிசை.
மேற்கு + திசை = மேற்றிசை, மேல்திசை.



மேலைத்திசை, கீழ்த்திசை, கீழைச்சேரி, வடக்கூர், வடக்குமலை, தெற்குமலை எனவும் வரும்.

**187.** EXCEPTION TO (165.): SPECIAL RULE REGARDING தெங்கு.

கஅ௭. தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடும், காய்வரின்.
[வினா 161.]

[காய் என்னும்சொல் வருமாயின தெங்கென்னு நிலைமொழி முதனீண்டு ஈற்றுயிர் மெய்கெடும்.]

(உ-ம்.) தெங்கு + காய் = தேங்காய்.

**188.** NOUNS OF NUMBER.

கஅஅ. எண்ணிறை, அளவும், பிறவும், எய்தின்
ஒன்று முதல், எட் டீறும் எண்ணுள்
முதலீர் எண்முத னீளுமூன் றாறேழ்
குறுகும்ஆ றேழ்அல் லவற்றின்
ஈற்றுயிர் மெய்யும் ஏழன் உயிரும்
ஏகும் ஏற்புழி என்மனார் புலவர்.
[வினா 159.]

[எண்ணுப்பெயரும், நிறைப்பெயரும், அளவுப்பெயரும், பிறபெயரும், வரின் நிலைமொழி ஆகநின்ற ஒன்றுமுதல் எட்டீறும் எண்களுள் முதற்கண்ணவாய ஒன்று இரண்டு என்னும் இரண்டெண்ணும், முதல் நீளும்; மூன்றும், ஆறும், ஏழும் முதல்குறுகும்; ஆறும், ஏழும், அல்லாத ஆறெண்களின் ஈற்றுயிர்மெய்யும், ஏழு என்னும் எண்ணீற்றுயிரும் கெடும்; ஏற்கும் இடங்களின் என்று சொல்லுவர் புலவர்.]

(உ-ம்.) ஒன்று: ஓர்ஆயிரம், ஓர்கழஞ்சு, ஓர்கலம், ஓர்மரம்.
இரண்டு: ஈர்ஆயிரம், ஈர்கழஞ்சு, ஈர்கலம், ஈர்மரம்.
மூன்று: முப்பது, முக்கழஞ்சு, முக்கலம், மும்மரம்.
ஆறு: அறுபது, அறுகழஞ்சு, அறுகலம், அறுமரம்.
ஏழு: எழுபது, எழுகழஞ்சு, எழுகலம், எழுமரம்.
ஏழு: ஏழ்கடல்



**189.** EXCEPTION TO (165.): REGARDING ஒன்று AND இரண்டு.

கஅகூ. ஒன்றன் புள்ளி ரகரம் ஆக,
இரண்டன் ஒற்றுயிர் ஏக,உவ் வருமே.

[ விஞ 159. ]

[ மேற்கூறிய நால்வகைப்பெயரும் வரும்இடத்து ஈற்றுயிர்மெய் ஏகும் என்றமையான், இறுதி உயிர்மெய்கெட நின்ற ஒன்றென்னும் எண்ணினது னகர ஒற்று ரகர ஒற்ருக, இரண்டென்னும் எண்ணினது ணகர ஒற்றும் ரகரத்தை ஊர்ந்துநின்ற அகர உயிரும்கெட, அவ்விரண்டு ரகரத்தின் மேலும் உகரம்வரும். ]

(உ-ம்.) ஒன்று. ... .. ... ஒருவன், ஒருவர், ஓர், ஒர், ஒரு.
இரண்டு. ... ... இர், ஈர், இரு.



**190.** EXCEPTION TO (165): REGARDING மூன்று.

ககூ. மூன்றன் உறுப்பழிவும் வந்ததும் ஆகும்.

[ விஞ 159. ]

[ நால்வகைப்பெயரும் வரும்இடத்து இறுதி உயிர்மெய்கெட நின்ற மூன்றென்னும் எண்ணினது னகர ஒற்றுக் கெடுதலும் வரும் ஒற்ருகத் திரிதலும் ஆம். ]

(உ-ம்.) மூன்று. ... ... ... மூ, மு.
மூவிடம். .. ... முப்பது.



**191.** EXCEPTION TO (165.): REGARDING நான்கு.

ககூக. நான்கன் மெய்யே ல,ற, ஆகும்மே.

[ விஞ 159. ]

[ நால்வகைப்பெயரும் வரும்இடத்து இறுதி உயிர்மெய் கெட நின்ற நான்கென்னும் எண்ணினது னகர ஒற்று லகர ஒற்ருயும், றகர ஒற்ருயும் திரியும். ]

(உ-ம்.) நான். ... ... ... நால், நாற்.

**192.** EXCEPTION TO (165.): REGARDING ஐந்து.

கசுஉ. ஐந்தன் ஒற்றடைவதும் இனமுங் கேடும்.

[ விஞ 159. ]

[ நால்வகைப்பெயரும் வரும்இடத்து இறுதி உயிர்மெய்கெட நின்ற ஐந்தென்னும் எண்ணினது நகர ஒற்று வரும் ஒற்றாகியும், அதற்கினம் ஆகியும், கெட்டும் முடிவதாம். ]

(உ-ம்.) ஐம்மூன்று.
ஐங்கலம்.
ஐயம்பு.



**193.** EXCEPTION TO (155.): எட்டு.

கசுரு. எட்டன் உடம்புணவ் வாகும் என்ப.

[ விஞ 159. ]

[ நால்வகைப்பெயரும் வரும்இடத்து இறுதி உயிர்மெய்கெட நின்ற எட்டென்னும் எண்ணினது டகர ஒற்று ணகர ஒற்றாகும் என்று சொல்லுவர் புலவர். ]

(உ-ம்.) எண்பது, எண்குணம்.



**194.** EXCEPTION TO (165.): ஒன்பது BEFORE பத்து AND நூறு.

கசுச. ஒன்பா னொடுபத்து நூறும் ஒன்றின்
முன்னதின் ஏனைய முரணி ஒவ்வொடு
தகர நிறீஇப்பஃ தகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.

[ விஞ 159. ]

[ ஒன்பதுடனே பத்தென்பதும், நூறென்பதும், வந்து புணருமாயின் அந்நிலைமொழி வருமொழிகளுள் முன்னதாகிய நிலைமொழியினின்றும் ஏனைவருமொழியாகிய பத்தையும், நூற்றையும், நிரனிறை வகையானே நூறெனவும் ஆயிரம் எனவும் திரித்து, நிலைமொழிக்கு முதற்கண் ஒகர உயிரோடு தகர மெய்யை அதற்காதாரம் ஆகநிறுத்தி, அந்நிலைமொழி இறுதிக்கண் பஃதைக்கெடுத்து, அம்மொழிமுதற்கயல் நின்ற னகர ஒற்றை முறையே ணகர ஒற்றாயும் ளகர ஒற்றாயும் திரிப்பது முறையாம். ]

(உ-ம்.) ஒன்பது { + பத்து = (1.) ஒன்பது நூறு, (2.) தொன்பது நூறு.
{ + நூறு = (1.) ஒன்பது ஆயிரம், (2.) தொன்பது ஆயிரம்.

(3.) தொன் நூறு, (4.) தொண்நூறு, (5.) தொண்ணூறு.
(3.) தொன்ஆயிரம், (4.) தொள்ஆயிரம், (5.) தொள்ளாயிரம்.



**195.** EXCEPTION TO (165.): பத்து AFTER NUMERALS.

௧௯௫. முதல்இரு நான்காம் எண்முனர்ப் பத்தின்
இடைஒற் றேகல், ஆய்தம் ஆகல்,
எனஇரு விதியும் ஏற்கும் என்ப.
[ வி௵ 159. ]

[ ஒன்றுமுதலாகிய எட்டெண்களின் முன்னும் வரும் பத்தென்னும் எண்ணிடை நின்ற தகர ஒற்று ஒருகாற் கெடுதலும், ஒருகால் இடையே தகரநின்ற நிலைக்களத்து அதுகெட ஆய்தம் வருதலும், என்னும் இவ்விரண்டு விதியையும் ஏற்கும் என்று சொல்லுவர் புலவர். ]

(உ-ம்.) ஒரு பஃது, ஒருபது. &c.



**196.** EXCEPTION TO (165, 10, 20.) &c.: WITH UNITS FOLLOWING THEM.

௧௯௬. ஒருபஃ தாதிமுன் ஒன்றுமுதல் ஒன்பான்
எண்ணும், அவைஊர் பிறவும், எய்தின்
ஆய்தம் அழியஆண் டாகுந் தவ்வே.
[ வி௵ 159. ]

[ ஒருபஃதாதி ஆய எட்டெண்களின் முன்னும் ஒன்றாதி ஒன்பதெண்ணும், அவைஊர்ந்த பிறவும், வந்துபுணருமாயின் ஆய்தம்கெட அந்நிலைக்களத்து இயல்பாய தகரம்வரும். ]

(உ-ம்.) ஒருபத்தொன்று,
இருபத்திரண்டு, இருபத்தொன்றேகால்.
முப்பத்துமூன்று, எண்பத்தெண்கலனே தூணி.



**197.** EXCEPTION TO (165.): TEN FOLLOWED BY DIGITS, &c., TAKES இன் OR இற்று.

௧௯௭. ஒன்றுமுதல் ஈரைந் தாயிரம், கோடி
எண்ணிறை, அளவும், பிற,வரில் பத்தின்

ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னும் இற்றும்
ஏற்ப தேற்கும் ஒன்பதும் இனைத்தே.
[ வினா 159. ]

[ ஒன்றுமுதல் ஆகிய பத்தும், ஆயிரமும், கோடியும் என்னும் எண்ணுப் பெயரும், நிறைப்பெயரும், அளவுப்பெயரும், பிறபெயரும், வந்து புணருமாயின் நிலைமொழிஆகிய பத்தென்னும் எண்ணினது ஈற்றுயிர்மெய்யைக் கெடுத்து அந்நிலைக்களத்து இன்சாரியை எனும், இற்றுச்சாரியை எனும் ஆண்டைக்கேற்பதேற்று நிற்கும்; ஒன்பதென்னும் நிலைமொழியும் இங்ஙனம் விதந்த எண்ணுதிப்பெயர்வந்து புணரும் ஆயின் இன் எனும், இற்றெனும், ஆண்டைக் கேற்பதேற்று நிற்கப்பெறும். ]

(உ-ம்.) பதினொன்று, பதிற்றொன்று, பதின்மடங்கு.
ஒன்பதினாயிரம், ஒன்பதிற்றொன்று.



**198.** EXCEPTION TO (165.): TEN AND TWO=பன்னிரண்டு.

கஅ௲. இரண்டு முன்வரில் பத்தின்ஈற் றுயிர்மெய்
கரந்திட ஒற்றுனவ் வாகும் என்ப.
[ வினா 159. ]

[ இரண்டென்பது வரில் பத்தென்னும் நிலைமொழியினது ஈற்றுயிர் மெய்கெடத்தகர ஒற்று னகர ஒற்றாகத் திரியும் என்று சொல்லுவர் புலவர். ]

(உ-ம்.) பத்து + இரண்டு = பன்னிரண்டு.



**199.** EXCEPTION TO (165.): NUMERALS REPEATED, DISTRIBUTIVES.

கஅக. ஒன்ப தொழித்தஎண் ஒன்பதும் இரட்டில்
முன்னதின் முன்அல ஓட உயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி.
[ வினா 159. ]

[ ஒன்பதென்னும் எண் ஒன்றனையும் ஒழித்து நின்ற ஒன்றாதி பத்தீறான எண் ஒன்பதனையும் இரட்டித்துக்கூறின் நிலைமொழி முதலெழுத்தொன்று நிற்க அல்லன எல்லாம்கெட உயிர்முதலான எண்வரின் வகர ஒற்று, மெய்முதலான எண்வரின் அவ்வந்த ஒற்று மிகுதல், முறைமை ஆம். ]

(உ-ம்.) ஒவ்வொன்று, இவ்விரண்டு, ஐவ்வைந்து, அவ்வாறு.
மும்மூன்று, நன்னான்கு.
எவ்வேழு, எவ்வெட்டு.
பப்பத்து.



## கக. § ஊகாரஈற்றுச்சிலசொற்கள்.

**200.** EXCEPTION TO (165.): NAMES OF FLOWERS.

உ00. பூப்பெயர் முன்இன மென்மையுந் தோன்றும்.
[ விஞ 119. ]

[ பூ என்னும் பலபொருட் பெயர்ச்சொல் முன் வல்லினம் வரின் பொதுவிதியான் க,சத,ப மிகுதலே அன்றி, அவற்றிற்கினம்ஆகிய மெல்லொற்றுகளுமிகும். ]

(உ-ம்.) பூ + கொடி = பூங்கொடி.
பூ + சோலை = பூஞ்சோலை.
பூ + கொடி = பூக்கொடி.
பூ + சோலை = பூச்சோலை.



## கஉ. § ஏ,ஓ ஈற்றுச்சிலசொற்கள்.

**201.** EXCEPTION TO (165.): ஏ AND ஓ FINALS.

உ0க. இடைச்சொல் ஏ,ஓ முன்வலி இயல்பே.
[ விஞ 27. ]

[ இடைச்சொல் ஆய ஆறு ஏகாரத்தின் முன்னும், எட்டு ஓகாரத்தின் முன்னும், வல்லினம் வருமாயின் பொதுவிதியான் மிகாது இயல்பாம். ]

(உ-ம்.) அவனேகொண்டான்.
அவனோகொண்டான்.



## கங. § ஐகார ஈற்றுச்சிலசொற்கள்.

**202.** EXCEPTION TO (165.): FINAL ஐ.

உ0உ. வேற்றுமை ஆயின் ஐகான் இறுமொழி
ஈற்றழி வோடும்அம் ஏற்பவும் உளவே.
[ விஞ 161. ]

[ஐகார ஈற்றுச்சொல் வேற்றுமைக்கண் வருமாயின் இறுதி ஐகாரங் கெடாது, அம்முச் சாரியை பெற்றுமுடிவனவும், ஐகாரங்கெட்டு, அம் முச்சாரியை பெற்று முடிவனவும் சிலவுள ஆம்.]

(உ-ம்.) தாழை + காய் = தாழங்காய்.
புன்னை + கானல் = புன்னையங்கானல்.



**203.** EXCEPTION TO (165.): THE WORD பனை IN COMBINATION.

உ0௩. பனைமுன் கொடிவரின் மிகலும், வலிவரின் ஐபோய்
அம்மும், திரள்வரின் உறழ்வும், அட்டுறின்
ஐகெட டந்நீ ளலும்ஆம் வேற்றுமை.

[பனையென்னும் பெயர்முன் கொடி என்னும் பெயர் வருமாயின், வந்தது மிகுதலும்; க, ச, த, பக்கள் வரின் நிலைமொழி ஈற்று ஐகாரம் கெட்டு, அம்முப்பெறுதலும், திரள் என்னும் பெயர் வருமாயின் வந்தது மிகுந்தும், ஐபோய் அம்முப்பெற்றும், தம்முள் உறழ்தலும், அட்டு என்னும் பெயர் வருமாயின் ஐகாரம் கெட வருமொழி அகரம் ஆகாரம் ஆதலும், ஆம்வேற்றுமைக்கண்.]

(உ-ம்.) பனை + கொடி = பனைக்கொடி.
பனை + காய் = பனங்காய்.
பனை + திரள் = பனைத்திரள.
பனை + அட்டு = பனாட்டு.

உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.

# நன்னூல்.

## I. எழுத்ததிகாரத்தில்

## (IV.) மெய்யீற்றுப்புணரியல்.

### க. § மெய்யீற்றின் முன்உயிர்.

**204.** NATURAL COMBINATION: GENERAL RULE.

உ0ச உடல்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே.

[ வி௵ 19. ]

[ நிலைமொழி ஈற்றில் நின்ற மெய்யின்மேல் வருமொழிமுதல் உயிர் வந்து ஒன்றுபட்டு இணங்கி நிற்பது இயல்பு புணர்ச்சியே ஆம். ]

**205.** EXCEPTION TO (204.): CONSONANTS AFTER A SHORT MONOSYLLABIC WORD.

உ0ரு. தனிக்குறில் முன்னொற் றுயிர்வரின் இரட்டும்.

[ வி௵ 29. ]

[ தனிக்குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டித்து நிற்கும். ]

### உ. § மெய்யீற்றின் முன்மெய்.

**206.** ய் AFTER A CONSONANT; A DOUBTFUL RULE.

உ0சு. தன்ஒழி மெய்முன் யவ்வரின் இகரம்
துன்னும் என்று துணிநரும் உளரே.

[யகரம் தன்னை ஒழிந்த ஞ, ண, ந, ம, ன, ர, ல, வ, ழ, ள என்னும் பத்து மெய்முன்னும் வந்தால் தன்முன் இகரச்சாரியை பொருந்தும் என்று அரிதிற்கொள்வாரும் சிலர் உளர்.]

(உ-ம்.) மண் + யாது = மண்ணியாது.

**207.** CERTAIN VERBAL NOUNS AND IMPERATIVES TAKE உ.

உ0எ. ஞ, ண, ந, ம, ல, வ, ள, ன ஒற்றிறு தொழிற்பெயர்,
ஏவல் வினை,நனி யவ்வல் மெய்வரின்
உ உறும்; ஏவல் உறுசில சில்வழி.

[ய, ர ழக்களை ஒழிந்த எட்டொற்றும் இறுதி ஆகும் முதனிலைத் தொழிற்பெயரும், ஏவல்வினையும், மேல்விதந்த யகரம் ஒழிந்த மெய்வருமாயின் பெரும்பாலும் உகரச்சாரியை இறுதிக்கண் பொருந்தும்; சில ஏவல்வினை அவ்வுகரச் சாரியையைப் பொருந்தா சில இடங்களின்.]

(உ-ம்.) தின் { + கடிது = தின்னுக்கடிது.
{ + கடுமை = தின்னுக்கடுமை.
உண் + சாத்தா = உண்ணுசாத்தா.

பல், பல்லு; கள், கள்ளு; வாழ், வாழு,
என்பனவும் இவைபோல்வனவும் வரும்.

**208.** CERTAIN RADICAL VERBALS IN ந்.

உ0அ. நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வும்ஆம் வேற்றுமை.

[நகரம் இறுதிஆகு முதனிலைத் தொழிற்பெயர்க்கு உகரச்சாரியையே அன்றி அகரச்சாரியையும், ஆம் வேற்றுமைக்கண்.]

(உ-ம்.) பொருந் + கடுமை = பொருநக்கடுமை, பொருநுக்கடுமை.

## ௩. § ண,ன ஈற்றுச்சொற்கள்.

**209.** ண் AND ன் CHANGED INTO ட் AND ற்.

உ0க. ண, ன வல்லினம்வரட் ட,ற வும்; பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்து மெய்வரினும் இயல்பா கும்மே.
[விஞ 34. 35. 37.]

[ணகார னகாரங்கள் வேற்றுமைக்கண் வல்லினம் வந்தால் முறையே டகாரமும், றகாரமும் ஆம், மெல்லினமும் இடையினமும் வந்தால் இயல்பாம். அல்வழிக்கண் மூவினம்வந்தாலும் இயல்பே ஆம்.]

(உ-ம்.) (1.) சிறுகண் + களிறு = சிறுகட்களிறு
பேர்அமர்க்கண் + பேதை = பேர் அமர்க்கட்பேதை. [வேற்றுமைவழி.]
பொன் + தட்டு = பொற்றட்டு.

(2.) மண், பொன். } + நீட்சி, வன்மை. [இயல்பு.- வேற்றுமைவழி.]

(3.) மண், பொன். } + கடிது, நீண்டது, வலிது. [இயல்பு. அல்வழி.]



**210.** ண் AND ன் DROPPED BEFORE ந.

௨௧௦. குறில்அணை வில்லா ண,னக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.
[விஞ 40.]

[தனிக்குறில் ஒன்றனையும் ஒழிந்து ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்த ணகார னகாரங்கள் வருமொழிக்கு முதலாக வந்த நகரம் மயக்க விதி இன்மையில் திரிந்த இடத்து இயல்பாகாது கெடுதலைப்பொருந்தும்.]

(உ-ம்.) தாண் + { நன்று = தாணன்று. நன்மை = தாணன்மை.
பயன் + { நன்று = பயனன்று. நன்மை = பயனன்மை



**211.** CERTAIN NOUNS IN ண்.

௨௧௧. சாதி, குழூஉப், பரண், கவண், பெயர் இறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண், சாண், பிற
டஆ கலும்ஆம் அல்வழி யும்மே.

[சாதி பற்றியும், திரள்பற்றியும், வரும் பெயர்களும், பரண், கவண் என்னும் பெயர்களும் ஆனவற்றின் இறுதி ணகரம் வேற்றுமைக்கண்ணும் வல்லினம்வந்தால் இயல்பாம்; எண்ணல் அளவை, அன்றி உணவிற்குரிய எள்ளின் திரிசொல் ஆய எண் என்னும் பெயரும், சாண் என்னும் நீட்டல் அளவைப் பெயரும், வல்லெழுத்துகள்வரில் திரிந்து டகரம் ஆகலும் பொருந்தும் அல்வழிக்கண்ணும்.]

(உ-ம்.) உமண் + குடி = உமண்குடி.
பரண் + கால் = பரண்கால்.
கவண் + கால் = கவண்கால்.

---

எண் + கடிது = எட்கடிது. [எண்கடிது. உ0அ.]
சாண் + கோல் = சாட்கோல். [சாண்கோல். உ0அ.]

---

**212.** CERTAIN NOUNS IN ன்.

உகஉ. னஃகான் கிளைப்பெயர் இயல்பும், அஃகான்
அடைவும் ஆகும், வேற்றுமைப் பொருட்கே.

[ னகர ஈற்றுச் சாதிப்பெயர் வல்லினம் வர ஈறு திரியாதியல்பாதலும், அகரச்சாரியை பெறுதலும் ஆம், வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண். ]

(உ-ம்.) எயின் + குடி = எயின்குடி, எயினக்குடி.

---

**213.** THE WORD மீன்.

உகஙு. மீன்றவ் வொடுபொருஉம் வேற்றுமை வழியே.

[ மீன் என்னும் மொழிஇறுதி னகரம் வேற்றுமைக்கண் வல்லெழுத்து வரின் றகரத்தோடுறழ்ந்து வரும். ]

(உ-ம்.) மீன் + கண் = மீன்கண், மீற்கண்.

---

**214.** THE WORD தேன்.

உகச. தேன்மொழி மெய்வரின் இயல்பு மென்மை
மேவின் இறுதி அழிவும், வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலும்ஆம், இருவழி.

[ தேன் என்னும் சொல் மூவினமெய்யும் வரின் இறுதி னகரம் இயல்பாதலும், மெல்லினம் வரின் அவ்விறுதி இயல்பாதலே அன்றிக்கெடுதலும், வல்லினம் வரின் இறுதி இயல்பாதலே அன்றிக்கெட வந்த வல்லினமாதல் அதற்கினமாதல் மிகுதலும் ஆம் இருவழிக்கண்ணும். ]

(உ-ம்.) தேன் + கடிது = தேன்கடிது.
+ கடுமை = தேன்கடுமை.

---

தேன் + மொழி = தேமொழி.

---

தேன் + குழம்பு = தேக்குழம்பு, தேங்குழம்பு, தேன்குழம்பு.

### 215. THE WORD எகின்.

உகரு. மரம்அல் எகின்மொழி இயல்பும், அகர
மருவ வலிமெலி மிகலும் ஆகும்.

[ மரம் அன்றிப் பறவை ஆய அன்னத்தை உணர்த்தும் எகின் என்னும் சொல் வேற்றுமைக் கண்ணும் வல்லினம்வர இறுதி இயல்பாதலும், இரு வழியும் அகரச் சாரியையைப் பொருந்தவரும், வல்லெழுத்தாதல் அவற்றிற்கினமாதல் மிகுதலும் ஆம். ]

(உ-ம்.) எகின் + கால் = எகின்கால். [வேற்றுமை.]

எகின் + புள் = எகினப்புள், எகினம்புள். [அல்வழி.]

எகின் + கால் = எகினக்கால், எகினங்கால்.

### 216. THE WORDS குயின், ஊன்.

உகசா. குயின்ஊன் வேற்றுமைக் கண்ணும் இயல்பே.

[ குயின் என்னும்பெயரும், ஊன் என்னும்பெயரும், வல்லினம்வரின் அல்வழிக்கண் இயல்பாதலே அன்றி வேற்றுமைக்கண்ணும் இயல்பாம். ]

### 217. THE WORDS மின், பின், பன், கன்.

உகஎ. மின்,பின், பன்,கன், தொழிற்பெயர் அனைய
கன், அவ்வேற்று மென்மையோ டுறழும்.

[ இந்நான்கு சொல்லும் தொழிற்பெயர்போல யவ்வல் மெய்வரின். உகரச் சாரியையைப் பொருந்தும்; இவற்றுள், கன் என்னும்சொல் உகரச் சாரியையே அன்றி, அகரச் சாரியையும் பெற்று வல்லினம்வந்தால் வரும் எழுத்தாதல் அதற்கினம்ஆதல், மிகப்பெறும். ]

(உ-ம்.) மின் + கடிது = மின்னுக்கடிது.
பின் + கடிது = பின்னுக்கடிது.
பன் + கடிது = பன்னுக்கடிது.
கன் + கடிது = கன்னுக்கடிது.

கன் + தட்டு = கன்னத்தட்டு.
கன் + தூக்கு = கன்னத்தூக்கு, கன்னந்தூக்கு.

**218.** THE WORDS *தன்*, *என்*, *நின்*.

உகஅ. தன்,என், எனபவற் றீற்றுனவ் வன்மையோ
டுறழு நின்ஈ றியல்பாம் உறவே.

[ தான் என்பது தன் என்றும், யான் என்பது என் என்றும், வரும் விகார மொழிகளின் ஈற்று னகரம் வல்லினம் வரின் பொது .விதியானே றகரமாய்த் திரிதலும் அவ்விதி ஏலாது இயல்பாதலும் ஆம். நீ என்பது நின் எனநின்ற விகார மொழி ஈற்று னகரம் வல்லினம் வரில் திரியாதியல்பேயாம். ]

(உ-ம்.) தன் + பகை = தன்பகை, தற்பகை.
என் + பகை = என்பகை, எற்பகை
நின் + பகை = நின்பகை.

சு. § ம், ஈறு.

**219.** FINAL *ம்* GENERAL RULE.

உகக. மவ்வீ றொற்றழிந் துயிர்ஈ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவும் ஆகும்.
[ வினா 32. 33. ]

[ மகர ஈற்றுச்சொற்கள் இறுதி மகரம் கெட விதிஉயிர் ஈறாய் நின்று இயல்புயிர் ஈறுபோல உயிர்வரின் உடம்படுமெய் தோன்றவும், வல்லினம் வரின் அவை மிகவும், மெல்லினமும் இடையினமும் வரின் இயல்பாகவும், புணர்வனவும் வல்லினம்வரில் கெடாது அவற்றிற் கினமாய்த் திரிவனவும் ஆம். ]

(உ-ம்.)
வட்டம் + ஆழி = வட்டவாழி.
வட்டம் + கடல் = வட்டக்கடல்.
வட்டம் + நேமி = வட்டநேமி.
வட்டம் + வாரி = வட்டவாரி.

நாம் + கடியம் = நாங்கடியம்.
நம் + கை = நங்கை.
நும் + செவி = நுஞ்செவி.
நும் + தலை = நுந்தலை.

**220.** EXCEPTION: SOME WORDS IN *ம்*.

உஉ0. வேற்றுமை மப்போய் வலிமெலி உறழ்வும்
அல்வழி உயிர் இடை வரின்இயல் பும்உள.

[ வேற்றுமைக்கண் மகர இறுதி கெட அவற்றின்முன் வரும் வல்லின மாதல் அவற்றிற் கினமாதல் மிகுதலும், அல்வழிக்கண் உயிரும் இடையி னமும் வரில் கெடாது இயல்பாதலும் உளஆம். ]

(உ-ம்.) குளம் + கரை = குளக்கரை, குளங்கரை.
பழம் + சாறு = பழச்சாறு, பழஞ்சாறு.

**221.** EXCEPTIONS TO (219.): நும், தம், எம், நம்.

உஉக. நுந்,தம், எம்,நம், ஈறு மவ்வரு ஞ,ந,வே.

[ இந்நான்கு விகார மொழிகள் ஈற்று மகரம், மேல் வரும் ஞ, ந க்கள் ஆகத் திரியும். ]

(உ-ம்.) நும் + ஞாண் = நுஞ்ஞாண்.
தம் + நூல் = தந்நூல்.
எம் + நாள் = எந்நாள்.
நம் + ஞானம் = நஞ்ஞானம்.

**222.** EXCEPTION TO (219.): THE WORD அகம்.

உஉஉ. அக முனர்ச் செவி,கை, வரின்இடை யனகெடும்.

[ அகம் என்னும் இடைப்பெயர் முன்னர்ச் செவி, கை என்னும் சினைப்பெயர் வரின் நிலைமொழி இறுதிமகரம் வன்மைக் கினமாத் திரிதலே அன்றி, அதன் இடைநின்ற ககரஒற்றும் அதனை ஊர்ந்த அகர உயிரும் கெடும். ]

(உ-ம்.) அகம் + கை = அங்கை.
அகம் + செவி = அஞ்செவி.

**223.** EXCEPTION TO (219.): THE WORDS ஈம், கம் AND உரும்.

உஉங. ஈமுங் கம்மும் உருமுந் தொழிற்பெயர் மானும்,
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

[ இம்மூன்று சொல்லும் இருவழியும் முதனிலைத் தொழிற் பெயர்போல யவ்வன்மெய் வரின் உகரச் சாரியை பெற்று முடியும்; இவற்றுள், முதற் கணின்ற ஈமும் கம்மும் வேற்றுமைக்கண் உகரச் சாரியைஅன்றி அகரச் சாரியையும் பெறும். ]

(உ-ம்.) ஈம் + கடிது = ஈமுக்கடிது.
ஈம் + குடம் = ஈமக்குடம்.
கம் + குடம் = கம்மக்குடம்.

## ரு. § ய், ர், ழ் ஈறு.

### 224. FINAL ய், ர், ழ்.

உஉச. ய,ர,ழ முன்னர்க் க,ச,த,ப அல்வழி
இயல்பு மிகலும் ஆகும்; வேற்றுமை
மிகலும், இனத்தோ டுறழ்தலும், விதிமேல்.
[ விஞ 30. ]

[ இம்மூன்று ஈற்றின் முன்னும் க,ச,த,பக்கள் வரின் அல்வழிக்கண் இயல்பாதலும்; மிகுதலும்; வேற்றுமைக்கண் மிகுதலும்; வல்லினமாதல், மெல்லினமாதல், மிகுதலும் விதி ஆம். ]

[அல்வழி.]

(உ-ம்.) வேய் + கடிது = வேய்கடிது. | மெய் + கீர்த்தி = மெய்க்கீர்த்தி.
வேர் + சிறிது = வேர்சிறிது. | கார் + பருவம் = கார்ப்பருவம்.
வீழ் + பெரிது = வீழ்பெரிது. | சூழ் + தண்ணீர் = சூழ்த்தண்ணீர்.

[வேற்றுமை.]

நாய் + கால் = நாய்க்கால். | வேய் + குழல் = வேய்ங்குழல், வேய்க்குழல்.
தேர் + கால் = தேர்க்கால். | ஆர் + கோடு = ஆர்ங்கோடு, ஆர்க்கோடு.
பூழ் + கால் = பூழ்க்கால்.

### 225. THE WORDS தமிழ் AND தாழ்.

உஉரு. தமிழ்அவ் வுறவும் பெறும்,வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமேல் அற்றே.

[ தமிழ் என்னும் சொல் நாற்கணமும் வரின் வேற்றுமைக்கண் அகரச் சாரியையைப் பொருந்தவும் பெறும் தாழ் என்னும் சொல்லும் கோல் என்னும் சொல்வந்து பொருந்துமாயின் அவ்வகரச் சாரியையைப் பெறும். ]

(உ-ம்.)
தமிழ் + அரசன் = தமிழவாசன்.
தமிழ் + பல்லவதரையர் = தமிழப்பல்லவதரையர்
தமிழ் + நாகன் = தமிழநாகன்.
தமிழ் + வளவன் = தமிழ வளவன்.
தாழ் + கோல் = தாழக்கோல்.

### 226. THE WORD கீழ்.

உஉசு. கீழின்முன் வன்மை விகற்பமும் ஆகும்.

[ கீழ் என்னும் சொல் முன்வரும் வல்லினம் ஒருகால் இயல்பாகியும், ஒருகால் மிக்கும்வரும், விகற்பத்தையும் பொருந்தும். ]

(உ-ம்.) கீழ் + குலம் = கீழ்குலம், கீழ்க்குலம்.

---

## சு. § ல், ள், ஈறு.

### 227. ல் AND ள் CHANGED INTO ற் AND ட்.

உஉஎ. ல,ள,வேற் றுமையில் ற,டவும்; அல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரின் ஆமெலி
மேவின் ன,ண,வும், இடைவரின் இயல்பும்,
ஆகும் இருவழி யானும் என்ப.

[ வினா 34. 35. ]

[ லகார ளகாரம் ஆன இரண்டீறும் வல்லினம் வரின் வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்கள் ஆம்; அல்வழிக்கண்ணே றகார டகாரங்களுடனே உறழ்வன ஆம்; இருவழிக்கண்ணும் மெல்லினம் வரின் னகார ணகாரங்கள் ஆம் இடைஇனம் வரின் இயல்பாம், என்று சொல்லுவர் புலவர். ]

(உ-ம்.) கல் + குறை = கற்குறை. [வேற்றுமை.]
முள் + குறை = முட்குறை. [வேற்றுமை.]

கல் + குறிது = கல்குறிது, கற்குறிது. [அல்வழி.]
முள் + சிறிது = முள்சிறிது, முட்சிறிது. [அல்வழி.]

கல் + மேல் = கன்மேல்.
முள் + மேல் = முண்மேல்

கல் + மலை = கன்மலை.
முள் + முடி = முண்முடி.

---

### 228. ல் AND ள் INTO ஃ.

உஉஅ. குறில்வழி ல,ளத்த அணையின் ஆய்தம்
ஆகவும் பெறூஉம் அல்வழி யானே.

[ வினா 37. 38 ]

[ தனிக்குறிலின் பின்னின்ற லகர ளகரங்கள் அல்வழிக்கண்ணே தகரம் வருமாயின் றகர டகரங்கள் ஆகத்திரிதலே அன்றி ஆய்தம்ஆகத் திரிதலையும் பொருந்தும். ]

(உ-ம்.) கல் + தீது = கஃறீது.
முள் + தீது = முஃடீது.

### 229. ல் AND ள் BEFORE த் AND ந.

உஉகூ. குறில்செறி யா ல,ள, அல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடும், ஈர்இடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும், வலிவரின்
இயல்புந், திரிபும், ஆவன உளபிற.
[ வி௵ 37. 38. 39. ]

[ தனிக்குறில் ஒன்றனையும் சேராது வரும் லகார ளகாரங்கள் அல்வழிக் கண் வந்த தகரம் திரியும் இடத்துக் கெடுதலும், இருவழிக் கண்ணும் வந்த நகரம் திரியும் இடத்துக் கெடுதலும், வல்லினம் வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாதலும், திரிதலும், வேற்றுமைக்கண் திரியாது இயல்பாதலும், பொருந்துவன உள.]

(உ-ம்.) வேல் + தீது = வேறீது. | வேல் + நன்று = வேனன்று.
வாள் + தீது = வாடீது. | வாள் + நன்று = வாணன்

கால் + கடிது = கால்கடிது | வேல் + நன்மை = வேனன்மை.
தேன் + சிறிது = தேன்சிறிது. | வாள் + நன்மை = வாணன்மை.

அழுகல் + காய் = அழுகற்காய்.
வாள் + படைக்கையன் = வாட்படைக்கையன்.

### 230. VERBAL NOUNS IN ல், ள்.

உ௩0. ல,ள,இறு தொழிற்பெயர் ஈர்இடத்தும் உவ்வுறு
வலிவரின்; அல்வழி இயல்பும் ஆவனஉள.

[லகாரத்தை இறுதி ஆகவுடைய விகுதி பெற்ற தொழிற்பெயரும், ளகாரத்தை இறுதி ஆகவுடைய முதனிலைதிரிந்த தொழிற்பெயரும் முதனிலைத் தொழிற்பெயர்போல யவ்வல் மெய்வரின் உகரம் பெறுதோ பெறாவோ என்று ஐ உறற்க: இருவழியும் உகரம் பெறாவாம், வல்லினம் வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாவனவும் சிலஉள.]

(உ-ம்.) ஆடல் + கடிது = ஆடற்கடிது, ஆடல்கடிது.
கோள் + கடிது = கோட்கடிது, கோள்கடிது.

ஆடல் + கடுமை = ஆடற்கடுமை.
கோள் + கடுமை = கோட்கடுமை.

ஆடல் + நன்மை = ஆடனன்மை.
கோள் + நன்மை = கோணன்மை.

**231.** THE WORD வல்.

உ௱௬௧. வல்லே தொழிற்பெயர் அற்றிரு வழியும்;
பலகை,நாய் வரினும் வேற்றுமைக் கவ்வும்ஆம்.

[ "வல்" என்னும் சூதாடு கருவிப்பெயர் அவ்வல் மெய்வரின் தொழிற் பெயரே போல இருவழியும் உகரச் சாரியைபெறும்; பலகை, நாய் என்னும் இருபெயர் வரினும், பிறபெயர் வரினும், வேற்றுமைக்கண் அகரச் சாரியையும் உகரச் சாரியையும் பெறும். ]

(உ-ம்.) வல் + கடிது = வல்லுக்கடிது.
வல் + கடுமை = வல்லுக்கடுமை.
வல் + பலகை = வல்லப்பலகை.
வல் + நாய் = வல்லநாய்.

---

**232.** THE FOUR WORDS, நெல், செல், கொல் AND சொல்.

உ௱௬௨. நெல்லுஞ், செல்லுங், கொல்லுஞ், சொல்லும்,
அல்வழி யானும் றகரம் ஆகும்.

[ இந்நான்கு சொல்லும் வல்லினம் வரின் பொதுவிதியான் உறழாது, அல்வழிக் கண்ணும் வேற்றுமைபோல றகரமாய்த் திரிந்து முடியும். ]

---

**233.** இல் FOLLOWED BY ஐ AND ஆ.

உ௱௬௩. இல்லென் இன்மைச் சொற்கை அடைய
வன்மை விகற்பமும், ஆகா ரத்தொடு
வன்மை ஆகலும், இயல்பும் ஆகும்.

[ இல்லிடத்தை உணர்த்தாது இன்மைப் பண்பை உணர்த்தி நிற்கும் "இல்" என்னும் சொற்கு ஐகாரச் சாரியை பொருந்த அவ்வழி வரும் வல் லினம் விகற்பித்தலும், ஆகாரச் சாரியை பொருந்த அவ்வழி வரும் வல்லி னம் மிகுதலும், இவ்விரு விதியும் பெறாது இயல்பாதலும் பொருந்தும். ]

(உ-ம்.) இல் + பொருள் = இல்லைபொருள், இல்லைப்பொருள்.
இல் + பொருள் = இல்லாப்பொருள்.
இல் + பொருள் = இல்பொருள்.

**234.** THE WORDS புள் AND வள்.

உ௱௩௪. புள்ளும், வள்ளுந், தொழிற்பெயரு மானும்.

[ இவ்விரு சொற்களும் இருவழியும் யவ்வல் மெய்வரின் பொது விதியான் முடிதலே அன்றித் தொழிற்பெயர் போல உகரச் சாரியை பெற்றும் புணரும். ]

(உ-ம்.) புள் + கடிது, கடுமை = புள்ளுக்கடிது, புள்ளுக்கடுமை.
வள் + கடிது, கடுமை = வள்ளுக்கடிது, வள்ளுக்கடுமை.

எ. § வ், ஈறு.

**235.** DEMONSTRATIVES IN வ்: SPECIAL RULE.

உ௱௩௫. சுட்டு வகரமூ வினம்உற முறையே
ஆய்தமு மென்மையும், இயல்பும் ஆகும்.

[ "அவ்," "இவ்," "உவ்" என்னும் அஃறிணைப் பன்மைச் சுட்டுப்பெயர் ஈற்று வகரம் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் வர முறையானே ஆய்தமும், வருமெல்லினமும், இயல்பும் ஆம். ]

(உ-ம்.) அவ் + கடிது = அஃகடிய.
அவ் + ஞானம் = அஞ்ஞானம்.
அவ் + யானை = அவ்யானை.

**236.** THE WORD தெவ்: SPECIAL RULE.

உ௱௩௬. தெவ்வென் மொழியே தொழிற்பெயர் அற்றே
மவ்வரின் வஃகான் மவ்வும் ஆகும்.

[ "தெவ்" என்னும் சொல் யவ்வல் மெய்யோடு புணரும் இடத்துத் தொழிற்பெயர்போல உகரச் சாரியை பெற்று முடியும்; அவற்றுள் மகரம் வருங்கால் உகரச் சாரியை பெறுதலே அன்றி, ஒரோவழி ஈற்றுவகரம் மகரமாகத் திரியவும் பெறும். ]

(உ-ம்.) தெவ் + கடிது = தெவ்வுக்கடிது
தெவ் + மன்னர் = தெம்மன்னர்.

**237.** த AND ந AFTER ன, ல AND ண, ள.

உ௱எ. ன,ல முன் ற,ன வும்; ண,ள,முன் ட,ண வும்;
ஆகுந் த,ந க்கள் ஆயுங் காலே.

[ விஞ. 38. 39. ]

[ னகர லகரங்கள் முன்னர் வருந் தகரம் றகரமாம்; அவற்றின் முன்னர் வரும் நகரம் னகரம்ஆம்; ணகர ளகரங்களின் முன்னர் வருந் தகரம் டகரம் ஆம்; அவற்றின் முன்னர்வரும் நகரம் ணகரம்ஆம், ஆராயுங்காலத்து. ]

(உ-ம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பொன் | + | தீது, | தீமை | = | பொன்றீது, பொற்றீமை. |
| கல் | + | தீது, | தீமை | = | கற்றீது, கற்றீமை. |
| மண் | + | தீது, | தீமை | = | மண்டீது, மண்டீமை. |
| முள் | + | தீது, | தீமை | = | முட்டீது, முட்டீமை. |
| பொன் | + | நன்று, | நன்மை | = | பொன்னன்று, பொன்னன்மை. |
| கல் | + | நன்று, | நன்மை | = | கன்னன்று, கன்னன்மை. |
| மண் | + | நன்று, | நன்மை | = | மண்ணன்று, மண்ணன்மை. |
| முள் | + | நன்று, | நன்மை | = | முண்ணன்று, முண்ணன்மை. |

அ. § புறநடை.

**238.** GENERAL RULE IN REGARD TO MEMBERS OF WORDS.

உ௱அ. உருபின் முடிபவை ஒக்கும் அப்பொருளினும்.

[ மேல் உருபு புணர்ச்சிக்கண் முடியும் முடிபுகள் அப்பொருட் புணர்ச்சிக் கண்ணும் ஒக்கும். ]

**239.** ANALOGY TO BE OUR GUIDE IN CASES NOT SPECIFIED.

உ௱கூ. இடை,உரி, வடசொலின், இயம்பிய கொளாதவும்
போலியு மரூஉம் பொருந்திய ஆற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே.

[ இடைச் சொல்லினும் உரிச் சொல்லினும் வடசொல்லினும் உயிர் ஈறும் ஒற்றீறும் ஆன புணரியலில் தோன்றல் திரிதல் கெடுதல் இயல்பென ஓதிய புணர்ச்சி இலக்கணங்கள் பொருந்தாது வேறுபட்டு வருவனவும், இலக்கணப்போலி மொழிகளும், மரூஉமொழிகளும், இருவகை வழக்கினும் நடக்கு முறைமை அறிந்து அதற்குப் பொருந்தும் ஆறு புணர்க்கை அறிவுடையோர் எல்லார்க்கும் முறைமை. ]

மெய்யீற்றுப்புணரியன் முற்றிற்று.

# நன்னூல்.



## I. எழுத்ததிகாரத்தில்

### (V.) உருபு புணரியல்.

க. § உருபுகள்.

**240.** THE FORTY INFLECTIONAL PARTICLES.

உ௪0. ஒருவன், ஒருத்தி, பலர்,ஒன்று, பல,என
வருபெயர் ஐந்தொடு, பெயர்முதல் இருநான்
குருபும் உறழ்தர நாற்பதாம் உருபே.
[ வி௵ 55. ]

[ இப்பாற் பொருளின என்று கருத வரும் ஐந்து பெயருடனே, எழுவாய் வேற்றுமையான பெயர்முதலாக விளி ஈறாக நின்ற எட்டு உருபினையும், உறழ வேற்றுமை உருபுகள் நாற்பதாம். ]



**241.** SIGNS OF CASE.

உ௪க. பெயர்வழித் தம்பொரு டாவரும் உருபே.

[ வேற்றுமை உருபுகள் தம்பொருளைத் தரப் பெயர்க்குப்பின்வரும். ]



**242.** THESE TERMINATIONS COMBINE WITH NOUNS ACCORDING TO THE PRECEDING RULES: GENERAL RULE.

உ௪உ. ஒற்றுயிர் முதல்ஈற் றுருபுகள் புணர்ச்சியின்
ஒக்குமன், அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.

[ தொகாநிலையாய வேற்றுமைப் புணர்ச்சிக்கண், இடையேநின்று நிலைமொழியோடும், வருமொழியோடும்,புணரும் ஒற்றுயிர்களை முதலும் ஈறும் ஆக உடைய ஐம்முதலிய வேற்றுமை உருபு ஆறும், இடைச்சொல்லே

னும் இயல்பொடு விகாரத்தினையும் புணர்ச்சி வகையால் பெரும்பாலும் ஒக்கும்போன இரண்டியல் உள்ளும் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் இயல்பொடு விகாரத்தினைந்த ஒற்றுயிர் முதல் ஈற்றுப் பெயர்களே. ]

———<<<◆>>>———

## ௨. § சாரியை.

**243.** THE USE OF EUPHONIC INCREMENTS: *சாரியை.*

௨௪௩. பதமுன் விகுதியும், பதமும், உருபும்,
புணர்வழி ஒன்றும் பலவுஞ் சாரியை,
வருதலுந் தவிர்தலும் விகற்பமும் ஆகும்.
[ வினா 108. ]

[ பதத்தின்முன் விகுதியேனும், பதமேனும், உருபேனும், புணரும் இடத்துச் சாரியை ஒன்றேனும், பலவேனும், வருதலும் வராதொழிதலும் இவ்விரண்டுமாகிய விகற்பமும் ஆம். ]

———<<<◆>>>———

**244.** A LIST OF SEVENTEEN GENERAL INCREMENTS.

௨௪௪. அன், ஆன், இன், அல் அற்று, இற்று அத்து அம்
தம், நம், நும், ஏ, அ, உ, ஐ, கு, ன,
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.
[ வினா 108. ]

[ அன்னும், ஆனும், இன்னும், அல்லும், அற்றும், இற்றும், அத்தும், அம்மும், தம்மும், நம்மும், நும்மும், ஏயும், அவ்வும், உவ்வும், ஐயும், குவ்வும், னவ்வும், இவைபோல்வன பிறவும் விகுதி, பதம், உருபு என்னும் மூன்று புணர்ச்சிக்கண்ணும், தனிமொழிக்கண்ணும் வருதலில் பொதுச்சாரியை என்னும் பெயரவாம். ]

(உ-ம்.)

| | |
|---|---|
| ஒன்றன்கூட்டம். [அன்.] | ஒருபாற்கு. [ஆன்.] |
| வண்டின்கால். [இன்.] | தொடையல். [அல்.] |
| பலவற்றை. [அற்று.] | பதிற்றுப்பத்து. [இற்று.] |
| மரத்திலே. [அத்து.] | புளியங்காய். [அம்.] |
| எல்லார் தம்மையும். [தம்.] | எல்லார் நம்மையும். [நம்.] |
| எல்லீர் நும்மையும். [நும்.] | கலனே தூணி. [ஏ.] |
| நடந்தது. [அ.] | சாத்தனுக்கு. [உ.] |
| பண்டைக்கால். [ஐ.] | உய்குவாய். [கு.] |
| ஆன்கன்று. [ன்.] | அவன் றன்னையும். [தன்.] |
| அவன்றான். [தான்.] | அவர்தாம். [தாம்.] |
| புற்றுஞ்சோறு. [ஆம்.] | |

## ரு. § சிறப்புவிதிகள்.

### 245. THE DECLENSION OF எல்லாம்.

உசரு. எல்லாம் என்ப திழிதிணை ஆயின்
அற்றோ டுருபின் மேல்உம் உறுமே;
அன்றே’ னம்மிடை அடைந்தற் றாகும்.
[ விஞ 67. ]

[ "எல்லாம்" என்னும் பொதுப்பெயர் அஃறிணைக்கண் ஆனகாலை அதனோடு ஆறுஉருபும் புணரின் இடையே அற்றுச் சாரியையும், உருபின் மேல் முற்றும்மையும் பெறும்; உயர்திணைக்கண் ஆனகாலை இடையே நம்முச்சாரியையும் உருபின்மேல் முற்றும்மையும் பெறும். ]

(உ-ம்.) எல்லாம், எல்லாவற்றையும் முதல்.
எல்லா நம்மையும் முதல்.



### 246. THE DECLENSION OF எல்லாரும், எல்லீரும்.

உசசு. எல்லாரும், எல்லீரும், என்பவற் றும்மை
தள்ளி நிரலே தம், நும், சாரப்
புல்லும் உருபின் பின்னர் உம்மே.

[ "எல்லாரும்" என்னும் உயர்திணைப் படர்க்கைப் பெயரோடும் "எல்லீரும்" என்னும்முன்னிலைப் பொதுப் பெயரோடும் ஆறு உருபும் புணரும் இடத்து அவ்விருபெயரின் இறுதிகளினின்ற முற்றும்மைகளைத் தள்ளி, அந்நிலைக் களங்களில் படர்க்கைப் பெயர்க்குத் தம்முச் சாரியையும், முன்னிலைப்பெயர்க்கு நும்முச் சாரியையும், பொருந்த அவற்றால் தள்ளுண்ட முற்றும்மைகள் உருபின்பின்னே வந்துபொருந்தும். ]

(உ-ம்.) எல்லார் தம்மையும் முதல்.
எல்லீர் நும்மையும் முதல்.



### 247. THE DECLENSION OF THE PERSONAL AND REFLEXIVE PRONOUNS.

உசஎ. தான், தாம், நாம்,முதல் குறுகும்; யான், யாம்,
நீ,நீர், என்,எம், நின்,நும், ஆம்பிற
குவ்வின் அவ்வரு’ நான்கா றிரட்டல.
[ விஞ 72. 74. ]

[ இங்ஙனம் கூறிய இருதிணைப்பொது ஆய மூவிடப்பெயர் ஏழோடும் ஆறு உருபும் புணரும் இடத்து, "தான்," "தாம்," "நாம்" என்னும் மூன்று பெயரும் நெடில்முதல் குறுகி, முறையே "தன்னை," "தம்மை," "நம்மை" என வரும்; "யான்," யாம், நீ, நீர் என்னும் நான்குபெயரும் முறையே "என்னை," "எம்மை," "நின்னை," நும்மை என வரும்; இவ்வேழு பெயரோடும் குவ்வுருபு புணரும் இடத்து இடையே "தனக்கு" என அகரச் சாரியை வரும்; குவ்வுருபின் அகரச் சாரியை வரினும் ஆறும் உருபுயிர்கள் வரினும் இவ்வேழு விகாரமொழிகளின் இறுதிய ஆய தனிக்குறில்முன் ஒற்றுக்கள் இரட்டாவாம். ]



**248.** THE DECLENSION OF ஆ, மா, கோ: EUPHONIC INSERTION OF ன்.

௨௪௮. ஆ, மா, கோ,ன அணையவும் பெறுமே.

[விஞ 65.]

[ ஆ என்னும் பெயரும், மா என்னும் விலங்கின் பொதுப்பெயரும், கோ என்னும் இறைவனை உணர்த்திநிற்கும் பெயரும், உருபுகள் புணரும் இடத்து, னகரச்சாரியை பொருந்தவும் பெறும். ]

(உ-ம்.) ஆ, ஆனை.
கோ, கோனை.
மா, மானை.



**249.** THE DECLENSION OF CERTAIN NOUNS OF NUMBER IN POETRY.

௨௪௯. ஒன்று முதல்எட் டீறும் எண்ணூர்
பத்தின்முன் ஆன்வரிற் பவ்வொற் றொழிய,மேல்
எல்லாம் ஓடும்; ஒன்பதும் இற்றே.

[ விஞ 159. ]

[ ஒன்றுமுதல் எட்டீறும் எண்களோடு புணர்ந்த பத்தென்னும் எண் முன்னர் உருபுகள் புணரும் இடத்து இடையே ஆன்சாரியை வரின், அப் பத்தென்னும் எண்ணினது பகர ஒற்றொன்றுமே நிற்க மேல் நின்ற எல்லா எழுத்தும் கெடும்; ஒன்பதென்னும் எண்முன்னரும் உருபுகள் புணருமிடத்து ஆன்சாரியை வரின், அதன்பகர ஒற்று நிற்க மேல் நின்ற எல்லா எழுத்தும் கெடும். ]

(உ-ம்.) ஒருபது, ஒருபானை.
இருபது, இருபானுக்கு.

**250.** THE DECLENSION OF CERTAIN DEMONSTRATIVE PRONOUNS.

உரு0. அவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

[விஞ 71.]

[அஃறிணைப் பன்மையவாய வகர ஈற்றுமூன்று சுட்டுப்பெயர்க்கும் உருபுகள் புணரும் இடத்து அற்றுச் சாரியை பொருந்தல் முறைமை ஆம்.]

(உ-ம்.) அவை, அவற்றை.

**251.** THE DECLENSION OF அஃது.

உருக. சுட்டின்முன் ஆய்தம் அன்வரிற் கெடுமே.

[விஞ 71.]

[அஃது, இஃது, உஃது எனவரும் மூன்று சுட்டுப்பெயர்களோடு உருபுகள் புணரும் இடத்து, இடையே அன் சாரியைவரின், மொழிமுதற் சுட்டெழுத்துக்கள் மூன்றின் முன்நின்ற ஆய்தங் கெடும்.]

(உ-ம்.) அதனை, அதனை.

**252.** அத்து LOSES ITS INITIAL அ.

உருஉ. அத்தின் அகரம் அகரமுனை இல்லை.

[விஞ 66.]

[அத்துச் சாரியையின் அகர உயிர், இயல்பினும் விதியினும், நின்ற அகர உயிர் ஈற்றின் முன்வரின், வகர உடம்படு மெய் பெறாது கெடும்.]

**253.** THE INCREMENT TO BE DISCOVERED BY ANALYSIS.

உருங. இதற்கிது சாரியை எனின்அளவின்மையின்
விகுதியும் பதமும் உருபும் பகுத்திடை
நின்ற எழுத்தும் பதமும் இயற்கையும்
ஒன்றஉணர்த்தல் உரவோர் நெறியே.

[ விகுதிமுதலிய புணர்ச்சிக்கண் இதற்கு இது சாரியை என்று வரைய றுத்து விதித்தனவற்றுள்ளும், ஒழிந்தனவற்றுள்ளும், தனித்தனி சொல்லப் புகின் வரையறைப்படாமையின் விகுதிப்புணர்ச்சியினையும், பதபுணர்ச் சியினையும், உருபுப்புணர்ச்சியினையும், கண்டுழிப்பகுத்து இடையேநின்ற ஏகாரம் அகரம் முதலிய எழுத்துச் சாரியையினையும், அன், ஆன்முதலிய பதச் சாரியையினையும் இவ்விரண்டு சாரியையும் தோன்றா இயல்பினையும் தெரிய அறிவித்தல் பெரியோரது நெறி ஆம். ]



**254.** THESE RULES TO BE APPLIED WITH DISCRIMINATIO[N]

உருச. விகுதிபதஞ் சாரியை உருபனைத்தினும்
உரைத்த விதியுள்ளோர்ந் தொப்பன கொளலே.

[ விகுதியே, பதமே, சாரியையே, உருபே என்னு நான்கின் புணர்ச் சிக்கண்ணும் விதிகள் பொதுப்படக் கூறப்பட்டவேனும் அவ்விதிகளுள் இவ்விதி இதற்குப் பொருந்தும் இவ்விதி இதற்குப் பொருந்தாது என உய்த் துணர்ந்து எவ்விதி எதற்குப் பொருந்துமோ அவ்விதி அதற்குக் கொள்க. ]



**255.** PECULIARITIES IN COMBINATIONS OF THE SECOND CASE: EXCEPTION TO (242.)

உருரு. இயல்பின் விகாரமும், விகாரத் தியல்பும்;
உயர்திணை இடத்து விரிந்துந் தொக்கும்;
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்,
அன்ன பிறவும், ஆகும்ஐ உருபே.

[ வேற்றுமைப் புணர்ச்சிக்கு விதித்த பொது விதியோடு தானும் ஒருங்கு முடிதலே அன்றி அங்ஙனம் விதித்த இயல்பின்கண் விகாரமாயும், வி காரத்தின்கண் இயல்பாயும், உயர்திணைக்கண் விரிந்தும் தொக்கும் விரவுப் பெயர்க்கண் விரிந்தும் விரிதல் ஒழிந்தும் இவைபோல்வன பிறவேறுப டாயும் வரும் இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சி. ]

(உ-ம்.) வழிபடு தெய்வநிற்புறங்காப்ப. (நின் 218.)
மண் கொணர்ந்தான்; (மட் 209.)

**256.** PECULIAR COMBINATIONS OF THE THIRD CASE.

உருசு. புள்ளியும் உயிரும் ஆய்இறு சொன்முன்
தம்மின் ஆகிய தொழில்மொழி வரினே
வல்லினம் விகற்பமும் இயல்பும் ஆகும்.

[ மூன்றும் வேற்றுமைப் புணர்ச்சியுள் ஒற்றும் உயிரும் இறுதி ஆய்நின்ற சொல்முன்னர்க் கருவிகருத்தா உடனிகழ்வு அதன்பொருள் என்பவற்றுள், கருத்தா ஆகிய நிலைமொழிப் பொருள் தம்மால் ஆகிய தொழிற் சொல்வரின் அங்ஙனம் வரும் வல்லினம் வேற்றுமைப் பொதுமுடி பேலாது விகற்பமும் இயல்பும் ஆம். ]

(உ-ம்.) புலி கடிக்கப்பட்டான். [இயல்பு.]
பேய் கோட்பட்டான்.
பேய்க் கோட்பட்டான். } [விகற்பம்.]

**257.** IN CASES NOT PARTICULARIZED JUDGE BY ANALOGY.

உருஎ. இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்ப வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.

[ இதற்கிது முடிபென்று இவ்வதிகாரத்துள் விதிக்கத் தகுவனவற்றை எல்லாம் தனித்தனி வரையறுத்து விதிக்கப் புகின் அதற்கோர் வரையறை இன்மையின், வகுத்து விதித்தனவற்றின் இலக்கணங்களை ஏதுவாகக் கொண்டு வகுத்து விதி உரையாதனவற்றையும் கருதல் அளவையான் வகுத்து விதிஉரைத்துக் கொள்க. ]

SUMMARY OF ORTHOGRAPHY.

## கட்டளைக்கலித்துறை.

அடைஎண், பெயர், முறை, தோற்றம், வடிவளவாதி, அந்தம்,
இடைநிலை, போலி, என்றீரைந் தெழுத்தும், இருபதமும்,
படுபுணர் மூன்றின் இயல்பும், விகாரமுஞ், சாரியையும்,
உடன்உணர் வாரை எழுத்தறிவார் என்பர் உத்தமரே.

உருபு புணரியல் முற்றிற்று.

# நன்னூல்.

## II. சொல்லதிகாரத்தில்

### (I.) பெயரியல்.

**258.** AN INVOCATION.

உருஅ. முச்சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுதன் அடிதொழு தறைகுவன் சொல்லே.

[ மூன்றுலகத்திற்கு நிழலைச்செய்யும் நிறைந்த மதிபோலும் மூன்று குடையையுடைய அழியாதவன் அடிகளை வணங்கிச் சொல்லுவன் மேலை அதிகாரத்தில் கூறிய எழுத்தினன் ஆய சொல்லிலக்கணத்தை. ]

**259.** DEFINITION OF "சொல்."

உருக. ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி, என்று
இருதிணை, ஐம்பாற், பொருளையுந், தன்னையு
மூவகை இடத்தும், வழக்கொடு, செய்யுளின்,
வெளிப்படை, குறிப்பின், விரிப்பது சொல்லே.

[ ஒருமொழியும், தொடர்மொழியும், பொதுமொழியும் என மூன்று கூற்றினதாய், இருதிணையாகிய ஐம்பால் பொருளினையும் அப்பொருளை அன்றித் தன்னையும் மூன்றிடத்தினும் வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் வெளிப்படையானும் குறிப்பினானும் விளக்குவது சொல்லாம். ]

**260.** SINGLE, COMPOUND AND AMBIGUOUS WORDS.

உசுO. ஒருமொழி ஒருபொரு ளனவாந்; தொடர்மொழி

பலபொரு ளன;பொது இருமையும் ஏற்பன.

[ வினு 43. ]

[ ஒரு மொழிகளாவன: பகாப்பதமேனும், பகுபதமேனும், ஒன்று நின்று, தத்தம் ஒருபொருளைத் தருவனஆம். தொடர்மொழிகளாவன: அவ்விருவகைப் பதங்களும் தன்னேடும் பிறிதோடும் அல்வழி வேற்றுமைப்பொருள் நோக்கத்தான் இரண்டு முதலியவாகத் தொடர்ந்து நின்று இரண்டு முதலிய பலபொருளைத் தருவனஆம். பொதுமொழிகளாவன: ஒன்ருய் நின்று, ஒருபொருள் தந்தும், அதுவே தொடர்ந்து நின்று பலபொருள் தந்தும், இவ்விரண்டற்கும் பொதுவாய் நிற்பனஆம். ]

(உ-ம்.) (1.) நிலம், நட, தில், நனி. [ஒருமொழிகள்.]
(2.) நிலம்வலிது, அதுகொல், சாலப்பகை, நிலங்கடந்தான். [தொடர்மொழிகள்.]
(3.) எட்டு, தாமரை, வேங்கை. [பொது மொழிகள்.]

(எட்டு = எள்ளைத்து, தாமரை = தாவுகின்றமரை, வேங்கை = வேகின்றகை; 391 ஒத்துக்காண்க.)



**261.** THE TWO CLASSES OF PERSONAL AND IMPERSONAL NOUNS.

உசுக. மக்கள், தேவர், நரகர், உயர்திணை;

மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை.

[ வினு 52. ]

[ மக்களும் தேவரும் நரகரும் உயர்திணை ஆம்; அவரை ஒழிந்த விலங்கு முதலிய உயிர் உள்ளனவும், நிலம் நீர் முதலிய உயிர் இல்லனவும், அஃறிணை ஆம். ]



**262.** DIVISIONS OF WORDS OF THE HIGHER CLASS: SINGULAR MASCULINE, SINGULAR FEMININE AND EPICENE PLURAL.

உசுஉ. ஆண், பெண், பலர் என முப்பாற் றுயர்திணை.

[ வினு 53. ]

[ ஆண், பெண், பலர் என்னும் இம்மூன்று பாலினையும் உடைத்து உயர் திணை. ]

**263.** DIVISIONS OF THE LOWER CLASS: SINGULAR AND PLURAL.

உசுங. ஒன்றே, பல என் றிருபாற் றஃறிணை.
[விரு 53.]

[ ஒன்றும், பலவும் என்னும் இரண்டு பாலினை உடைத்து அஃறிணை. ]

**264.** EPICENES.

உசுச. பெண்மைவிட் டாண்அவா வுவபே டாண்பால்;
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்;
இருமையும் அஃறிணை அன்னவும் ஆகும்.

[ பெண்டன்மையினை விட்டு ஆண்டன்மையினை அவா வுவன வாகிய பேடுகள் உயர்திணை ஆண்பால் ஆம்; ஆண்டன்மையினை விட்டுப் பெண் டன்மையினை அவாவுவன வாகிய பேடுகள் உயர்திணைப் பெண்பால் ஆம்; இவ்விருவகைப் பேடுகளும் உயர்திணை ஆம், அன்றி அஃறிணையை ஒப்பனவும் ஆம்.]

(உ-ம்.) பெண்ணவாய் ஆணிழந்த பேடி அணியாளோ,
கண்ணவாத் தக்க கலம்?

**265.** THE THREE PERSONS WITH THEIR VARYING திணை AND பால்.

உசுரு. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பின்,
பெறப்படுந் திணைபால் அனைத்தும்; ஏனை
இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே.
[ விரு 54. ]

[ வெளிப்படைச் சொல்லாயும், குறிப்புச் சொல்லாயும், வழக்கின் கண் ணும் செய்யுட்கண்ணும் நிற்கும் படர்க்கைவினைமுற்றுச் சொல்லையும், படர்க்கைப் பெயர்ச்சொல்லையும், முன் குறித்தால் பின் அவ்விருவ கைச்சொல்லும் கருவியாக இருதிணையும் ஐம்பாலும் பெறப்படும். ஒழிந் ததன்மை முன்னிலை வினைமுற்றுச் சொல்லையும், தன்மை முன்னிலைப் பெயர்ச்சொல்லையும், முன் குறித்தால் பின்பு அந்நால்வகைச் சொல்லும் கருவியாக இருதிணை ஐம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் பெ றப்படும். ]

(உ-ம்.) நடந்தான். நடந்தாள். } நடந்தார்
நடந்தது. நடந்தன

அவன். அவள். } அவர்
அது அவை.

} இவை முன்பு தம்மை உணர்த்திப் பின்பு இருதிணை ஐம்பாலாகிய பொருள்களை உணர்த்தின.

நடந்தேன், நடந்தேம்.
நடந்தாய், நடந்தீர்.
நீ, நீர்.
} இவை முன்பு தம்மையும் பின்பு ஒருமைப்பாலையும் பன்மைப் பாலையும் உணர்த்தின.

---

**266.** THE THREE PERSONS.

உசுசு தன்மை, முன்னிலை, படர்க்கைமூ விடனே.

[ வினை 54. ]

[ மூவிடம் ஆவன: தன்மையும், முன்னிலையும், படர்க்கையும் ஆம். ]

---

**267.** PROSE.

உசுஎ. இலக்கண முடைய திலக்கணப் போலி,
மரூஉ, என்றாகு மூவகை இயல்பும்;
இடக்கர் அடக்கல், மங்கலங், குழூஉக்குறி,
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

[ இலக்கணமுடையதென்றும், இலக்கணப்போலி என்றும், மரூஉ என்றும், வழங்கும் மூவகை இயல்பு வழக்கும்; இடக்கர்அடக்கல் என்றும், மங்கலம் என்றும், குழூஉக் குறிஎன்றும், வழங்கு மூன்று தகுதி வழக்குடனே கூட அறுவகைப்படும் வழக்கிலக்கணம். ]

(உ-ம்.) (1.) நிலம், நீர். [இலக்கணம்.]

(2.) முன்றில். (இல்முன்.)
புறநகர். (நகர்ப்புறம்.)
} இலக்கணப்போலி.

(3.) அருமந்தபிள்ளை.
(அருமருந்தன்னபிள்ளை.)
சோணாடு. (சோழநாடு.)
} மரூஉ.

(4.) கால் கழீஇவருதும். [இடக்கரடக்கல்.]

(5.) துஞ்சினார். (செத்தார்.)
நன்காடு. (சுடுகாடு.)
} மங்கலம்.

(6.) சொல்விளம்பி. (கள்ளு.)
சாணை (யானைப்பாகர் ஆடை.)
} குழூஉக்குறி.

## 268. POETRY.

உசுஅ. பல்வகைத் தாதுவின், உயிர்க்குடற் போல்பல
சொல்லாற் பொருட்கிடன் ஆக, உணர்வினின்
வல்லோர், அணிபெறச் செய்வன செய்யுள்.
[ விஞ 167. ]

[ தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேதநீர் என்னும் எழுவகைத் தாதுக்களினால் உயிர்க்கிடனாக இயற்றப்பட்ட உடம்பு போல இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்னும் நால் வகைச் சொற்களால் பொருட்கிடன் அகக் கல்வி அறிவினால் செய்யுள் இயற்றவல்லோர் அலங்காரம்பெற இயற்றுவன செய்யுள் ஆம். ]



## 269. AMBIGUOUS AND UNAMBIGUOUS EXPRESSIONS.

உசுகூ. ஒன்றொழி பொதுச்சொல், விகாரந், தகுதி,
ஆகு பெயர்,அன் மொழி,வினைக் குறிப்பே,
முதறொகை குறிப்போ டுன்ன பிறவுங்,
குறிப்பிற் றருமொழி; அல்லன வெளிப்படை.

[ இருதிணை ஆண் பெண்ணுள் ஒன்றனை ஒழிக்கும் பொதுச் சொல்லும், வலித்தல் முதலிய ஒன்பது விகாரச் சொல்லும், மூவகைத் தகுதி வழக்குச் சொல்லும், ஆகுபெயர்ச் சொல்லும், அன்மொழித் தொகைச் சொல்லும், வினைக்குறிப்புச் சொல்லும், முதற்குறிப்புச் சொல்லும், தொகைக்குறிப்புச் சொல்லும், இம்முதறொகை அல்லாத பலவாற்றானும், வருங் குறிப்புச் சொல்லும், இவைபோல்வன பிறவும், குறிப்பினான் இருதிணை ஐம் பாற்பொருளைத்தரும் சொற்களாம்; இவை அல்லன எல்லாம் வெளிப்ப டையான் அப்பொருள்களைத் தரும் சொற்கள் ஆம். ]

(உ-ம்.) (1.) ஆயிரம் மக்கள் பொருதார். [உயர்திணை ஆண்பால்.]
(2.) இப்பெற்றங்கறக்கும்.
இப்பெற்றம் உழவொழிந்தன
(3.) மரைபுரைசிறடி. [தாமரை.]
(4.) நன்காடு. [சுடுகாடு.]
(5.) புளித்தின்றான். [ஆகுபெயர், புளியம்பழம்.]
(6.) சொல்லவல்லன். [வினைக்குறிப்பு.]
(7.) அறத்தாறிதுவென வெள்ளைக்கிழிபு. [முதற்குறிப்பு]
(8.) ஐவர் [தொகைக்குறிப்பு, பாண்டவர்.]

**270.** CLASSES OF WORDS.

௨௭0. அதுவே, இயற்சொல், திரிசொல், இயல்பிற் பெயர்வினை
எனஇரண் டாகும், இடைஉரி அடுத்து
நான்கும் ஆந்;திசைவட சொல்அணு காவழி.

[ வினா. 43. ]

[ மேற்காட்டிய சொல் இயற்சொல், திரிசொல், என்னும் இயல்பினையுடைய பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும், என இரண்டாம்; இவற்றுடன் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் அடுத்து நான்கும் ஆம்; இவற்றுடன் திசைச்சொல்லும் வடசொல்லும் அணுகா இடத்து. ]

**271.** UNEQUIVOCAL PURE TAMIL WORDS.

௨௭௧. செந்தமிழ் ஆகித், திரியா தியார்க்குந்
தமபொருள் விளக்குந் தன்மைய இயற்சொல்.

[ வினா 43. ]

[ செந்தமிழ் நிலத்து மொழி ஆகி, அந்நிலத்து மொழியுள் மேற்கூறப்படும் திரிசொற்போலாது கற்றூர்க்கும் கல்லாதார்க்கும் ஒப்பத் தம்பொருளை விளக்கும் தன்மையினையுடைய உலக வழக்கியற் சொல்லாம். ]

(உ-ம்.) மண், பொன். [பெயரியற்சொல்.]
நடந்தான். [வினை இயற்சொல்.]
அவனை. [வேற்றுமையுருபு இடைஇயற்சொல்.]

**272.** EQUIVOCAL PURE TAMIL WORDS.

௨௭௨. ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும்,
பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்,
அரிதுணர் பொருளன திரிசொல் ஆகும்.

[ வினா 43. ]

[ ஒரு பொருளைக் கருதிய பலசொல் ஆகியும், பலபொருளைக் கருதிய ஒருசொல் ஆகியும், கற்றோர் உணரும் பொருளவாய் வருவன திரிசொல் ஆம். ]

(உ-ம்.) (1.) இவுளி, அசம், தத்தை.
[இவிளென்னும் ஒருபொருள் குறித்த பல பெயர்த்திரிசொல்.]

(2.) வாரணம்:
[யானை, சங்கு, கோழி முதலியவற்றைக்குறித்தலால் பலபொருள் குறித்த ஒருபெயர்த் திரிசொல்.]

(3.) படர்ந்தான், சென்றான், ஏகினன்.
[இவை போயினன் என்னும் ஒருபொருளைக் குறித்தலால் ஒரு பொருள் குறித்த பலவினைத் திரிசொல்.]

(4.) ஆர்த்தான்.
[ஒலித்தான், கட்டினன், என்னும் பொருளைக்குறித்தலால் பலபொருள் குறித்த ஒருவினைத் திரிசொல்.]

(5.) சேறும், வருதும்.
[றும், தும் என்னும் விகுதிகள் தன்மைப்பன்மை என்னும் ஒரு பொருள் குறித்த பலஇடைத் திரிசொல்.]

(6.) கொல்.
[ஐயத்தையும் அசைநிலையாவதையுங் குறித்து நிற்பதால் பல பொருள் குறித்த ஓரிடைத் திரிசொல்.]

(7.) சால, தவ, உறு, கழி.
[மிகல் என்னும் ஒருபொருள்குறித்த பலவுரித்திரிசொல்.]

(8.) கடி. [காப்பு, கூர்மை, விரை, விளக்கம் முதலிய பலபொருள் குறித்த ஓர் உரித்திரிசொல்.]



## 273. WORDS OF LOCAL USAGE.

உஎங. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்,
ஒன்பதிற் றிரண்டினிற் றமிழ்ஒழி நிலத்தினும்,
தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப.
[ விரு 43. ]

[ செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்தின் கண்ணும், பதினெண் மொழியுள் தமிழும் மேற்கூறும் வடசொற்குக் காரணம் ஆகிய ஆரியமும் ஒழிந்த பதினாறு மொழியும் வழங்கும் பதினாறு நிலத்தின் கண்ணும், உள்ளோர் தங்குறிப்பினவாய்ச் செந்தமிழோர் குறிப்பின் அன்றி, அத்திசைகளின் நின்றும் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன திசைச்சொல். என்று கூறுவர் புலவர். ]

## வெண்பா.

THE TWELVE DISTRICTS WHERE INFERIOR TAMIL IS SPOKEN.

தென்பாண்டி,குட்டங், குடங்,கற்கா, வேண்,பூழி,
பன்றி,அருவா, அதன்வடக்கு,—நன்றாய,
சீதமலாடு, புனனாடு: செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிரு நாட்டெண்.

[இவை பன்னிரண்டுங் கொடுந் தமிழ் நாடு.]

## கலித்துறை.

THE SEVENTEEN DISTRICTS LYING AROUND THE TAMIL COUNTRY.

சிங்களஞ், சோனகஞ், சாவகஞ், சீனந், துளுக், குடகங்,
கொங்கணங், கன்னடங், கொல்லந், தெலுங்கங், கலிங்கம், வங்கம்,
கங்க மகதங், கடாரங், கவுடங், கடுங்குசலந்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாம்இவையே.

[முற் குறித்தவைகளைச் சூழ்ந்த தமிழ் ஒழிந்த பதினேழு தேசங்கள்.]

(உ-ம்) பசுவை பெற்றம். [தென்பாண்டி.] | அந்தோ. [சிங்களம்]
சோற்றை சொன்றி [குட்டம்.] | பாண்டில் [தெலுங்கு.]
தாயை தள்ளை. [குடம்] | மாமரத்தைக் கொக்கு. [துளுவம்.]



**274.** SANSCRIT WORDS.

உளச. பொதுஎழுத் தானுஞ், சிறப்பெழுத் தானும்,
ஈரெழுத் தானும், இயைவன வடசொல்.

[வினா 43.]

[ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுஎழுத்தானும், ஆரியத்திற்கே உரிய சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்தானும், இவ்விரண்டினானும் செந்தமிழ்ச் சொல்லை ஒப்பன ஆகி, வடதிசைக்கணின்றும் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன வடசொல் ஆம்.]

(உ-ம்.) அமலம் [பொது எழுத்தால்.]
சித்தி. [சிறப்பெழுத்தால்.]
சலம். [ஈரெழுத்தால்.]

[146. 147. காண்க.]

### 275. NOUN.

பெயரின் பொது இலக்கணம்.

௨௭௫. இடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடர்ந்து தொழில்அல காலந் தோற்று
வேற்றுமைக் கிடன்ஆய்த் திணைபால் இடத்தொன்
றேற்பவும் பொதுவும் ஆவன பெயரே.
[ விஞ 44. 48. ]

[ இடுகுறியும், காரணக்குறியும், மரபினையும் ஆக்கப்பாட்டினையும் தொடர்ந்து, வினையால் அணையும் காரணக்குறி ஒன்றும் காலும் தோற்ற, அல்லன காலம் தோற்றுவாய், எட்டு வேற்றுமையும் சார்தற்கிடமாய் இருதிணை ஐம்பால் மூவிடத்துள் ஒன்றனை ஏற்பவும் பலவற்றினை ஏற்பவுமாய் வருவன பெயர்கள் ஆம். ]

(உ-ம்.) (1.) மாம், சமுகு. [இடுகுறி மரபு தொடர்ந்துவந்தன.]

(2.) பறவை. [காரணக்குறி மரபு தொடர்ந்துவந்தது.]

(3.) பாட்டினுள் குமரன் பெயர் முட்டை. [இடுகுறியாக்கந் தொடர்ந்துவந்தது.]

(4.) பொன்னன். [காரணக்குறியாக்கந் தொடர்ந்து வந்தது.]

(5.) மரம். [இடுகுறிப்பொதுப்பெயர்.]
(6.) பனை. [இடுகுறிச் சிறப்புப்பெயர்.]

(7.) அணி. [காரணப் பொதுப்பெயர்.]
(8.) முடி. [காரணச் சிறப்புப்பெயர்.]



### 276. PERSONAL MASCULINE NOUNS.

உயர்திணை ஆண்பால்.

அவற்றுள்,

௨௭௬. கிளை, எண், குழூஉ, முதல், புலபொருள்; திணை, தேம்,
ஊர், வான், அகம், புற முதல நிலன்; யாண்
டிருது மதிநாள், ஆதிக் காலம்;
தோள், குழல், மார்பு, கண், காது, முதல்உறுப்
பளவறி வொப்பு, வடிவு, நிறங், கதி,
சாதி, குடி, சிறப், பாதிப் பல்குணம்;
ஓதல், ஈதல், ஆதிப் பல்வினை;
இவை அடை சுட்டு வினாப்பிற மற்றே

டுற்ற னவ் வீறு; நம்பி, ஆடூஉ,
விடலை, கோ, வேள், குரிசி, றோன்றல்,
இன்னன ஆண்பெயர் ஆகும். என்ப.

[மேல்பெயரே என்றவற்றுள் இங்ஙனம் பகுத்துக் கூறிய பொருள் ஆதி ஆறனோடும், இவற்றை அடையும் சுட்டினோடும் வினவினோடும் பிற என்பதனோடும் மற்றென்பதனோடும் பொருந்திய னகர ஈற்றுப்பெயர்களும், நம்பி முதலாக எடுத்து ஓதிய பெயர்களும், இவை போல்வன பிறவும் உயர்திணை ஆண்பாற் பெயர்கள் ஆம் என்று சொல்லுவர் புலவர்.]

(உ-ம்.) (1.) தமின், நமன். [கிளையால் வருபெயர்.]
(2.) ஒருவன். [எண்ணால் வருபெயர்.]
(3.) அவையத்தான். [கூட்டத்தால் வருபெயர்.]
(4.) பொன்னன். [முதல்என்பவற்றால் வருபெயர்.]

I. இவை எல்லாம் பொருளால் வருபெயர்.

(5.) வெற்பன். மறவன். இடையன். ஊரன் சேர்ப்பன். [ஐந்திணையால் வருபெயர்.]
(6.) சோழியன். [தேசத்தால் வருபெயர்.]
(7.) சிற்றூரான். [ஊரால் வருபெயர்.]
(8.) வானத்தான், அகத்தான், புறத்தான். [வான். அகம், புறம், ஆகிய மூன்றால் வருபெயர்.]
(9.) மண்ணகத்தான். [முதல் என்றதினால் வருபெயர்.]

II இவை இடத்தால் வருபெயர்.

(10.) மூவாண்டினன்.
(11.) வேனிலான்.
(12.) தையான்.
(13.) ஓணத்தான். [ஆண்டு, இருது, மதிநாள் ஆகிய நான்கினால் வருபெயர்.]
(14.) நெருநலான். [ஆதிஎன்றதினால் வருபெயர்.]

III. இவை காலத்தால் வருபெயர்.

(15.) திணிதோளான்.
(16.) செங்குஞ்சியான்.
(17.) வரைமார்பான்.
(18.) செங்கண்ணன்.
(19 ) குழைக்காதான். [தோள்முதலிய ஐந்தால் வருபெயர்.]
(20.) குறுந்தாளன். [முதல் என்பதினால் வருபெயர்.]

IV. இவை அவயவத்தால் வருபெயர்.

(21.) பெரியன்.
(22.) புலவன்.
(23.) புலியனையன்.
(24.) கூனன்.
(25.) கரியன்
(26.) மானுடன்.
(27.) அரசன்.
(28.) சோழன்.
(29.) ஆசிரியன். [அளவு, அறிவு, ஒப்பு, வடிவு, நிறம், கதி, சாதி, குடி, சிறப்பு ஆகிய ஒன்பதினால் வருபெயர்.]
(30.) நல்லன். [ஆதி என்றதினால் வருபெயர்.]

V. இவை குணத்தால் வருபெயர்.

(31.) ஓதுவான்.
(32.) ஈவான். [ஓதல் ஈதல் என்கிற இரண்டாலும் வருபெயர்.]
(33.) கணக்கன். [ஆதிஎன்பதினால் வருபெயர்.]

VI. இவை தொழிலால் வருபெயர்.

(34.) இவன்
(35.) எவன்
(36.) பிறன்
(37.) மற்றையான். [சுட்டு, வினா, பிற மற்று என்பவற்றால் வருபெயர்.]

### 277. FEMININE PERSONAL NOUNS.

உயர்திணைப் பெண்பால்.

உஎஎ. கிளைமுதல் ஆகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற ஈற்றவும்,
தோழி, செவிலி, மகடூஉ, நங்கை,
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

[மேலைச் சூத்திரத்துக் கிளைமுதலாகப் பகுத்துக் கூறிய அறுவகைப் பொருள்களும் ளகர ஒற்றும், இகர உயிரும், உறுதற்கேற்ற அவ்விரண் டீற்றவாய் வரும் பெயர்களும், தோழி முதலாக எடுத்தோதிய பெயர்களும், இவற்றுடனே இவை போல்வன பிறவும் உயர்திணைப் பெண்பாற் பெயர்கள் ஆம்.]

(உ-ம்.) தமள்.
ஒருத்தி.

இருளை, மாது, அரிவை, அங்கனை, மடந்தை.

### 278. PLURAL OF NOUNS OF THE HIGHER OR PERSONAL CLASS.

பலர் பால்.

உஎஅ. கிளந்த கிளைமுதல் உற்றரவ் வீற்றவும்,
கள் என்னீற்றின் ஏற்பவும், பிறவும்,
பல்லோர் பெயரின் பகுதி ஆகும்.
[வினு 69.]

[மேற்கூறப்பட்ட கிளைமுதலிய அறுவகைப் பொருளையும் பொருந்திய ரகர ஒற்றீற்றுப் பெயர்களும், கள் என்னும் விகுதியை ஈறாகவுடைய பெயர்களுள் ஈண்டைக்குப் பொருந்தி வருவனவும், இவை போல்வன பிறவும், பலர்பாலின் பெயர்கள் ஆம்.]

(உ-ம்.) தமர், இருவர்.
கோக்கள், மனுக்கள்.
தமர்கள், அரசர்கள்.
மாந்தர், மக்கள்.

**279.** SINGULAR OF THE LOWER OR IMPERSONAL CLASS.

அஃறிணை ஒருமை.

உஎகூ. வினாச் சுட்டுடனும், வேறும் ஆம்பொருள்
ஆதி உறு துச், சுட்டணை ஆய்தம்
ஒன்றெனெண் ணின்னன ஒன்றன் பெயரே.

[வினாவின் கண்ணும் சுட்டின்கண்ணும் கரந்தவற்றுடனாயும் வினாவும் சுட்டவும்படாது, வேறாயும் வரும்பொருளாதி ஆறனையும் பொருந்திய துவ்விகுதி ஈற்றுப்பெயரும், சுட்டோடு கூடிய ஆய்தத்தைப் பொருந்திய துவ்விகுதி ஈற்றுப் பெயரும், ஒன்றென்னும் எண்ணுகுபெயரும், இவை போல்வன பிறவும், அஃறிணை ஒருமைப் பெயர் ஆம்.]

(உ-ம்.) (1.) எது, யாது.
(2.) இது, அது, உது.
(3.) குழையது, நிலத்தது, மூலத்தது, கோட்டது, கரியது, ஆடலது.
(4.) அஃது, இஃது, உஃது.
(5.) ஒன்று.



**280.** PLURAL OF THE LOWER OR IMPERSONAL CLASS.

உஅ0. முன்னர் அவ்வொடு வருவை, அவ்வும்,
சுட்டிறு வவ்வுங், கள்இறு மொழியும்,
ஒன்றல் எண்ணும் உள்ள, இல்ல,
பல்ல, சில்ல, உள, இல, பல, சில,
இன்னவும் பலவின் பெயர் ஆகும்மே.
[வினா 69.]

[முன்னர்க் கூறிய வினாச்சுட்டுடனும், வேறும் ஆம்பொருள் ஆதி ஆறனோடும், ஏற்ற பெற்றி வரும், வகர ஐகார ஈற்றுப் பெயர்களும், அகர ஈற்றுப் பெயர்களும், வகர ஒற்று ஈற்றுச் சுட்டுப் பெயர்களும், கள் என்னும் பகுதிப் பொருள் விகுதி இறுதி ஆகிய பெயர்களும், ஒன்றல்லா இரண்டு முதலிய எண்ணுகு பெயர்களும், உள்ள என்பது முதலிய குறிப்புவினையால் அணைந்த எட்டுப்பெயர்களும், இவைபோல்வன பிறவும் அஃறிணைப் பன்மைப் பெயர்கள் ஆம்.]

(உ-ம்.) (1.) எவை.
(2.) இவை.
(3.) நெடியவை.
(4.) பொருள், பொருளன.
(5.) அவ், இவ்.
(6.) யானைகள்.
(7.) இரண்டு, மூன்று, கோடி.

---

**281.** OTHER NOUNS OF THE LOWER CLASS BOTH SINGULAR AND PLURAL.

உஅக. பால்பகா அஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.

[ அஃறிணைப் பெயர்களுள் இங்ஙனம் பால் பகுத்தலை ஒழிந்து நின்ற பெயர்கள் அனைத்தும், அத்திணை இருபாற்கும் உரிய பொதுப் பெயர்கள் ஆம். ]

(உ-ம.) யானை வந்தது.
யானை வந்தன.

---

**282.** NOUNS COMMON TO BOTH CLASSES.

உஅஉ. முதற்பெயர் நான்குஞ், சினைப்பெயர் நான்கும்,
சினைமுதற் பெயர்ஒரு நான்கு' முறைஇரண்டும்,
தன்மை நான்கு' முன்னிலை ஐந்தும்,
எல்லாந், தாந்,தான் இன்னன பொதுப்பெயர்.

[ முதற்பெயர் முதலான ஒன்பது கூற்றுப் பெயர்களும், இவைபோல்வன பிறவும், இருதிணைக்கும் உரிய பொதுப்பெயர்கள் ஆம். ]

(உ.-ம்) சூரியன் உதித்தான், சூரியன் உதித்தது.
ஊமை வந்தான், ஊமைவந்தாள்.
[ உஅரு. காண்க. ]

---

**283.** SUBDIVISIONS OF NOUNS (282.) ACCORDING TO GENDER AND NUMBER.

உஅ௩. ஆண்மை, பெண்மை, ஒருமை பன்மையின்
ஆம்அந் நான்மைகள் ஆண் பெண் முறைப்பெயர்.

[ ஆண்மை முதலிய இந்நான்கு பாலுங் காரணமாக முற்கூறிய முதற்பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயர் என்னும் மூன்றும் ஒவ்வொன்றும் நந்நான்காம்; ஆண்மை, பெண்மை என்னும் இருபாலும் காரணமாக முறைப்பெயர் இரண்டாம். ]

(உ-ம்.)

| | ஆண்மை. | பெண்மை. | ஒருமை | பன்மை. |
|---|---|---|---|---|
| 1. | சாத்தன், | சாத்தி. | கோதை, | கோதைகள். |
| | | [இவை முதற்பெயர்.] | | |
| 2. | முடவன், | முடத்தி. | செவியிலி, | செவியிலிகள். |
| | | [இவை சினைப்பெயர்.] | | |
| 3. | முடக்கொற்றன், | முடக்கொற்றி. | கொடும்புறமருதி, | கொடும்புறமருதிகள். |
| | | [இவை சினைமுதற்பெயர்.] | | |
| 4. | தந்தை, | தாய். | | |
| | | [இவை முறைப்பெயர்.] | | |



**284.** NOUNS COMMON TO BOTH CLASSES (281.) TAKE THE DISTINCTIONS OF பால்.

அவற்றுள்,

உருச. ஒன்றே இருதிணைத் தன்பால் ஏற்கும்.

[முதற்பெயர் முதல்வாகக் கூறப்படும் இருபத்தாறும், பிறவும், ஆகிய பொதுப்பெயர்களுள் ஒவ்வொன்று இருதிணைக் கண்ணும் தன்றன் பால்களை ஏற்கும்.]

(உ-ம்.)
(1.) சாத்தன் இவன்; சாத்தி இவள்.
சாத்தன் இவ்வெருது; சாத்தி இப்பசு.
கோதை இவன்; கோதை இவள்.
கோதைகள் இவர்; கோதைகள் இவை.
(2.) தந்தைஇவன்; தந்தை இவ்வெருது
தாய் இவள்; தாய் இப்பசு.
(3.) யான் நம்பி; யான் நங்கை, யான் பூதம்.
யாம் மக்கள்; யாம் பூதங்கள்.



**285.** THE PERSONS OF PRONOUNS.

உருரு. தன்மை: யான்,நான்,யாம்,நாம்;முன்னிலை:
எல்லீர், நீயிர், நீவிர், நீர்,நீ.
அல்லன படர்க்கை, எல்லாம் எனல்பொது.

[விரு 72. 73.]

[தன்மைப்பெயர் நான்காவன: யான், நான், யாம், நாம் என்பன ஆம் முன்னிலைப்பெயர் ஐந்தாவன: எல்லீர், நீயிர்,நீவிர், நீர், நீ என்பன ஆம். திணை பாலுள் ஒன்றற் கேற்பவும் பொதுவும் ஆகிய பெயர்களுள் இவ்வி ரண்டிடத்து ஒன்பது பெயரும் அல்லாத பெயர்கள் அனைத்தும் படர்க்கை இடத்திற்குரிய ஆம். அவற்றுள், எல்லாம் என்னும் பெயர் ஒன்று மூவி டத்திற்கும் உரித்தாம்.]

**286.** THE PERSONS OF VERBAL NOUNS.

உ௮சு. வினையின் பெயரே படர்க்கை; வினையால்

அணையும் பெயரே யாண்டும் ஆகும்.

[ யான் உணல், நீ உணல், அவன் உணல், என மூவிடத்து வினை ஆயினும் அவ்வுணல், தினல், என்றற்றொடக்கத்து வினையின் பெயர் படர்க்கைக்கே உரிய ஆம். அவ்வினையால் அணையும் பெயர் அவ்வினையின் பெயர்போல் படர்க்கைக்கே உரிய ஆகாது, உண்டேனை, உண்டாயை, உண்டானை எனத் தனித்தனி மூவிடத்திற்கும் உரிய ஆம். ]

**287.** THE NUMBERS OF PRONOUNS.

உ௮எ. தான், யான், நான், நீ, ஒருமை; பன்மைதாம்,

யாம்,நாம்,எலாம்,எலீர், நீயிர்,நீர்,நீவிர்.

[ விஞ 72. 74. ]

[ தான், யான், நான், நீ, என்னும் நான்கும் இருதிணை முக்கூற்றொருமைப் பெயர் ஆம். தாம், யாம், நாம், எலாம், எல்லீர், நீயிர், நீர், நீவிர் என்னும் எட்டும் இருதிணை இருகூற்றுப் பன்மைப்பெயர் ஆம். ]

**288.** NOUNS FROM NUMBERS.

உ௮௮. ஒருவன், ஒருத்தி பெயர்மேல் எண்ணில.

[ விஞ 159. ]

[ எண்ணுன் உயர்திணை ஆண்பாற்பெயரும், பெண்பாற்பெயரும், வருங்காலத்து ஒன்றென்னும் எண்ணுனே ஒருவன், ஒருத்தி, என வருவன அன்றி, இவற்றின்மேல் இரண்டு முதலிய எண்களான் இப்பெயர்கள் வருவன இல ஆம். ]

**289.** THE NOUN ஒருவர்.

உ௮௯. ஒருவர் என்ப துயர் இரு பாற்றாய்ப்

பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

[ விஞ 159. ]

[ஒருவர் என வழங்குஞ் சொல் உயர்திணை ஆண்பால் பெண்பால் இரண்டற்கும் பொதுவாய், அத்திணைப் பன்மை வாய்பாட்டு வினையைக் கொண்டு முடியும் பாங்கினை உடைத்து என்று சொல்லுவர் புலவர்.]

(உ-ம்.) ஆடவருள் ஒருவர் அறத்தின்வழி நிற்பார்.
பெண்டிருள் ஒருவர் கொழுநனவழி நிற்பார்.
யாஅர் ஒருவர் உலகத்தோர் சொல்லில்லார்.

---

**290.** SYNECDOCHE.

உகூ0. பொருண் முதல் ஆறோ டளவைசொற், றனி,
கருவி, காரியம், கருத்தன், ஆதியுள்
ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகு பெயரே.

[விறு 162.]

[பொருளே, இடமே, காலமே, சினையே, குணமே, தொழிலே என்னும் ஆறுடனே இவற்றின் பகுதிய ஆகிய நால்வகை அளவையே, சொல்லே, தானியே, கருவியே, காரியமே, கருத்தாவே என்னும் ஆறும் ஆதியாகவரும் பொருள்களுள் ஒருபொருளின் இயற்பெயரானே அப்பொருளினுக்கு இயைந்த பிறிதொரு பொருளைத், தொன்று தொட்டு, வருமுறையே கூறிவருவன ஆகுபெயர்கள் ஆம்.]

(உ-ம்.) (1.) தாமரை அனைய தாள். ஆம்பல் அனைய தேம்பொதி செவ்வாய்.
[முதற்பொருளின் பெயர் அதின் சினையாகிய மலருக்கும் ஆயிற்று.]

(2.) அகன் அமர்ந்து.
[இடப்பெயர் மனத்துக்காயிற்று.]

(3.) கார்த்திகை பூத்தது.
[காலப்பெயர் அக்காலத்தில் உண்டாகும் வேந்தோன்றிக்கும் ஆயிற்று.]

(4.) கார் அறுத்தது.
[இது மும்மடி ஆகுபெயர்: எப்படியெனில், கார் என்பது நிறம், அது மேகத்திற்கும் ஆகும், மேகத்தின் பெயர் பருவத்துக்கும் ஆகும், அப்பருவத்தின் பெயர் அக்காலத்தில் உண்டாகும் பயருக்கும் ஆகும்.]

(5.) புளி முளைத்தது.
[சினைப்பெயர் முதலுக்காயிற்று. இது இருமடி ஆகுபெயர். எப்படியெனில், புளி என்பது சுவைப்பெயர், அது பழத்துக்கும் ஆயிற்று. அப்பழத்தின்பெயர் மரத்திற்கும் ஆயிற்று.]

(6.) புளித்தின்றான்.
[சுவையாகிய குணப்பெயர் பழத்திற்கும் ஆயிற்று.]

(7.) எழுத்தறியத்தீரும் இழிதகைமை.
[தொழிற்பெயர் அக்கரத்திற்கும் ஆயிற்று.]

(8.) அரை கால்.
[எண்ணல் அளவைப் பெயர்கள் அவயவங்களுக்கும் ஆயிற்று.]

(9.) நெஞ்சு நொந்தது.
[மனமாகிய தானி அதின் தானமாகிய மார்புக்கும் ஆயிற்று.]

(10.) திருவாசகம்.
[முதற்கருவிப்பெயர் காரியமாகிய நூலுக்கும் ஆயிற்று.]

(11.) இந்நூல் அலங்காரம்.
[காரியத்தின் பெயர் காரணத்துக்கும் ஆயிற்று.]

(12.) இந்நூல் திருவள்ளுவர்.
[கருத்தாவின் பெயர் நூலுக்கும் ஆயிற்று.]

(13.) காளை வந்தான.
[உவமை ஆகுபெயர்.]

### 291. CASE.

வேற்றுமை.

௨௯௧. ஏற்கும் எவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை,
[விஞ 55.]

[தம்மை ஏற்றுக் கோடற்குரிய எவ்வகைப்பட்ட பெயர்கட்கும் இறுதியாய் அப்பெயர்ப்பொருளை வேற்றுமைப் படுத்துவன ஆன வேற்றுமைகள் எட்டே ஆம்.]

### 292. THE SIGNS OF THE CASES.

௨௯௨. பெயரே, ஐ, ஆல், கு, இன், அது, கண்
விளியென் றாகும், அவற்றின் பெயர்முறை.
[விஞ 55. &c.]

[மேல் எட்டே வேற்றுமை என்றவற்றின் பெயர் என்னை, கிடக்கை முறை என்னை, எனில் பெயர் முதலாக விளியீறாக இங்ஙனம் கூறிய பெயரும் முறையும் ஆம்.]

### 293. THESE SIX TERMINATIONS ADDED TO THE NOMINATIVE.

௨௯௩. ஆறன் உருபும் ஏற்கும் அவ்வுருபே.

[எழுவாய் வேற்றுமையாவது பெயர்மாத்திரையாய்த் தோன்றி நிற்கு நிலை என்ப, ஆகலின் அவ்வெழுவாயாய் நின்ற உருபே ஐம்முதலிய ஆறு வேற்றுமைகளின் உருபும் ஏற்கும்.]

**294.** THE NOMINATIVE நீயிர், நீவிர், நான். [EXCEPTION TO 293.]

உகூச. நீயிர், நீவிர், நான், எழுவாய் அல பெறா.
[ விஞ 72. 73. ]

[ இம்மூன்று பெயரும் எழுவாய் வேற்றுமையினை அன்றி, ஏனைஎழு வேற்றுமையினையும் ஏலா. ]

**295.** THE NOMINATIVE IS THE NOUN ITSELF: ITS PREDICATE.

எழுவாய்.
அவற்றுள்,

உகூரு. எழுவாய் உருபு திரிபில் பெயரே.
வினை, பெயர், விஞக்கொளல் அதன்பய னிலையே.

[ மேற்கூறிப் போந்த எட்டு வேற்றுமையுள் முதல்வேற்றுமையின் உருபாவது திரிபில்லாத பெயரே ஆம். அதன் பொருளாவது: வினையையும், பெயரையும், விஞவையும் கொளப் பொருணிலையாய் வருதலாம். ]

(உ-ம்.) சாத்தன் வந்தான்.
சாத்தன் இவன்.
ஆயாது.

**296.** THE SECOND OR ACCUSATIVE CASE.

ஐயுருபு.

உகூசா. இரண்டா வதன்உரு பையே; அதன்பொருள்
ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல்,
ஒத்தல், உடைமை, ஆதி ஆகும்.
[ விஞ 58. 129. ]

[ இரண்டாம் வேற்றுமையினது உருபு மேற்கூறிய ஐஉருபு ஒன்றுமே. அதன் பொருள்களாவன: தன்னை ஏற்ற பெயர்ப்பொருளை ஆக்கப்படுபொருளாகவும், அழிக்கப்படுபொருளாகவும், அடையப்படுபொருளாகவும், துறக்கப்படுபொருளாகவும், ஒக்கப்படுபொருளாகவும், உடைமைப்படுபொருளாகவும், இவைபோல்வன பிறவாகவும், வேற்றுமை செய்தலாம். ]

| | | | | |
|---|---|---|---|---|
| (உ-ம்.) குடத்தை | வனைந்தான். | [ஆக்கல்.] | | செயப்படு பொருள். |
| | உடைத்தான். | [அழித்தல்.] | | |
| | சேர்ந்தான் | [அடைதல்.] | | |
| | இழந்தான். | [நீத்தல்.] | | |
| | ஒத்தான். | [ஒத்தல்.] | | |
| | உடையன். | [உடைமை.] | | |

**297.** THE THIRD CASE.

உகூஎ. மூன்றா வதனுரு பால், ஆன், ஓடொடு;
கருவி, கருத்தா, உடனிகழ் வதன்பொருள்.

[வினா 59.]

[மூன்றாம் வேற்றுமையின் உருபு மேற்கூறிய ஆலே அன்றி ஆனும், ஓடுவும் ஒடுவும் ஆம். அவற்றின் பொருள்களாவன: தம்மை ஏற்ற பெயர்ப் பொருளைக் கருவியாகவும், எதுப்பொருட்டாகிய கருத்தா ஆகவும், உடனிகழ்வதாகவும், வேற்றுமை செய்தல் ஆம்.]

(உ-ம்.) அறிவால்ஆகிய காட்சி. [கருவி.]
மண்ணால் ஆக்கிய குடம்.
மண்ணான் இயன்ற குடம்.
தேவனால் ஆகிய உலகம்.
தச்சனால் செய்யப்பட்ட தேர். [கருத்தா]
கொடியொடு கட்டுண்டான். [உடனிகழ்ச்சி.]
ஊசியொடு குயின்ற தூசும்பட்டும்.
மதியோடொக்கும் முகம்.
பெண்டகையாற் பேர்அமர்க்கட்டு. [ஆல் உருபால் வந்த உடனிகழ்ச்சி.]
மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு தானஞ்செய் வாரிற்றலை.
[வேறுவினை உடனிகழ்ச்சியும், ஒருவினை உடனிகழ்ச்சியும்]

---

மதியோடொக்கும் முகம். [செயப்படு பொருளிலே ஓடுவந்தது.]

---

**298.** THE FOURTH OR DATIVE CASE.

உகூஅ. நான்கா வதற்குரு பாகுங் குவ்வே.
கொடை, பகை, நேர்ச்சி, தகவது ஆதல்,
பொருட்டு,முறை,ஆதியின், இதற்கிதெனல்பொருளே.

[வினா 60.]

[நான்காம் வேற்றுமைக்கு உருபு மேற்கூறிய கு ஒன்றுமேஆம். அதன் பொருளாவது: கொடையும், பகையும், நேர்ச்சியும், தகவும், அதுவாதலும், பொருட்டும் முறையும், முதலான பொருள் தோன்றப் புணரும் புணர்ச்சிக்கண் இதற்கிதென அங்ஙனம் வருதற்குரிய எப்பொருளினையும் ஏற்றுக் கொள்ளும் பொருளாகத் தன்னை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம்.]

(உ-ம்.) இரப்போர்க் கீந்தான். [கொடை.]
பிணிக்குமருந்து. [பகை.]
விளக்கினுக்கு எண்ணெய். [நேர்ச்சி.]
அரசருக்கே உரித்து. [தகுதி.]
அவனுக்குநெல். [அது அது ஆதல்.]
கூழிற்குக் குற்றேவல் செய்தான். [பொருட்டு.]
சாத்தனுக்கு மகன். [முறை.]

---

அவனுக்கும் அவளுக்கும் பொருத்தம் இல்லை. [யாப்பு.]
இன்றைக்கு வரும். [எல்லை.]
அவ்வூர்க்கும் இவ்வூர்க்குங் காதம. [எல்லை.]
அவனுக்குச் சிறந்தவன் இவன். [சிறப்பு.]
மனைக்கு விளக்கு மனையாட்டி. [உவமை.]

---

## 299. THE FIFTH CASE.

உ௯௯. ஐந்தாவதன் உருபில்லும், இன்னும்,
நீங்கல் ஒப்பெல்லை ஏதுப் பொருளே.

[ விஞ 61. ]

[ ஐந்தாம் வேற்றுமையின் உருபாவன: இல்லும், மேற் கூறிய இன்னும் ஆம். அவற்றின் பொருளாவன: நீங்கற்பொருளாகவும், உவமைப்பொருளாகவும், எல்லைப்பொருளாகவும், ஏதுப்பொருளாகவும், தம்மை ஏற்ற பெயர்ப் பொருளை வேற்றுமை செய்தலாம். ]

### I. நீக்கப்பொருள்.

(உ-ம்.) தலையின் இழிந்த மயிர் அனையர் மாந்தர்.
[உருபேற்றசொல் தலை; உருபுநோக்கிய சொல் மயிர் ]
அரசரில் பெரியர் கற்றோர். [உயர்வு.]
ஆவின் இழிந்தது மேதி. [தாழ்வு.]

---

### II. ஒப்பு.

பாலின் வெளிது கொக்கு. [வண்ணம்.]
அதனிற் பெரிது இது. [அளவு.]

---

### III. எல்லை.

கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்குச்சோணாடு.

---

### IV. ஏது.

கள்ளரின் அஞ்சினன்.
வாணிகத்தின் ஆயினன்.

**300.** THE SIXTH CASE.

௩00. ஆறன் ஒருமைக் கதுவும், ஆதுவும்,
பன்மைக் கவ்வும், உருபாம்; பண்புறுப்
பொன்றன் கூட்டம், பலவின் ஈட்டம்,
திரிபின் ஆக்கம், ஆந்தற் கிழமையும்,
பிறிதின் கிழமையும், பேணுதல் பொருளே.
[வினு 62.]

[ ஆறும் வேற்றுமையினது ஒருமைப் பொருண்மைக்கு மேற்கூறிய அது என்பதே அன்றி, ஆது என்பதும்; பன்மைப் பொருண்மைக்கு அகரமும் உருபாம். அவற்றின் பொருளாவன: குணமும் தொழிலுமாகிய பண்பும், சினையும், ஒருபொருட்கூட்டமும், பலபொருட்கூட்டமும், ஒன்று திரிந் தொன்றுனதும், ஆகிய ஐந்து தற்கிழமைப் பொருளினையும் பிறிதின் கிழமைப்பொருளினையும் உடையதாகத் தம்மை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம். ]

(உ-ம்.) I. ஐவகைத்தற்கிழமை.

(I.)

நிலத்தது அகலம்.
சாத்தனது இயல்பு. } [பண்புத்தறகிழமை.]

(II.)

சாததனது கண். [உறுப்புத்தற்கிழமை.]

(III.)

மக்களது தொகுதி.
நெல்லினது குப்பை. } [ஒன்று பல கூடிய ஒன்றன் கூட்டத்தறகிழமை.]

(IV.)

விலங்கினது கூட்டம். [வேறு பல கூடிய பலவின் ஈட்டத்தறகிழமை.]

(V.)

நெல்லினது பொரி. [திரிபினுக்கத்தறகிழமை.]

II. பிறிதின்தற்கிழமை.

சாத்தனது வில். [பொருட்பிறிதின் கிழமை.]
சாத்தனது தோட்டம். [இடப்பிறிதின் கிழமை.]

பிறவும் அன்ன.

எனதுகை, நினதுதாள். [ஒருமை ]
எனகைகள், நினதாள்கள் [பன்மை.]

**301.** THE SEVENTH CASE.

௩0௧. ஏழன் உருபு கண் ஆதி ஆகும்;
பொருள் முதல் ஆறும் ஓர்இரு கிழமையின்
இடன்ஆய் நிற்றல், இதன் பொருள் என்ப.
[ வினு 63. ]

[ ஏழாம் வேற்றுமையின் உருபு மேற்கூறிய கண்ணே அன்றி, வருஞ் சூத்திரத்தில் சொல்லப்பட்ட பிறவும் ஆம். இவற்றின் பொருளாவன: தம்மை ஏற்ற பெயர்ப்பொருளாகிய பொருள்முதலிய ஆறும் மேற்போந்த இருகிழமைப் பொருட்கும் இடமாகிநிற்க, அவற்றினை வேற்றுமை செய்தலாம், என்று சொல்லுவர் புலவர். ]

**302.** FORMS OF THE SEVENTH CASE.

௩0௨. கண், கால், கடை, இடை, தலை, வாய், திசை, வயின்,
முன், சார், வலம், இடம், மேல், கீழ், புடை, முதல்,
பின், பாடு, தேம், உழை, வழி, உழி, உளி,
உள், அகம், புறம், இல் இடப்பொருள்உருபே.
[வினு 63.]

[ இங்ஙனம் கண் முதலாக இல் ஈறாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும் இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம். ]

**303.** THE EIGHTH CASE.

௩0௩. எட்டன் உருபே எய்து பெயர்ஈற்றின்
திரிபு, குன்றல், மிகுதல், இயல்பயற்
றிரிபும்ஆம்; பொருள், படர்க்கை யோரைத்
தன் முகம் ஆகத் தான் அழைப்பதுவே.
[ வினு 64. ]

[ எட்டாம் வேற்றுமை ஆகிய விளிக்கு வேறுருபின்று, அவ்விளி அடைந்த பெயர் ஈற்றின் திரிபும், கேடும், மிகுதலும், இயல்பும், ஈற்றயல் நின்றதன் திரிபுமே உருபாம்; இவற்றின் பொருளாவன: இவற்றினை ஏற்ற

படர்க்கைப் பெயர்ப்பொருளை ஒருவன் தனக்கு எதிர்முகமாக அழைக்கப் படுவதாக வேற்றுமை செய்தலாம்.]

304. NOUNS WHICH ADMIT OF THE VOCATIVE.

௩0௪. இ, உ, ஊ, வோ டை, ஓ, ன, ள, ர, ல,
ய, ஈற்றுயர்திணை ஓ, ர, அல் இவற்றொடு
ணஃகான், ஆ, ஈ றுரும் பொதுப்பெயர்
ஞ, ந, ஒழி அனைத்தீற் றஃறிணை விளிப்பன.

[இ, உ, ஊ, ஐ, ஔ, ன, ள, ர, ல, ய என்னும் பத்தீற்றுயர்திணைப்பெயரும்; இவற்றுள் ஓகாரமும், ரகரமுமான இரண்டும் ஒழித்துநின்ற எட்டுடனே ணகாரமும், ஆகாரமுமான இரண்டும் கூடிய பத்தீற்றுப் பொதுப்பெயரும், நாலாறுமீறே (௧0எ.) என்றவற்றுள் ஞகாரமும், நகரமும், இன்னோரன்ன இடங்களின் ஈறாகாதென மேலே அதிகாரத்து விலக்கிய எகரமும் ஒழிந்த (௧0அ.) இருபத்தோர் ஈற்றஃறிணைப்பெயரும் விளிக்கப்படுவன ஆம்.]

305. TERMINATIONS OF EIGHTH CASE.

௩0௫. இம்முப்பெயர்க்கண் இயல்பும், ஏயும்,
இகர நீட்சியும், உருபா மன்னே.
[வி௫ 64.]

[மேல் விளிக்கப்படும் என்ற மூவகைப் பெயர்க்கண்ணும், இயல்பாதலும், ஏகாரமிகுதலும், இகர ஈறு ஈகாரஈறாய்த் திரிதலும், விளி உருபாம் பெரும்பாலும்.]

(உ-ம்.) முனி வேந்து. [இயல்பு.]
முனியே. [ஏகாரம் மிகுதல்.]
நம்பீ. [இகரம் நீளுதல்.]

306. THE SAME.

௩0௬. ஐ இறு பொதுப்பெயர்க் காயும், ஆவும்,
உருபாம்; அல்லவற் றுயும் ஆகும்.

[ஐகார ஈற்றுப் பொதுப்பெயர்க்கு இயல்பும், ஏகாரமிகுதலும் அன்றி, ஐகாரம் ஆயும் ஆவுமாய்த்திரிதலும், உயர்திணை அஃறிணைப்பெயர்க்கு அவ்வுருபுகள் அன்றி ஐகாரம் ஆய்எனத் திரிதலும் உருபாம்.]

(உ-ம்.) அன்னை, அன்னாய.

**307.** THE SAME.

௩௦௭. ஒருசார் ன வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவ்வயல் நீட்சி; அதனோ
டீறு போதல்; அவற்றோ டோஉறல்;
ஈறழிந் தோஉறல்; இறுதி ய ஆதல்;
அதனோ டயல்திரிந் தேஉறல்; ஈறழிந்
தயல் ஏ ஆதலும்; விளி உருபாகும்.

[பொதுவிதி அன்றி, னகர ஈற்று உயர்திணைப்பெயர்களுள் சில அளபெழுதலும், சில ஈறுகெடுதலும் சில ஈற்றயனீடலும், சில ஈற்றயனீண்டு, ஈறுகெட்டு; ஓகார மிகுதலும், சில ஈறுகெட்டு ஓகாரமிகுதலும், சில இறுதி னகர ஒற்று யகரஒற்றாய்த்திரிதலும், சில இறுதி னகர ஒற்று யகர ஒற்றாய்த் திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரமிகுதலும், சில ஈறு கெட்டயலில் அகரம் ஏகாரம் ஆதலும், விளியுருபாம்.]

(உ-ம்.) அம்பர்கிழா அன். [அளபெடை.]
தோழ. [ஈறழிந்தது.]
பெருமாள். [அயல் நீண்டது.]
இறைவா. [அயல் நீட்சியோடு ஈறழிந்தது.]
ஐயாவோ. [அயல் நீண்டு, ஈறு கெட்டு, ஓமிக்கது.]
வாயிலாய். [ன யவ்வாயிற்று.]
வாயிலோயே. [இறுதியவ்வாகி, ஈற்றயல் ஓ ஆகி, ஏமிக்கது.]
ஐயே. [ஈறுகெட்டு அகரம் ஏகாரம் ஆயிற்று.]

**308.** THE SAME.

௩௦௮. ளஃகான் உயர்பெயர்க் களபீ றழிவயல்
நீட்சி; இறுதி யஒற் றாதல்;
அயலில் அகரம்ஏ ஆதலும் விளித் தனு.

[ளகரஈற்றுயர்திணைப் பெயர்க்குப் பொதுவிதியன்றி அளபெழலும், ஈறுகெடலும், அயல்நீடலும், இறுதி ளகரஒற்று யகரஒற்றாதலும், ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம்.]

(உ-ம்.) விறன்மிகுவே எள். [அளபெடை.]
தனி கொள்ளல் எல்லா நீ! [ஈறு கெட்டது.]
நமர்காள். [ஈற்றயல் நீண்டது.]
குழையாய். [ளகரம் யகரம் ஆயிற்று.]
தலைமீது கொள்வேம் அடிகேள். [அயல் நின்ற அ, ஏ ஆயிற்று.]

**309.** THE SAME.

௩௦௯. ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழல்; ஈற்றயல்
அகரம்இ, ஈ, ஆதல்; ஆண்டை ஆ
ஈஆதல்; அதனோ டேஉறல்; ஈற்றே
மிக்கயல் யாக்கெட் டதன்அயல் நீடல்;
ஈற்றின் ஈர்உறல்; இவையும் ஈண்டுருபே.

[பொதுவிதியன்றி, ரகார ஈற்று உயர்திணைப் பெயர்க்கு அளபெழலும், ஈற்றயல் அகரம் இகரமாதலும், ஈகாரமாதலும், அவ்விடத்து ஆகாரம் ஈகாரமாதலும், அதனோடு ஏகாரம் ஏற்றலும், ஈற்றில் ஏகாரமிக்கு அயலில் யாக்கெட்டு அதன் அயல்இகரம் ஈகாரமாதலும், ஈற்றினீராதலும், விளியுருபாம்.]

(உ-ம்.) சிறுஅர். [அளபெடை.]
நல்லன்மின் தெவ்விர். [தெவ்வர் என்பதில் அர் என்பதுஇர் ஆயிற்று.]
வணிகீர். [அ, ஈ ஆயிற்று.]
சான்றீர். [ஆ, ஈ ஆயிற்று.]
சான்றீரே. [ஆ, ஈ ஆகி, ஏமிக்கது.]
நம்பீரே. [நம்பியார் என்பதில் ஏமிக்கு, யாகெட்டு, இ, ஈஆயிற்று.]
எமரீர். [ஈற்றில் ஈர்வந்தது.]

**310.** THE SAME.

௩௧௦. லகார ஈற்றுயர்பெயர்க் களபயல் நீட்சியும்,
யகார ஈற்றிற் களபும் ஆம்உருபே.

[பொதுவிதிஅன்றி, லகாரஈற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலும், ஈற்றயனீடலும், யகாரஈற்று உயர்திணைப்பெயர்க்கு அளபெழலும், உருபாம்.]

(உ-ம்) மாஅல். [அளபெடை.]
தோன்றுஅல். [ஈற்றயல்நீட்சி.]
சேஎய். [யகாரஈற்றிற்கு அளபெடை.]

**311.** THE SAME.

௩௧௧. ண ஈற்றுயர்திணை அல்இரு பெயர்க்கண்
இறுதி அழிவத னோடயல் நீட்சி;

[பொதுவிதியன்றி, னகரஈற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும், விரவுப் பெயர்க்கண்ணும், இறுதிகெடுதலும், அதனோடு ஈற்றயல் நீடலும், விளி உருபாம்.]

(உ-ம்.) அலவ. (அஃறிணைப்பெயர்.)
சாத்த.
சாத்தா. } (பொதுப்பெயர்.)

**312.** THE SAME.

௩௱௧௨. ல, ள, ஈற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்கண்
ஈற்றயல் நீட்சியும் உருபாகும்மே.

[பொதுவிதிஅன்றி, லகார ளகார ஈற்று அஃறிணைப்பெயர்க்கண்ணும், விரவுப்பெயர்க்கண்ணும், ஈற்றயல்நீடலும், விளியுருபாம்.]

(உ-ம்) முயால்.
கிளிகாள். } (அஃறிணை.)
மக்காள். (பொதுப்பெயர்.)

**313.** KINDS OF VOCATIVE.

௩௱௧௩. அண்மையின் இயல்பும், ஈ றழிவுஞ்; சேய்மையின்
அளவும்; புலம்பின் ஓவும் ஆகும்.

[மேற்போந்த விளியுருபுகளுள் இயல்புகளும், ஈறழிவுகளும் அண்மை விளிக்கண்ணும்; அளபுகள் சேய்மை விளிக்கண்ணும்; ஓகாரங்கள் புலம்பல் விளிக்கண்ணும் வரும்.]

**314.** VOCATIVE WANTING.

௩௱௧௪. நுவ்வொடு வினாச்சுட் டுற்ற ன, ள, ர,
வை, துத், தாந், தான், இன்னன விளியா.

[மேல்விளிக்கப்படும் என்றவற்றுள், நுவ்வுடனே மூன்றுமுதல் வினாவையும், மூன்றுசுட்டையும், வரன்முறையேபொருந்திய ன, ள, ர என்னு மூன்றீற்றுயர்திணைப்பெயர்களும், வை, து என்னும் இரண்டீற் றஃறிணைப்பெயர்களும், தாம், தான் என்னும் பொதுப்பெயரும் விளிக்கப்படா.]

**315.** SPECIAL RULE ABOUT THE TERMINATIONS ஐ, கண், அது.

௩௱கரு. முதலை ஐயுறிற் சினையைக் கண்உறும்;
அதுமுதற் காயிற் சினைக்கை ஆகும்.

[முதலினை ஐ உருபு பொருந்தில் சினையினைக் கண்ணுருபு பொருந்தும்; அது உருபுமுதலுக்கு வரில் சினைக்கு ஐஉருபுவரும்.]

(உ-ம்) யானையைக் காலின்கண் வெட்டினான்.
யானையது காலை வெட்டினான்.
யானையின்கண் காலை வெட்டினான்.

☞ [முதல், சினை, இரண்டிடத்தும் ஐஉருபு வாராது.]



**316.** FURTHER ILLUSTRATION OF (315.)
THE BODY AND ITS MEMBERS. THE AGGREGATE AND ITS PARTS.

௩௱கசா. முதல்இவை, சினைஇவை, எனவே றுள இல,
உரைப்போர் குறிப்பின; அற்றேபிண்டமும்.

[கடங்கள்இவை, படங்கள்இவை, என்றாற்போல முதற்பொருள்கள் இவை, சினைப்பொருள்கள்இவை, என வேறுள்ளன இலவாம், ஒருபொருளையே இரண்டாகப் பகுத்துக்கூறுவார் குறிப்பின் மாத்திரையவேஆம். பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாம்.]

(உ-ம்.) நெல்லைப் பொலியின்கண் வாரினான். } (பிண்டப்பொருள்.)
நெல்லினது பொலியை வாரினான். }
நெல்லைப் பொலியை வாரினான், என்பது வழு.



**317.** INTERCHANGE OF CASES.
THE CONTEXT IS THE GUIDE.

௩௱கஎ. யாதன் உருபிற் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்.
[வினா 137.*]

[ஒருவேற்றுமைப்பொருள் மற்றொரு வேற்றுமை உருபால் கூறப்பட்டதாயினும், அவ்வுருபு மயங்கி வந்தமையின் அவ்வுருபு சென்ற வழியே பொருள் சாராது, பொருள்சென்றவழியே அவ்வுருபு சாரும்.]

(உ-ம்.) (1.) நாகுவேயொடு நக்கு வீங்கு தோள்.
[ஒடுவை ஐயுருபாகத் திரித்துக் கொள்க.]
(2.) மணற்கீன்ற முளை.
[குவ்வைக் கண்ணுருபாக்குக.]
(3.) செய்யவடௌவையைக்காட்டிவிடும்.
[ஐயுருபைக் குவ்வுருபாக்குக.]

அவராற் செய்யத்தகும் அக்காரியம்.
அவர்க்குச் செய்யத்தகும் அக்காரியம்.
மதுரைக்கு வடக்குச் சிதம்பரம்.
மதுரையை நீங்கினன்.
காலைக்கு வருவான்.

## 318. POETICAL INSERTION OF அ.

௩௧௭. ஐ, ஆன், குச் செய்யுட் கவ்வும் ஆகும்;
ஆகா அஃறிணைக் கான்அல் லாதன.

[ஐ, ஆன், கு என்னு மூன்றுருபுஞ் செய்யுளகத்து ஒரோவழி அகரமாகத் திரிந்து வரவும்பெறும்; அஃறிணைக்கண்ணெனின் ஆன் ஒன்றுமே திரியும், ஐயுங் குவ்வுந் திரியா.]

(உ-ம்.) காவலோனைக் களிறஞ்சும். [காவலோனை.]
புலவரான. [புலவரான்.]
கடிநிலையின்றே ஆசிரியற்க. [ஆசிரியற்கு.]
புள்ளினை. [புள்ளினன்.]

## 319. THE GOVERNING, OR SUPPLEMENTARY WORD.

௩௧௮. எல்லை இன்னும், அதுவும் பெயர் கொளும;
அல்ல வினைகொளு நான்கேழ் இருமையும்
புல்லும்பெ ரும்பாலும், என்மனார் புலவர்.

["நீங்கல், ஒப்பு, எல்லை, ஏதுப்பொருளே" என்னும் நான்குபொருள்களுள், எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம்வேற்றுமையும் ஆறும்வேற்றுமையும் பெயரைக்கொண்டு முடியும். ஒழிந்தஎழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம் வினையைக்கொண்டுமுடியும். அவற்றுள் நான்காம் வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையினையேஅன்றி வினையொடு பொருந்தும் பெயரையுங்கொண்டு முடியும் பெரும்பாலும், என்று சொல்லுவர் புலவர்.]

(உ-ம்.) (1.) கருவூரின்கிழக்கு. சாத்தனதுகை. [பெயர்கொண்டன.]
(2.) சாத்தன் வந்தான்.
குடத்தை வனைந்தான்.
வாளால் வெட்டினன்.
சாத்தனுக்குக் கொடுத்தான்.
நோயின் நீங்கினன்.
அவையின்கண் இருந்தான்.
கொற்றா கொள். [இவை வினைகொண்டன.]
(3.) பிணிக்கு மருந்து.
மணியின்கண் ஒளி. [இவை பெயருங் கொண்டன.]

பெயரியல் முற்றிற்று.

# நன்னூல்.

## II. சொல்லதிகாரத்தில்

### (II.) வினையியல்.

**320.** DEFINITION OF A VERB.

௩௨0. செய்பவன், கருவி, நிலம்,செயல், காலம்,
செய்பொருள், ஆறுந், தருவது வினையே.

[ வி௵ 45. ]

[ கருத்தாவும், கருவியும், இடமும், செயலும், காலமும், செயப்படுபொருளும் ஆகிய அறுவகைப்பொருளையும் தருவது தெரிநிலை வினைச் சொல்லாம். ]

(உ-ம்.) வனைந்தான், [என்பதில் செய்பவன், குயவன்; கருவி, தண்டசக்கரமுதலியவை; நிலம், வனையும் நிலம்; காலம், இறந்தகாலம்; செய்பொருள், குடம் முதலியவை.]

**321.** CONJUGATED APPELLATIVES.

௩௨௧. பொருள்முதல் ஆறினுந் தோற்றி, முன் ஆறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே.

[ வி௵ 93. ]

[ பொருளாதி ஆறும் அடியாக அவற்றின்கண் தோன்றி, மேல்கருத்தா முதலாகச் சொன்ன ஆறனுள் கருத்தா ஒன்றையுமே விளக்குதல் வினைக்குறிப்புச் சொல்லினது இலக்கணம் ஆம். ]

(உ-ம்.) குழையன். [பொருள்.]
அகத்தன். [இடம்.]
ஆதிரையான். [காலம்.]
குறுந்தாளன். [சினை.]
கரியன. [குணம்.]
[illegible] [தொழில்]

[276. காண்க.]

[☞ இவை "குழையை யுடையன் ஆயினன்," "அகத்தின் கண்ணிருந்தான்," என அர்த்தங் கொடுப்பதால் வினைக்குறிப்பு முற்று என்று சொல்லுவார்கள். ஆகிலும் இவை எல்லாம் பெயர்ச் சொற்கள் என்றும் ஆயினன், ஆயிருந்தான் என்கிற வினைமுற்று அவற்றின்பின் தொக்கு நிற்கிறதென்றுங் கூறுவது தகும்.]



**322.** FINITE VERB AND INCOMPLETE FORMS.

௩௨௨. அவைதாம்,—முற்றும் பெயர்வினை எச்சமும் ஆகி
ஒன்றற்குரியவும் பொதுவும் ஆகும்.

[வினை 77.]

[மேல் இரண்டு சூத்திரத்தானும் கூறிய தெரிநிலையாயும் குறிப்பாயும் வரும் வினைச்சொற்கள் தாம் முற்று வினைச்சொற்களும், பெயரெச்ச வினைச்சொற்களும், வினையெச்ச வினைச்சொற்களும், ஆகித் திணை பால் இடங்களின் ஒன்றற்குரியனவும் பொதுமையில் நிற்பனவும் ஆகும்.]



**323.** THE FINITE VERB.

முற்றுவினை.

௩௨௩. பொதுஇயல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்
முதல் அறு பெயர்அல தேற்பில முற்றே.

[வினை 77.]

[தெரிநிலைமுற்றும், குறிப்புமுற்றும், பெயரெச்சமும், பெயரெச்சக்குறிப்பும், வினையெச்சமும், வினையெச்சக்குறிப்பும் ஆகிய அறுவகைவினை வினைக்குறிப்புக்கும் பொது இலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறனையும் தோற்றுவித்துப் பொருட்பெயர் முதலிய அறுவகைப்பெயரையும் பயனிலையாக ஏற்பனவாகி அல்லது ஒன்றனையும் ஏலாதன முற்றுவினை வினைக்குறிப்புக்களாம்.]

(உ-ம்.) செய்தான் அவன்.
நல்லன் அவன்.

**324.** THE TWENTY SEVEN FORMS OF THE FINITE VERB.

**முற்றுவினை இலக்கணம்.**

௱௨௪. ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கை இடத்தும்;
ஒருமைப் பன்மையைத் தன்மை முன்னிலையினும்.
முக்காலத்தினு' முரண முறையே
மூவைந்திருமூன் றுறுமுற்று
வினைப்பதம்ஒன்றே, மூவொன்பான்ஆம்.

[ விஞ 77. ]

[ ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல என்னும் ஐம்பாலவாகிய வினை முற்றுக்களைப் படர்க்கைக்கண்ணும்; ஒருமை பன்மை என்னும் இருபாலவாகிய வினைமுற்றுக்களைத் தன்மைக்கண்ணும், முன்னிலைக்கண்ணும், வைத்து முக்காலங்களானுமாற, முறையே படர்க்கைவினைமுற்றுப் பதினைந்தும், தன்மைவினைமுற்றாறும், முன்னிலைவினைமுற்றாறும் ஆகிய முற்றுவினைச்சொல் ஒன்றுமே இருபத்தேழாம். ]

(உ-ம்.) (1.) நடந்தான், ள், ர், து, ன. [போனகாலம்.]
நடக்கின்றான், ள், ர், து, ன. [நிகழ்காலம்.]
நடப்பான், ள், ர், து, ன. [எதிர்காலம்.]
} ஆக, படர்க்கைவினைமுற்று ௧௫.

(2.) நடந்தேன், ம் [போனகாலம்.]
நடக்கிறேன், ம். [நிகழ்காலம்.]
நடப்பேன், ம். [எதிர்காலம்.]
} ஆக, தன்மை வினைமுற்று ௬.

(3.) நடந்தாய், நடந்தீர். [போனகாலம்.]
நடக்கிறாய், நடக்கிறீர். [நிகழ்காலம்.]
நடப்பாய், நடப்பீர். [எதிர்காலம்.]
} ஆக, முன்னிலை வினைமுற்று ௬.

ஆக, வகை [illegible] முற்றுவினை [illegible]

---

**325.** THE THIRD PERSON SINGULAR, MASCULINE.

௱௨௫. அன், ஆன், இறுமொழி ஆண்பாற் படர்க்கை.

[ அன், ஆன் என்னும் இருவிகுதியும் இறுதியாகிய மொழிகள் உயர்திணை ஆண்பால் படர்க்கை வினைமுற்றும், வினைக்குறிப்புமுற்றும் ஆம். ]

(உ-ம்.) நடந்தனன் ... ... ... நடந்தான். [போனகாலம்.]
நடக்கின்றனன் ... ... நடக்கிறான். [நிகழ்காலம்.]
நடப்பனன் ... ... ...நடப்பான். [எதிர்காலம்.]
குழையினன் ... ... குழையான். [குறிப்புவினைமுற்று.]

## 326. THE THIRD PERSON SINGULAR, FEMININE.

௩௨௬. அள், ஆள், இறுமொழி பெண்பாற் படர்க்கை.

[அள், ஆள் என்னும் இருவிகுதியும் இறுதி ஆகிய மொழிகள் உயர்திணைப் பெண்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்.]

(உ-ம்.) நடந்தனள் ... ... ... நடந்தாள்.
நடக்கின்றனள் ... ... நடக்கின்றாள்.
நடப்பள் ... ... ... நடப்பாள்.
குழையினள் ... ... ... குழையாள்.



## 327. THE THIRD PERSON PLURAL EPICENE.

௩௨௭. அர், ஆர், ப, ஊர் அகரமார்ஈற்ற
பல்லோர் படர்க்கை; மார் வினையொடு முடிமே.

[அர், ஆர், ப, மார் என்னும் நான்கு விகுதியினையும், இறுதியாகவுடைய மொழிகள் உயர்திணைப்பன்மைப் படர்க்கை வினைமுற்றும், குறிப்புமுற்றும் ஆம் இவற்றுள் மாரீற்று வினைமுற்றுப் பொதுவிதியால் பெயருடன் முடிவதன்றி வினையுடனுமுடியும்.]

(உ-ம்.) நடந்தனர், நடந்தார்.
நடக்கின்றனர், நடக்கின்றார்.
நடப்பர், நடப்பார்.
குழையினர், குழையார்.
நடப்ப, மொழிப.
ஆர்த்தார் கொண்மார் வந்தார்.



## 328. THE THIRD PERSON SINGULAR, NEUTER.

௩௨௮. து, று, டுக் குற்றியல் உகரஈற்ற
ஒன்றன் படர்க்கை; டுக் குறிப்பின்ஆகும்.

[இம்மூன்று குற்றியலுகர ஈற்று விகுதிகளையும் இறுதியாகவுடைய மொழிகள் அஃறிணை ஒருமைப்படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். இவற்றுள், டுவ்விகுதி குறிப்பின்கண் அன்றித் தெரிநிலைக்கண் வாராது.]

(உ-ம்.) நடந்தது, நடக்கின்றது, நடப்பது. }
வந்தன்று, கூயிற்று. } [தெரிநிலை.]
அணித்து, அற்று, பொருட்டு, [குறிப்பு.]

**329.** THE THIRD PERSON PLURAL, NEUTER.

௩௨௯. அ, ஆ, ஈற்ற பலவின் படர்க்கை;
ஆவே எதிர்மறைக் கண்ணதாகும்.

[ இவ்விருவிகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் அஃறிணைப் பன்மைப் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். இவற்றுள், ஆகாரம் எதிர்மறை வினைக்கண்ணதாம் அன்றி, உடன்பாட்டுவினைக்கண் வாராது. ]

(உ-ம்.) (1.) நடந்தன, நடந்த.
நடவா நின்றன, நடக்கின்றன. } [தெரிநிலை உடன்பாடு.]
நடப்பன, நடப்ப.
(2.) கரியன், கரிய. [குறிப்பு உடன்பாடு.]
(3.) நடந்தில், நடவாநின்றில், இல்லன, இல்ல.
(4.) நடவா.

---

**330.** FORMS ADMITTING NO DISTINCTION OF GENDER (OR CLASS.)

௩௩௦. தன்மை, முன்னிலை, வியங்கோள், வேறில்லை
உண்டீரெச்சம், இருதிணைப் பொதுவினை.

[ தன்மைவினை வினைக்குறிப்பு முற்றும், முன்னிலை வினை வினைக்குறிப்புமுற்றும், வியங்கோள் வினைமுற்றும், வேறு, இல்லை, உண்டு என்னு மூன்று வினைக்குறிப்புமுற்றும், பெயரெச்சவினை வினைக்குறிப்பும், வினையெச்சவினை வினைக்குறிப்பும், இருதிணைக்கும் பொதுவினை ஆம். ]

---

**331.** THE FIRST PERSON SINGULAR.

௩௩௧. கு, டு, து, று என்னுங் குன்றியல் உகரமோ
டல், அன், என், ஏன், ஆகும், ஈற்ற
இருதிணைமுக்கூற் றொருமைத் தன்மை.

[ இவ்வெட்டு விகுதிகளையும் இறுதியாகவுடைய மொழிகள் இருதிணைக்கண்ணவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்றென்கிற மூன்று பால்களுக்கும் ஒருமைத்தன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். ]

(உ-ம்.) உண்கு. (= உண்பேன்.) | சென்று. (= சென்றேன்.)
உண்டு. (= உண்டேன்.) | சேறு. (= செல்லுவேன்.)
வந்து. (= வந்தேன்.) | திருமு. (= திருமுவேன்.)
வருது. (= வருவேன்.)
உண்பல். } (= உண்பேன்.) | உண்டனன். } (= உண்டேன்.)
உண்பென். } | உண்டனேன். }

### 332. THE FIRST PERSON PLURAL.

௩௩௨. அம்,ஆம் என்பன முன்னிலை யாரையும்,
எம்,ஏம்,ஓம் இவை படர்க்கை யாரையும்,
உம்,ஊர் க,ட,த,ற, இருபா லாரையும்,
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை.

[ தன்னிலையில் நிற்பதன்றி அம், ஆம் என்னும் இவ்விருவிகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் முன்னிலையாரையும், எம், ஏம், ஓம் என்னும் இம்மூன்று விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் படர்க்கையாரையும், கும், டும், தும், றும் என்னும் இந்நான்கு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் முன்னிலை படர்க்கை என்னும் ஈரிடத்தாரையும், தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மைவினை முற்றும் குறிப்புமுற்றுமாம். ]

(உ-ம்.) (1.) உண்டனம், உண்ணாநின்றனம், உண்பம்.
உண்டாம், உண்ணாநின்றாம், உண்பாம்.
தாரினம், தாரினாம்.

(2.) உண்டனெம், உண்டேம், உண்டோம்.
தாரினெம், தாரினேம், தாரினோம்.

உண்கும், உண்டும், வருதும், சேறும்.

### 333. SPECIAL RULE.

௩௩௩. செய்கென் ஒருமையும் செய்குமென் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.

[ செய்கு என்னும் தன்மை ஒருமைமுற்றும், செய்கும் என்னும் தன்மைப் பன்மைமுற்றும், பெயருடனே.அன்றி வினையுடனேயு முடியும்; அங்ஙன முடியினு மேற்கூறிய முற்றேயாம். ]

(உ-ம்.) உண்கு வந்தேன். } எனவரும்.
உண்கும் வந்தேம். }

### 334. "THE SECOND PERSON IS MORE WORTHY THAN THE THIRD."

௩௩௪. முன்னிலை கூடிய படர்க்கையு' முன்னிலை.

[ தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மையானாற் போல முன்னிலையோடு கூடிய படர்க்கையு முன்னிலையாம். ]

(உ-ம்.) உண்டீர் நீயும் அவனும்.

ஒண்டேவி நாராய், நின் சேவலு' நீயுமாய்
வண்தேம் பூங்கானல் வைகலுஞ் சென்றீரால்.

**335.** THE SECOND PERSON SINGULAR.

முன்னிலை ஒருமை.

௩௩௫. ஐ, ஆய், இகர ஈற்று மூன்றும்,
ஏவலின் வருஉம் எல்லாஈற்றவும்,
முப்பால் ஒருமை முன்னிலை மொழியே.

[ ஐ, ஆய், இ என்னும் மூன்றீற்று மொழிகளும் விகுதிகுன்றாதும், குன்றியும், நிற்பனவாகிய ஏவற்கண்வரும் இருபத்து மூன்றீற்று மொழிகளும், ஒருவன் ஒருத்தி ஒன்று என்கிற மூன்றுபால்களுக்கும் பொதுவாகிய முன்னிலை ஒருமை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம். ]

(உ-ம்) உண்டனை, உண்ணாநின்றனை, உண்பை.
உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய்.
உண்டி, உண்ணாநிற்றி, சேறி. } தெரிநிலை முற்று வினைகள்.

நடவாய், நட, உண். [ஏவல்]

வில்லினை, வில்லாய், வில்லை. [குறிப்பு.]

**336.** ஈ AND ஏ ADDED TO CERTAIN IMPERATIVES.

௩௩௬. முன்னிலை முன்னர் ஈயும், ஏயும்,
அந்நிலை மரபின்மெய் ஊர்ந்து வருமே.

[ முன்னிலை ஏவல் முற்றென மேற்கூறியவற்றிற்கு முன்னே ஈகாரமும், ஏகாரமும், ஆண்டு வந்து நிற்றற்குரிய மரபினையுடையமெய் யாதானும் ஒன்றை ஊர்ந்துவரும். ]

(உ-ம்) சென்றீ.
நின்மே

**337.** SECOND PERSON PLURAL.

௩௩௭. இர், ஈர், ஈற்ற இரண்டும் இருதிணைப்
பன்மை முன்னிலை; மின், அவற்றேவல்.

[ இர், ஈர் என்னும் இரு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் இருதிணைப் பன்மைமுன்னிலை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். மின்

என்னும் விகுதியை இறுதியாகவுடைய மொழிகள் இருதிணைப் பன்மை முன்னிலை ஏவல்முற்றும். ]

(உ-ம்.) உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்குவிர்
உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர்.

---

குழையினிர், குழையீர்.

---

உண்மின்.
[உண்ணும், தின்னும் இவைமுதலிய புதியன.]



### 338. THE OPTATIVE.

௩௩௮. க, ய வொடு ர ஒற் றீற்ற வியங்கோள்;
இயலும் இடம்பால் எங்கும் என்ப.
[ வினா 85. ]

[ க, ய என்னும் இரண்டுயிர்மெய்யினையும், ரகர ஒற்றினையும் இறுதியாக வுடையன வியங்கோள்முற்றும். அவை மூவிடத்திலும் ஐம்பாலினும் செல்லும் என்று சொல்லுவர் புலவர். ]

(உ-ம்.) வாழ்க, வாழிய, வாழியர்.

---

வெல்க வாழி நின்வென்றி வார்கழல்,
செல்க நீயன, சிறக்க நின்புகழ்.

---

மகன் எனல் மக்கட்பதடி எனல். [அல்.]

---

மரீஇய தோரால். [ஆல்.]



### 339. THE DEFECTIVE FORMS வேறு, இல்லை, உண்டு.

௩௩௯. வேறில்லைஉண் டைம் பால்மூவிடத்தன.
[ வினா 125. ]

[ வேறு, இல்லை, உண்டு என்னு மூன்று வினைக்குறிப்புமுற்றும் ஐம் பாற்கும் மூவிடத்திற்கும் உரியனவாம். ]

(உ-ம்.) அவன் / அவள் / அவர் / அது / அவை / யான் / யாம் / நீ, நீர் } வேறு. இல்லை. உண்டு.

**340.** RELATIVE, OR ADJECTIVAL PARTICIPLES.

பெயர் எச்சம்.

௩௪௦. செய்த, செய்கின்ற, செய்யும், என் பாட்டிற்
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயர்எச்சம்மே.

[ வினை 87. ]

[ செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் மூவகைப்பட்ட சொல்லின் கண் முறையே இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலமும் செயலும் தோன்றி, வினைமுற்றுதற்கு வேண்டும் பால் ஒன்றும் தோன்றாது அப்பாலுடனே செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் என்னும் அறுவகைப் பொருட்பெயரும் ஒழிய நிற்பன பெயரெச்சவினை வினைக்குறிப்புகளாம். ]

(உ-ம்.) உண்ட, உண்ணாநின்ற, உண்ணும். { சாத்தன். கலம். இடம். உண். நாள். சோறு.

---

வேலான் முகத்த களிறு.
முவிலைய வேல்.
உள்ள பொருள் } [உடன்பாட்டுக் குறிப்புப் பெயர் எச்சம்.]

---

ஓடாத சாத்தன். [எதிர் மறைப் பெயர் எச்சம்.]



**341.** POETICAL CHANGES OF THE FORM செய்யும்.

௩௪௧. செய்யும்என் எச்சஈற் றுயிர்மெய் சேறலும்,
செய்யுளுள் உம் உந் தாதலும், முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே.

[“செய்யும்” என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தின் இறுதிஉயிர்மெய் கெடுதலும், செய்யுளகத்து அதன் இறுதி உம்மை உந்தெனத்திரிதலும், அது முற்றாயின் அதன் இறுதி உயிரேனும் உயிர்மெய்யேனும் கெடுதலும் உளவாம். ]

(உ-ம்.) ஆகும் பொருள். ... ... ... ஆம்பொருள்.
போகும் பொருள். ... ... ... போம் பொருள்.
வாவும் புரவி. ... ... ... வாம் புரவி.

---

பாயும். ... ... ... பாயுந்து.

---

இவை போம்.
கலுழும். ... ... ... கலுழ்ம். } முற்று.

---

## 342. THE ADVERBIAL PARTICIPLE.

### வினை எச்சம்.

௩௪௨. தொழிலுங், காலமுந், தோனறிப்பால்வினை
ஒழியநிற்பது வினைஎச்சம்மே.

[ விஞ 86. ]

[ பின்னர், "செய்து" "செய்பு" முதலியவாய் விதந்துகூறும் வாய்பாடுகளின் கண் தொழிலும், இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலங்களும், முறையேதோன்றி வினைமுற்றுதற்கு வேண்டும் பால் ஒன்றும் தோன்றாது அப்பாலுடனே வினை ஒழிய நிற்பன வினையெச்சவினை வினைக்குறிப்புகளாம். ]

---

## 343. DIFFERENT FORMS OF THE ADVERBIAL PARTICIPLE.

### வினை எச்ச வாய்பாடுகள்.

௩௪௩. செய்து, செய்பு, செய்யாச், செய்யூச்,
செய்தெனச், செயச், செயின், செய்யிய, செய்யியர்,
வான், பான், பாக்கின வினைஎச் சம், பிற
ஐந்தொன் றாறுமுக் காலமு முறைதரும்.

[ விஞ 86. ]

[ "செய்து" என்பது முதலிய ஒன்பது வாய்பாட்டான் வருவனவும், வான், பான், பாக்கு என்னும் மூன்று விகுதியவாய் வருவனவும், இவை போல்வன பிறவும், வினையெச்ச வினைகளாம்; இவற்றுள், முன்னைய ஐந்தும் இறந்தகாலமும், "செய" என்பதொன்று நிகழ்காலமும், ஒழிந்த ஆறும் எதிர்காலமுங் காட்டுவனவாம். ]

உ-ம்.

| இறந்தகாலம். | நிகழ்காலம், அல்லது முக்காலத்துக்கும் பொது. | எதிர்காலம். | எதிர்மறை. |
|---|---|---|---|
| (1.) நடந்து, | நடக்க, | (7.) நடக்கின், | செய்யாது. |
| உண்டு, | உண்ண, | நடந்தால், | நடவாது. |
| சென்று, | (6.) செய்ய, | நடந்தக்கால், | செய்யாமல். |
| கற்று, | ——— | நடத்தற்கு, | நடவாமல். |
| ——— | செய்குப, | (8.) ஆடிய, | செய்யா. |
| ஆடி, | நடப்ப, | (9.) ஆடியர், | நடவா. |
| ஆய், | | (10.) விடுவான, | ——— |
| (2.) உண்குபு, | | (11.) நடப்பான், | அன்றி. |
| (3.) உண்ணா, | | (12.) விடுபாகு, | இன்றி. |
| (4.) உண்ணூ, | | செய்யில், | |
| (5.) உண்டென, | | காண்டலும், | |
| ——— | | | |
| தழீஇ. | | | |
| புக்கு. | | | |
| விட்டு, | | | |
| பெற்று, | | | |



**344.** THE WORDS BY WHICH THESE ARE FOLLOWED

அவற்றுள்,

௩௱௪௪. முதலி னான்கும் ஈற்றின் மூன்றும்
வினைமுதல் கொள்ளும்; பிறவும்ஏற்கும்பிற.

[மேலைச் சூத்திரத்து முதற்கட் கூறிய செய்து, செய்பு, செய்யா, செய்யூ என்னு நான்கும், இறுதிக்கண்கூறிய வான், பான், பாக்கு என்னு மூன்றும் தன் கர்த்தாவின் வினையைக்கொண்டு முடியும்; இடை நின்ற செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர் என்னும் ஐந்தும், இன்னவென்றதனால் வருவனவும், வினையெச்சக்குறிப்புகளும் வினைமுதலையும் அஃதல்லாத பிற கர்த்தாவின் வினையையுங் கொண்டு முடியும்.]

(உ-ம்.)
அவன் உண்டுவந்தான்.
அவன் உண்புவந்தான்.
அவன் உண்ணாக்களிப்பான்.
அவன் உண்ணூமகிழ்வான்.
அவன் கொல்வான் எழுந்தான்.
அவன் அலைப்பான் சென்றான்.
அவன் உண்பாக்குச் சென்றான்.
} வினைமுதலைக் கொண்டன.

———

அவன் உண்டென மகிழ்ந்தான்.
அவன் உண்டென மகிழ்ந்தான் இவன்.
அவன் உண்ண வந்தான்.
அவன் உண்ண வந்தான் இவன்.
அவன் உண்ணின் மகிழ்வான்.
அவன் உண்ணின் மகிழுவான் இவன்.
அவன் உண்ணிய மகிழ்வான்.
அவன் உண்ணிய மகிழ்வான் இவன்.
} வினைமுதலையும் பிறவினைமுதலையுங் கொண்டன

———

[அவன் உண்டால் உவப்பான். அவன் உண்டால் உவப்பான் இவன்.]

## 345. THE SAME: A SPECIAL RULE.

௩௱௪௫. சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும்.

[ முதலினூன்கும், ஈற்றின் மூன்றும் என்ற வினையெச்சங்கள் சினைவினையாயின், அவை தன் கர்த்தாவின் வினையைக் கொள்ளும் என்ற விதியானே சினையொடுமுடிதலே அன்றி, முதலுடனும் முடியும்: அங்ஙனம் முடியுமாயினும் சினையொடு முடிதற்கு ஒற்றுமை யுண்மையின் வினைமுதல் கொண்டதேயாம். ]

(உ-ம்.) கால் ஒடிந்து இற்று வீழ்ந்தது. [சினையொடு முடிந்தது.]
கால் ஒடிந்து வீழ்ந்தான். [வினைமுதலோடு முடிந்தது.]

## 346. FORMS OF THE ADVERBIAL PARTICIPLE INTERCHANGED.

௩௱௪௬. சொற்றிரி யினும்பொருள் திரியா வினைக்குறை.
[ வினு 137. ]

[ "முதலி னூன்கும் ஈற்றின் மூன்றும் வினைமுதல் கொள்ளும்" என்ற வினையெச்ச வாய்பாடுகளாகப் பிறவினையெச்ச வாய்பாடுகள் திரியினும், அவற்றின் பொருள் திரியா. ]

(உ-ம்.) ஞாயிறுபட்டு வந்தான். [பட.]
யான் கொள்வான் பொருள் கொடுத்தான். [கொள்ள.]

## 347. WHEN A CONJUGATED APPELLATIVE [321.] IMPLIES ACQUISITION IT MUST NOT BE CONSTRUED WITHOUT A VERB IMPLYING THIS.

௩௱௪௭. ஆக்க வினைக்குறிப் பாக்கம் இன்றியலா.

[ ஆக்கத்தால் வரும் வினைக்குறிப்புச் சொற்கள் ஆக்கச் சொல்லின்றி வாரா. ]

(உ-ம்.) சாத்தன் நல்லன் ஆயினன். [ஆக்கச் சொல் விரிந்துந் தொக்கும் நின்றது.]
சாத்தன் நல்லன்.
கல்வியாற் பெரியன் ஆயினன்.
கல்வியாற் பெரியன்.
சாத்தன் நல்லன் என்பது இயற்கை வினைக்குறிப்பாயில் ஆக்கச் சொல் இன்றிவரும்.

**348.** THE FINITE VERBAL FORM செய்யும் CANNOT BE USED WITH THE PLURAL OF THE MASCULINE OR FEMININE.

௩௪௮. பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மையிற்,
செல்லா தாகும், செய்யுமென் முற்றே.

[ உயர்திணைப் பன்மைப் படர்க்கையினும், முன்னிலையினும், தன்மையினும், செல்லாது செய்யும் என்னும் எச்சத்தானும் செய்யும் என்னு முற்று. ]

(உ-ம்.) அவன். அவள். அது. அவை } உண்ணும்.

**349.** THE INTERROGATIVE யார்.

௩௪௯. யார் என் வினுவினைக் குறிப்புயர் முப்பால்.

[ வினுப் பொருண்மையைத் தரும் யார் என்னும் வினைக்குறிப்பு முற்று உயர்திணைமுப்பாற்கும் பொதுவினையாம். ]

(உ-ம்.) அவன். அவள். அவர். } யார்.

**350.** THE INTERROGATIVE எவன்.

௩௫௦. எவன் என் வினுவினைக் குறிப்பிழி இருபால்.

[ வினுப்பொருண்மையைத் தரும் எவன் என்னும் வினைக்குறிப்புமுற்று அஃறிணை இருபாற்கும் பொதுவினையாம். ]

(உ-ம்.) அஃதெவன்? அவையெவன்?

**351.** FINITE VERBS USED AS PARTICIPLES.

௩௫௧. வினை முற் றேவினை எச்சம் ஆகலும்,
குறிப்பு முற் றீரெச்சம் ஆகலும் உளவே.

[ வினு 95. ]

[ வினைமுற்றே வினையெச்சம் ஆகி வருதலும், வினைக்குறிப்பு முற்றே வினையெச்சமாகியும், பெயரெச்சமாகி வருதலும், உளவாம். ]

(உ-ம்.) நடந்தான் வந்தான். =
நடந்து வந்தான்.
நாள் அன்று போகி, = அன்றி.
வெந்திறலினன் விறல்வழுதியொடு, திறலினனாகிய.

இரண்டாவது வினையியல் முற்றிற்று.

# நன்னூல்.



## II. சொல்லதிகாரத்தில்

### (III.) இடையியல்.



**352.** PARTICLES IN GENERAL.

௩௫௨. வேற்றுமை, வினை, சாரியை, ஒப்புருபுக
ள், தத்தம்பொருள, இசைநிறை, அசைநிலை,
குறிப்பெனஎண் பகுதியிற் றனித்தியல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும் வந்தொன்றுவ திடைச்சொல்.
[ வினு. 107. 46. ]

[ எழுவாயுருபு முதலிய எட்டு வேற்றுமையுருபுகளுள் பெயரும் பெயரது விகாரமுமாகிய எழுவாயும் விளியும் ஒழித்து ஒழிந்த ஐம்முதலிய ஆறு உருபுகளும், பகுதி விகுதி இடைநிலை என்னும் தெரிநிலையும் குறிப்புமாகிய வினையுருபுகளுள் முதனிலை தனிவினைப்பெயரும் பொருளாதி அறுவகைப்பெயருமாகிய பகுதி ஒழித்து ஒழிந்த விகுதிமுதலிய வினையுருபுகளும், அன் ஆன் முதலிய சாரியை உருபுகளும், போலப்புரைய முதலிய உவம உருபுகளும் பிறவாறு தத்தமக்குரிய பொருளை உணர்த்தி வருவனவும், வேறுபொருள்இன்றிச் செய்யுள் இசைநிறைத்தலே பொருளாக வருவனவும், அசைத்தலே பொருளாக நிற்பனவும், வெளிப்படையின்வரும் இவைபோலாது குறிப்பின் வருவனவும் என்னும் எட்டுவகையினை யுடையவாய்த் தனித்து நடத்தல் இன்றிப் பெயரின்அகத்தும் வினையினகத்தும் அவற்றின்புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்கள் ஆறனுள் ஓரிடத்து ஒன்றேனும் பலவேனும் வந்து அப்பெயர் வினைகட்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது இடைச்சொல்லாம். ]

**353.** SIGNIFICANT PARTICLES.

௩௫௩. தெரிநிலை தேற்றம் ஐயமுற் றெண்சிறப்
பெதிர்மறை எச்சம் வினாவிழை வொழிஇசை
பிரிப்புக் கழிவாக்கம் இன்னன இடைப்பொருள்.
[ வினா 110. ]

[ தெரிநிலை முதலாக விதந்த பதினான்கும் இவை போல்வன பிறவும் மேல் தத்தம் பொருள என்ற இடைச்சொற் பொருள்களாம். ]

**354.** USES OF THE PARTICLE ஏ.

௩௫௪. பிரிநிலை வினாஎண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை என, ஆ றேகாரம்மே.
[ வினா 111. ]

[ தெரிநிலை முதலிய பதினான்கும், அவைபோல்வன பிறவும் ஆகிய பொருள்களுள்ளும், இசைநிறைத்தல் அசைத்தல் குறிப்பென்னும் மூன்று பொருள்களுள்ளும், பிரிநிலைமுதலிய ஆறு பொருளையும் தரும் ஏகார இடைச்சொல். ]

**355.** USES OF ஓ.

௩௫௫. ஒழியிசை வினாச் சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனஎட் டோவே.
[ வினா 112. ]

[ ஒழியிசை முதலிய எட்டுப்பொருளையும் தரும் ஓகார இடைச்சொல். ]

**356.** USES OF என AND என்று.

௩௫௬. வினைபெயர் குறிப்பிசை எண்பண் பாறினும்
என, எனுமொழிவரும், என்றும்அற் றே.

[ வினைப்பொருள் முதலிய ஆறு பொருளினும் "என" என்னும் இடைச் சொல் வரும்; "என்று" என்னும் இடைச்சொல்லும் அவ்வாறுவரும். ]

### 357. USES OF உம்.

௩௫௭. எதிர்மறை, சிறப்பையம், எச்ச முற் றளவை
தெரிநிலை, ஆக்கமோ டும்மை எட்டே.
[ வினை 113. ]

[ எதிர்மறை முதலிய எட்டுப் பொருளையும் தரும் உம்மை இடைச்சொல். ]

### 358. SPECIAL RULE REGARDING உம்.

௩௫௮. முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்.
[ வினை 113. ]

[ முற்றும்மை ஒரோ விடங்களில் எச்ச உம்மையும் ஆம். ]

(உ-ம்.) எல்லாரும் இதுசெய்யார்.
ஆறுந் தருவது வினையே.

### 359. FINAL உம்.

௩௫௯. செவ்வெண் ஈற்றதாம் எச்ச உம்மை.
[ வினை 113. ]

[ எச்ச உம்மை செவ்வெண்ணின்கண் வரும்ஆயின் ஈற்றின்கண் வரும். ]

(உ-ம்.) செய்பவன், கருவி, நிலஞ், செயல், காலஞ்,
செய் பொருளாறுந் தருந்திறத்தது வினையே

### 360. THE NOUN OF NUMBER SOMETIMES INSERTED, AND SOMETIMES OMITTED.

௩௬௦. பெயர்ச்செவ் வெண்ணே, என்றா, எனா, எண்
ணான்குந் தொகைபெறும்; உம்மை, என்றென, ஓ
டிந்நான்கெண்ணும்அஃ தின்றியும் இயலும்.

[பெயர்களினிடையே எண்ணிடைச்சொல் தொக்கு நிற்பவருஞ் செவ்வெண்ணும், பெயரோடு தொகாதுவரும் "ஏ" எண்ணும், "என்றா" எண்ணும், "எனா" எண்ணும், ஆகிய நான்கும் தொகைபெற்று நடக்கும்; "உம்மை" எண்ணும், "என்று" எண்ணும், "என" எண்ணும் "ஒடு" எண்ணும் ஆகிய இந்நான்கெண்ணும், தொகைபெற்றும், பெறாதும் நடக்கும்.]

(உ-ம்.) சாத்தன், கொற்றன், தேவன், பூதன், நால்வரும் வந்தார்.

[தொகை பெற்றே வந்தது.]

சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும் வந்தார்.
சாத்தனுங் கொற்றனுந் தேவனும் பூதனும் நால்வரும் வந்தார்.

[தொகை பெறாதும் பெற்றும் வந்தது.]

(பிறவும் அன்ன)



**361.** என்று, என, ஒடு NOT ALWAYS REPEATED AFTER EACH NOUN.

௩௬௧. என்றும், எனவும், ஒடுவும் ஒரோ வழி
நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.

[விஞ 114.]

[இம்மூன்றெண்ணும் எண்ணும் பொருளோடு நிற்றலே அன்றி, ஓரிடத்து நின்றும் பிரிந்தெண்ணும் பொருள்தோறும் பொருந்தும்.]

(உ-ம்.) வினைபகை என்றிரண்டின் எச்சம்.
பகை பாவம் அச்சம் பழி என நான்கும்.
பொருள், கருவி, காலம் வினையிடனொடைந்தும்.



**362.** CONNECTING PARTICLES WITH VERBS.

௩௬௨. வினையொடு வரினும் எண்இனைய ஏற்பன.

[எண்ணிடைச்சொற்கள் வினையோடு வரினும் மேற்பெயரோடு வந்தாற்போலும் ஏற்பன.]

(உ-ம்.) (1.) மண்டில மழுங்க, மலைநிறங்கிளர.
வண்டினம் மலர் பாய்ந்தூத, மிசையே.
கண்டலங் கானங் குருகினம் ஒலிப்ப.

[உம்மை இடைச்சொல் தொக்கு நின்றது.]

(2) கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தான்.

(3) உண்ணவென்று தின்கவென்று பூசவென்று முடிக்கவென்று வந்தான்.

(4.) ஆடல் பாடலொடு வந்தான்.

### 363. THE USES OF தில்.

௩௬௩. விழைவே காலம் ஒழியிசை தில்லே.

[ இம்மூன்று பொருளையும் தரும் "தில்" என்னும்இடைச்சொல். ]

(உ-ம்.) (1.) அரிவையைப் பெறுக தில்லம்மயானே. [விழைவு.]
(2.) பெற்றாங்கறிக தில்லம்ம இவ்வூரே. [காலம்.]
(3.) வருக தில்லம்ம வெஞ்சேரிசேர. [ஒழியிசை.]

### 364. THE USES OF மன்.

௩௬௪. மன்னே அசைநிலை, ஒழியிசை, ஆக்கம்,
கழிவு, மிகுதி, நிலை பேறாகும்.

[ இவ்வாறு பொருளையும் தரும் "மன்" என்னும் இடைச்சொல். ]

(உ-ம்.) அது மற்கொண்கன்றேரே. [அசைநிலை.]
கூரியதோர் வாண்மன. [ஒழியிசை.]
பெருடியன் மன். [ஆக்கம்.]
சிறியகட் பெறினே எமக்கீயுமன்னே. [கழிவு.]
எந்தை எமக்கருளுமன்! [மிகுதி.]
மன்னா உலகத்து மன்னிய புரிமோ. [நிலைபேறு.]

### 365. THE USES OF மற்று.

௩௬௫. வினைமாற்றசைநிலை பிறிதெனுமற்றே.

[ இம்மூன்று பொருளையும் தரும் "மற்று" என்னும் இடைச்சொல். ]

(உ-ம்.) இனிமற்றொன்றுரை. [வினைமாற்று]
அது மற்றம்ம. [அசைநிலை.]
மற்றொன்று சூழினும். [பிறிது.]

### 366. THE SAME.

௩௬௬. மற்றையதென்பது சுட்டிஅதற்கினம்.

[ மேற்கூறிய மற்றென்னும் இடைச்சொல் பொருள் மூன்றனுள் மற்றையதென்னும் பொருளாகிய வினைமாற்றும் பிறிதும் அங்ஙனங் கருதிய தற் கினமாகிய வினைமாற்றும், இனமாகிய பிறிதும் ஆம், அன்றி வேறுவினை மாற்றும் வேறு பிறிதும் அல்லவாம். ]

(உ-ம்.) மற்றையதுங் காணவேண்டும்.

### 367. USES OF கொல்.

௩௬௭. கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.

[ "கொல்" என்பது இவ்விரண்டு பொருளையும் தருஞ்சொல்லாம். ]

(உ-ம்.) (1.) இவ்வுருக்குற்றி கொல்லோ மகன்கொல்லோ. [ஐயம்.]
(2.) சென்ற நங்காதலர் வருவர் கொல். [அசைநிலை.]

---

### 368. USE OF ஒடு AND தெய்ய.

௩௬௮. ஒடுவுந் தெய்யவும் இசைநிறை மொழியே.

[ இவ்விரண்டும் இசைநிறைத்தற் பொருளைத் தருஞ்சொற்களாம். ]

(உ-ம்.) விதைக்குறு வட்டில் போதொடு பொதுள.
சொல்லேன்றெய்ய நின்னொடு பெயர்ந்தே.

---

### 369. USES OF அந்தில் AND ஆங்கு.

௩௬௯. அந்தில் ஆங் கசைநிலை, இடப்பொருள் அவ்வே.

[ இவ்விரண்டிடைச்சொல்லும் அசைநிலைப்பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும். ]

(உ-ம்.) அந்திற் கழலினன் கச்சினன். [அசைநிலை.]
வருமே சேயிழை அந்திற் கொழுநற் காணிய. [இடம்.]

---

ஆங்கத் திறனல்ல யாங்கழற. [அசைநிலை.]
ஆங்காங்காயினுமாக. இடம்.]

---

### 370. USES OF அம்ம.

௩௭௦. அம்ம உரையசை, கேண்மின், என் றாகும்.

[ "அம்ம" என்பது உரையசைப் பொருளதாயும், ஒன்றுசொல்வன் கேண்மின் என்னும் ஏவற்பொருளதாயும் வரும். ]

(உ-ம்.) அதுமற்றம்ம. [உரையசை.]
அம்மவாழி தோழி. [கேண்மின்.]

### ௩௭௧. USE OF மா.

௩௭௧. மா என் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

[ "மா" என்னுஞ் சொல்வியங்கோளின்கண் வரும் அசைச்சொல் லாம். ]

(உ-ம்.) மாயக்கடவுட்குயர்க மாவலனே.

### ௩௭௨. USE OF SUNDRY VOCATIVE PARTICLES.

௩௭௨. மியா, இக, மோ, மதி, அத்தை, இத்தை,
வாழிய, மாள, ஈ, யாழ, முன்னிலையசை.

[ இங்ஙனங் கூறிய பத்திடைச்சொற்களும் முன்னிலைக்கண்வரும் அசைநிலைகளாம். ]

(உ-ம்.) சிலையன் செழுந்தழையன சௌமியா. [மியா.]
நண்டுறையூர காணிக. [இக.]
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ. [மோ.]
சென்மதி பெரும. [மதி.]
சொலியரத்தை நின்வெகுளி. [அத்தை.]
நீ ஒன்றுபாடித்தை. [இத்தை.]
காணியவா வாழியமலைச்சாரல். [வாழிய.]
சிறிது தவர்ந்தீக, மாள, நின்பரிசிலர் உய்ம்மார். [மாள.]
சென்றீ, பெரும நிற்றகைக்குநர் யாரே. [ஈ.]
செய்வினை மருங்கிற் செலவயர்ந்தி, யாழ. [யாழ.]

### ௩௭௩. REDUNDANT PARTICLES.

௩௭௩. யா, கா, பிற பிறக் கரோ, போ, மாதிரும்,
சின், குரை, ஒரும், போலுங், இருந்திட்
டன்றும், தாம், தான், கின்று,நின் றசைமொழி.

[ இவ்விருபதிடைச்சொல்லும் முன்னைய போலாது, எல்லா இடத்தினும் எல்லாச் சொல்லினும் வரும் அசைச்சொல்லாம். ]

(உ-ம்.) யா, பன்னிருவர் மாணாக்கர் அகத்தியனார்க்கு. [யா.]
புறநிழற் பட்டாளோ இவள் இவட்காண்டிகா, [கா.]
ஆயனை அல்லைபிற. [பிற.]
பிறக்கிதனுட் செல்லான் பெருந்தவம் பட்டான். [பிறக்கு]
இருங்குயிலாலும், அரோ. [அரோ.]
பிரியன் வாழாதென், போ. [போ.]
விளிந்தன்று, மாதோ, தெளிந்தவெங் கண்ணே. [மாதோ.]
காண்டிகுமல்லமோ கொண்க. [இகும்.]
ஈங்காகிய வால்என்றிசின். [சின்.]
அதுபெறல் அருங்குரைத்தே. [குரை.]
அஞ்சுவதோரும் அறனே. [ஓரும்.]
வடுவென்ற கண்ணாய் வருந்தினை, போலும். [போலும்.]
எழுந்திருந்தேன். [இருந்து.]
நெஞ்சம் பிளந்திட்டு. [இட்டு.]
தேவாதி தேவன் அவன்சேவடி சேர்தும் அன்றே. [அன்று.]
பணியும் ஆம் என்றும் பெருமை, சிறுமை.
அணியும் ஆந் தன்னை வியந்து. [ஆம்.]
நீர்தாம், நீதான். [தாம், தான்.]
யான்பிறன் அளியன் வாழ்வான் ஆசைப்பட்டிருக்கின்றேன். [கின்று]
அழல் அடைந்த மன்றத்தாத்தையாய் நின்றார் நிழல் அடைந்தே
நின்னை என்றேத்த. [நின்று.]

இடையியல் முற்றிற்று.

# நன்னூல்.

## II. சொல்லதிகாரத்தில்

### (IV.) உரியியல்.

**374.** QUALIFYING WORDS IN GENERAL.

உரிச்சொல்லின் பொது இலக்கணம்.

௩௭௪. பல்வகைப் பண்பும் பகர்பெயர் ஆகி
ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன உரிச்சொல்.
[ விஞ 47. ]

[ பண்புகள் குணப்பண்பும் தொழிற்பண்பும் ஆகிய இரண்டனுள் அடங்குமாயினும், இசை குறிப்புப் பண்பெனப் பலவேறு வகைப்படுதலின் பலவேறு வகைப்பட்ட பண்புகளையும் உணர்த்தும் பெயராகி அங்ஙனம் உணர்த்துழி ஒருசொல் ஒருகுணத்தை உணர்த்துவனவும், பல குணத்தை உணர்த்துவனவுமாய் வினைப்பெயர் வினைகளை விட்டு நீங்காவாய்ச் செய்யுட் குரியனவாய்ப் பொருட்குரிமை பூண்டு வருவன உரிச்சொல்லாம். ]

**375.** DEFINITION OF "QUALITY": பண்பு.

௩௭௫. உயிர், உயிர் அல்லதாம் பொருட்குணம் பண்பே.

[ உயிராகியபொருளும், உயிர்அல்லாத பொருளும் என இருவகையுள் அடங்கும் உலகத்துப் பொருள்களின் குணங்கள் பண்பாம். ]

**376.** FIVE-FOLD DIVISION OF LIVING CREATURES.

உயிராகிய பொருள்.

௩௭௬. மெய், நா, மூக்கு, நாட்டம், செவிகளின்
ஒன்றுமுதலாக்கீழ்க் கொண்டுமேல் உணர்தலின்
ஓர்அறி வாதியா உயிர்ஐந் தாகும்.

[ இங்ஙனம் மெய் முதலாகக்கூறிய ஐம் பொறிகளானும், பரிசம், இரதம், கந்தம், உருவம், சத்தம் என்னும் ஐம்புலனையும் உணருங்கால் மெய்யாற் பரிசத்தை உணரும் உணர்ச்சி ஒன்று முதலாகக் கீழ்ப்போன உணர்ச்சியுங் கொண்டு மேல்வரும் புலன்களை ஒன்றோடொன்றாக உணர்தலின் ஓரறிவுயிர் முதலாக ஐந்தாம் அவ்வுயிர். ]

**377.** CREATURES OF ONE SENSE.

ஓர்அறிவுயிர்.

௩௭௭. புல்மர முதலஉற் றறியும்ஓர் அறிவுயிர்.

[ புல்லு, மரம், முதலியன மெய்யாற் பரிசித்துப் பரிசத்தை அறியும் ஓரறிவுயிர்களாம். ]

**378.** CREATURES OF TWO SENSES.

ஈர்அறிவுயிர்.

௩௭௮. முரணந் தாதிநா வறிவோடீர் அறிவுயிர்.

[ இப்பியும், சங்கும் முதலியன கீழ்ப்போன மெய்யறிவே அன்றி நாவால் இரதத்தை அறியும் அறிவோடு ஈரறிவுயிர்களாம். ]

**379.** CREATURES OF THREE SENSES.

மூவறிவுயிர்.

௩௭௯. சிதல் எறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.

[ கறையானும், எறும்பும் முதலியன கீழ்ப்போன இரண்டறிவுகளே அன்றிக் கண்ணால் உ வத்தை அறியும் அறிவினோடு மூவறிவுயிர்களாம். ]

**380.** CREATURES OF FOUR SENSES.

நாலறிவுயிர்.

௩௮0. தும்பி, வண்டாதி கண் அறிவினால் அறிவுயிர்.

[ தும்பியும், வண்டும் முதலியன, கீழ்ப்போன மூன்றறிவே அன்றிக் கண்ணால் உருவத்தை அறியும் அறிவினோடு நாலறிவுயிர்களாம். ]

---

**381.** CREATURES OF FIVE SENSES.

ஐயறிவுயிர்.

௩௮க. வானவர், மக்க ணரகர், விலங்கு, புள்,
ஆதிசெவி அறிவோ டைஅறி வுயிரே.

[ வானவரும், மக்களும், நரகரும், விலங்கும், புள்ளும் முதலியன, கீழ்ப்போன நாலறிவே அன்றிச் செவியாற் சத்தத்தை அறியும் அறிவினோடு ஐயறிவுயிர்களாம். ]

---

**382.** THINGS WITHOUT LIFE.

உயிரல் பொருள்.

௩௮உ. உணர்வியல் ஆம்உயிர் ஒன்றும் ஒழித்த
உடல்முதல் அனைத்தும் உயிர்அல் பொருளே.

[ அறிவு மயமாம் உயிர் ஒன்றுமே அன்றி, அவ்வுடம்பு முதலிய உலகத்துப் பொருள்கள் எல்லாம் உயிர் அல்லாத பொருள்களாம். ]

---

**383.** BODY AND SOUL.

புறனடை.

௩௮௩. ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும்,
வேற்றுமை நயத்தின் வேறே உடல், உயிர்.

[ எவ்வுயிர் எவ்வுடம்பெடுத்ததோ அவ்வுடம்பின் மயமாய் நிற்கும் ஒ றுமை நயங்கருதியவழி ஒன்றுபோற்றோன்றுமாயினும் உயிர் சித்தாயு உடம்பு சடமாயும் நிற்கும் வேற்றுமை நயமாகிய உண்மை கருதியவ அவ்விரண்டும் தம்முள் வேறாம்; ஆதலின் உயிரோடு கூடி நின்ற காலத்து அவ்வுடம்பினை உயிரல்பொருளென்றாம். ]



**384.** QUALITIES OF THE LIVING PRINCIPLE.

உயிரின்குணம்.

௩௮௪. அறிவருள், ஆசை, அச்ச மானம்,
நிறை, பொறை, ஓர்ப்புக் கடைப்பிடி, மையல்,
நினைவு, வெறுப்புவப் பிரக்க நாண், வெகுளி,
துணிவழுக் காறன் பெளிமை, எய்த்தல்,
துன்பம், இன்பம், இளமை, மூப்பிகல்,
வென்றி, பொச்சாப் பூக்க மத மறம்,
மறவி, இனைய உடல்கொள் உயிர்க்குணம்.

[ அறிவு முதலிய முப்பத்திரண்டும் இவை போல்வன பிறவும் உட லோடு கூடிய உயிர்க்குணங்களாம். ]



**385.** FACULTIES OF LIVING CREATURES.

உயிரின்தொழில்.

௩௮௫. துய்த்தல், துஞ்சல், தொழுதல், அணிதல்,
உய்த்தல், ஆதி உடல் உயிர்த் தொழிற்குணம்.

[ ஐம்புலனையும் நுகர்தல் முதலிய இவ்வைந்தும் இவைபோல்வன பிற வும் உடலோடு கூடிய உயிரின் தொழிற் குணங்களாம். ]

### 386. QUALITIES OF LIFELESS MATTER.

உயிர்அல்லாத பொருள்களின் குணம்.

௩அசு. பல்வகை வடிவிரு நாற்றம், ஐவண்ணம்,
அறுசுவை யூறெட் டுயிரல் பொருட்குணம்.

[வட்டம், இருகோணம், முக்கோணம், சதுரம், முதலிய பலவகை வடிவும், நற்கந்தம் துர்க்கந்தம் என்னும் இருநாற்றமும்; வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை என்னும் ஐந்துவண்ணமும்; கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு, இனிப்பு என்னும் ஆறு இரதமும்; வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, நொய்மை, சீர்மை, இழுமெனல், சருச்சரை என்னும் எட்டூறும், உயிரல்லாத பொருள்களின் குணங்களாம்.]

### 387. FACULTIES COMMON TO BOTH.

இருபொருட்கும் பொதுவான தொழிற்குணம்.

௩அஎ. தோன்றல், மறைதல், வளர்தல், சுருங்கல்,
நீங்கல், அடைதல், நடுங்கல், இசைத்தல்,
ஈதல் இன்னன, இருபொருட் டொழிற்குணம்.

[தோன்றல், முதலிய ஒன்பதும் இவை போல்வன பிறவும், உயிர்ப்பொருள் உயிரல்பொருள் என்னும் இரண்டற்கும் பொதுவான தொழிற்குணங்களாம்.]

### 388. WORDS IMPLYING EXCESS.

௩அஅ. சால, உறு, தவ, நனி, கூர், கழி, மிகல்.

[சால என்பது முதல் கழி என்பதீறாகக் கூறிய ஆறு உரிச்சொல்லும் மிகுதியாகிய ஒருகுணத்தை உணர்த்தும் சொற்கள் ஆம்.]

(உ-ம்.) பருவத்து சாலப் பலகொலெல்லா றெண்ணி. [சால.]
உறுவளி தூக்கும் உயர்சினைமாவின். [உறு.]
தவச்சேய் நாட்டார் ஆயினும். [தவ.]
நனிபேதையே. [நனி.]
பொறைசில்லா நோய்கூரப் புல்லென்றிசினே. [கூர்]
காமங்கழிகண் ணோட்டம். [கழி.]

## 389. MEANINGS OF கடி.

௩௮௯. கடிஎன் கிளவி: காப்பே, கூர்மை,
விரையே, விளக்கம், அச்சம், சிறப்பே,
விரைவே, மிகுதி, புதுமை, ஆர்த்தல்,
வரைவே, மன்றல், கரிப்பின் ஆகும்.

[ கடி என்னும் உரிச்சொல் காப்பு முதலிய பதின்மூன்று குணத்தை யும் உணர்த்தும். ]

(உ-ம்.) ஒண்சுடர் நல்லிருங் கடிநீலி. [காப்பு.]
கடிநுனைப்பகழி. [கூர்மை.]
கடிமாலைகுடி. [நாற்றம்]
கண்ணாடியன்ன கடிமார்பன். [விளக்கம்.]
கடி அரமகளிர்க்கே கைவிளக்காகி. [அச்சம்.]
கடிமாமிசைப் பூத்துக்கம்புளோடன்னமார்க்கும். [சிறப்பு.]
எம்மம்பு கடிவிடுது நும்மரண்சேர்மின். [விரைவு.]
கடிஉண் கடவுட்கிட்ட செழுங்குரல். [மிகுதி.]
கடிமுரசு. [ஆர்த்தல்.]
கடித்துக்கரும் பினைக்கண்டகாநூறி. [வரைவு.]
கடிவினைமுடிகினி. [மன்றல்.]
கடிமிளகுதின்ற கல்லா.மந்தி. [கரிப்பு.]

---

## 390. SYNONYMES OF சொல்.

௩௯௦. மாற்ற நுவற்சி, செப்புரை, கரை, நொடி,
இசை, கூற்றுப், புகறல், மொழி, கிளவி, விளம்பறை,
பாட்டுப் பகர்ச்சி, இயம்பல், சொல்லே.

[ மாற்றம் முதல் இயம்பல் ஈறுகக் கூறிய பதினாறும் சொல்என்னும் ஓர்குணத்தை உணர்த்தும் உரிச்சொற்களாம். ]

(உ-ம்.) கோவலர் வாய்மாற்றம்.
பொழுதறிந்து நுவல்.
செப்பலுற்றேன்
உரைப்பார் உரைப்பவை எல்லாம்.
அறங்கரை நாவின்.
ஆயிழைநொடாநொடியும்,
வாயிலிசையெனுப்புக்கு
உற்றதுகாங்கள் கூற.
புகன்றவன்றியும் பூமிகவருமே.
கண்டது மொழிமோ.
கிளக்கும் பாணகேளினி.
விளம்பினர் புலவர்.
அறைகுவன் எண்ணே.
அறம்பாடின்றே.
வார்த்தைபகர் குற்றேன்.
இடிபோல இயம்பினன்.

### 391. TWENTY-TWO SYNONYMES OF ஓசை.

௩௯௧. முழக்கிரட் டொலி,கலி, இசை,துவை, பிளிறிரை,
இரக்கழுக் கியம்பல், இமிழ்,குளி றதிர்,குரை,
கனை,சிலை, சும்மை, கவ்வை, கம்பலை,
அரவம், ஆர்ப்போ டின்னன, ஓசை.

[ முழக்கு முதலிய இருபத்திரண்டும் இவை போல்வன பிறவும் ஓசை என்னும் ஒருகுணத்தை உணர்த்தும் உரிச்சொற்களாம். ]

(உ-ம்.) முழங்குமுந்நீர்.
குடிஞை இரட்டும் கோடியர் நெடுவரை.
ஒல்லென ஒலிக்கும் ஒலிபுனல்.
கலிகெழு மூதூர்.
பறையிசை அருவி
தோறுவைதரூல்
பிளிறுவார் முரசம்.
இரைக்கும் அஞ்சிறைப் பறவைகள்.
இரங்கும் முரசினாம்.
அழுங்கினமூதூர்.
காலைமுரசமதியம்ப
இமிழ்கடல்.
குளிறு முரசம.
களிறு களித்த திருங்கார்.
குரைபுனற் கன்னி.
கனைகடற் சேர்ப்ப.
சிலைத்தார் முரசங் கறங்க.
தள்ளாதசும்மை மிகுதக்கணநாடு.
கவ்வைநீர் வேலி.
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்.
அறைகட லரவத்தானை.
ஆர்த்த பல்லியக்குழாம்.

---

### 392. DICTIONARIES TO BE CONSULTED FOR PARTICULAR WORDS.

௩௯௨. இன்ன தின்னுழி இன்னணம் இயலும்
என்றிசை நூலுள் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலில் பிங்கல முதலா
நல்லோர் உரிச்சொலி னயந்தனர் கொளலே.

[ பெயர், வினை, இடை, உரி என்னும் நால் வகைச்சொல்லுள் இன்ன சொல் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடத்துள்ளும் வழக்குச் செய்யுள் என்னும் இரண்டிடத்துள்ளும் இவ்விடத் திவ்விலக்கணத்ததாய் நடக்கும் என்று சொல்லக் கடவதாகிய இந்நூலுள் அவ்விலக்கணங் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுவதன்றி உரிச்சொல்லாகிய குணப்பெயரையும், வினைக் குணிப் பெயரையும் நிகண்டினுட் கூறினாற் போல விரித்துக் கூறக்கடவம் அல்லம், விரிக்கின் மற்றொன்று விரித்தல் என்னும் குற்றம் வரும் ஆதலின் அவற்றினைக் கண்டறிய வேண்டினார் இவ்விலக்கணம் அறிதற்கு முன்னரே வினைப் புலவராற் கூறப்பட்ட பிங்கலந்தை திவாகரம் சூடாமணி முதலிய நூல்களுள் வகுக்கும் உரிச்சொற் றொகுதியுள் விரும்பிக் கொள்க. ]

உரியியல் முற்றிற்று.

# நன்னூல்.

## II. சொல்லதிகாரத்தில்

### (V.) பொதுவியல்.

**393.** FORMS COMMON TO BOTH GENDERS.

௩௯௩. இருதிணை ஆண்பெணுள் ஒன்றனை ஒழிக்கும்
பெயரும் வினையுங் குறிப்பினானே.

[ உயர்திணை ஆண்பால் பெண்பால் என்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும். அஃறிணை ஆண்பால் பெண்பால் என்னும் இருபாற்கும் பொதுவான பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும், அவ்விருபாலுள் ஒருபாலை ஒழிக்கும் குறிப்பினான். ]

**394.** THE CHANGE OF ஆ TO ஓ IN CERTAIN POETICAL FORMS.

௩௯௪. பெயர்வினை இடத்து ன, ள, ர, ய ஈற்றயல்
ஆ, ஓ, ஆகலுஞ் செய்யுளுள் உரித்தே.

[ வினா 95. ]

[பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் னகார ளகார ரகார யகார ஈற்றயனின்ற விகுதிமுதல் ஆகாரம் ஓகாரம் ஆதலும் செய்யுளிடத்துரித்தாம்.]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ-ம்.) | (1.) | வில்லான் | என்பதிற்கு | வில்லோன் | எனவும். |
| | (2.) | தொடியாள் | எ-திற்கு | தொடியோள் | எனவும். |
| | (3.) | நல்லார் | எ-திற்கு | நல்லோர் | எனவும். |
| | (4.) | கொடியாய் | எ-திற்கு | கொடியோய் | எனவும் வரும். |

வண்ணான் முதலியவை வண்ணோன எனவரா.
கிழவோன் என அகாரம் ஓகாரம ஆயிற்று.

**395.** TERMINATIONS COMMON TO AFFIRMATIVE AND NEGATIVE FORMS.

௩௯௫. உருபும், வினையும், எதிர்மறுத் துரைப்பினும்
திரியா தத்தமீற் றுருபின் என்ப.

[ வி௵ 89. ]

[ எட்டுவேற்றுமை உருபுகளும், மூவகை வினைச்சொற்களும், எதிர்மறுத்துச் சொல்லுமிடத்தும், தத்தம் ஈற்றினின்றும் அவ்வவ்வுருபினின்றும் வேறுபடா என்றுசொல்லுவர் புலவர். ]

(உ-ம்.) செய்யான், செய்வான் என்பவற்றில் ஆன் என்னும் விகுதியைக்காண்க.
நடவாத, நடக்கிற என்பவற்றில் அ என்னும் விகுதியைக்காண்க.



**396.** HOWEVER COMPLEX THE SENTENCE THERE CAN BE BUT ONE FINITE WORD.

௩௯௬. உருபுபல அடுக்கினும், வினைவே றடுக்கினும்,
ஒருதம் எச்சம் ஈறுற முடியும்.

[ வி௵ 133. 135. ]

[ வேற்றுமை உருபுகள் விரிந்தும், தொக்கும், தம்முள் விரவிப்பல அடுக்கி வரினும், வெவ்வேறு பலஅடுக்கி வரினும், மூவகை வினைச்சொற்களும் தம்முள் விரவியடுக்கும் தன்மையவன்றி வெவ்வேறு பலஅடுக்கி வரினும், தத்தம் எச்சம் இறுதியில் ஒன்று வர அதனோடனைத்தும் முடிவனவாம். ]

(உ-ம்.) சாத்தன் யானையது கோட்டை நுனிக்கட் பொருட்டு வாளாற் குறைத்தான்.
[உருபுகள் விரவிப்பல அடுக்கி ஒருவினை கொண்டன.]
சாத்தனையுங் கொற்றனையுந் தேவனையும் பூதனையும் வாழ்த்தினான்.
[இரண்டாம் உருபு வேறுபல அடுக்கி ஒருவினை கொண்டன.]
சாத்தனுக்குங் கொற்றனுக்குந் தேவனுக்கும் பூதனுக்குந் தந்தை.
[நான்காம் வேற்றுமை வேறுபல அடுக்கி ஒருபெயரைக் கொண்டன.]
வாள் கைக்கொண்டான். [உருபு தொக்கு வந்தது.]
உண்டான், தின்றான், ஓடினான், பாடினான் சாத்தன்.



**397.** WORDS INTERPOSED BETWEEN THE GOVERNING AND GOVERNED FORMS.

௩௯௭. உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்
பெயர்வினை இடைப்பிற வரலும் ஆம்ஏற்பன.

[ வி௵ 132. ]

[வேற்றுமை உருபுகளும், முற்றுக்களும், பெயரெச்சங்களும், வினையெச்சங்களுங் கொண்டுமுடியும் பெயர்க்கும் வினைக்கும் இடையே பிற சொற்கள் வருதலுமாம், ஆண்டைக்குப் பொருந்துவன.]

(உ-ம்.) சாத்தன் (வயிறார) உண்டான்.
அறத்தை (அழகுபெற) செய்தான்.
விருந்தின்றி (ஒருபோதும்) உண்ணான்
பகைவரை (மாய) வெட்டினான்.



**398.** DEPENDANT WORDS MAY ALSO FOLLOW THEIR PRINCIPALS.

௩௯௮. எச்சப் பெயர்வினை யெய்தும் ஈற்றினும்.

[விரு 86. 87.]

[உருபுகளும் முற்றுக்களும் பெயர் எச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டு முடியும் எச்சமாகிய பெயரும் வினையும் அவற்றிற்கு ஈற்றினும் வரும்.]

(உ-ம்) சாத்தன் வந்தான்.
வந்து போனான். மரத்தைக் குறைத்தான்.
வந்தான் சாத்தன், போயினான் வந்து.
குறைத்தான் மரத்தை.



**399.** WORDS WHICH INCLUDE OTHERS BY IMPLICATION.

௩௯௯. ஒருமொழி யொழிதன் இனங்கொளற் குரித்தே.

[பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொற்களுள் ஒவ்வொன்று, எஞ்சி நின்ற தன்றன் இனங்களைக் கொள்ளுதற்கு உரித்தாம்.]

(உ-ம்.) சோற்றை நனி உண்டான். (கறியை நனி தின்றான்.)
நஞ்சு உண்டான் சாவான். (உண்டாள் சாவாள், உண்பது சாம்.)



**400.** COMMON NOUNS.

௪௦௦. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கு
மேல் வருஞ் சிறப்புப் பெயர் வினைதாமே.

[திணை பால் இடம் காலங்கட்கும் பொதுவாகிய பெயர் வினைகளினுடைய பொதுத்தன்மையினை நீக்கி ஒன்றற்கு உரிமைசெய்யும் மேல்வருஞ் சிறப்புப்பெயர் வினைகள்தாமே.]

(உ-ம்.) சாத்தன் இவன், சாத்தன் இது. [சிறப்புப்பெயர்.]
ஒருவர் என் ஐயர், ஒருவர் என் தாயர். [சிறப்புப்பெயர்.]
மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன. [சிறப்புவினை.]

யாம் எல்லாம் வருவம்.
நீர் எல்லாம் போமின்.
அவர் எல்லாம் வருவர்.
[எல்லாம் என்பது மூவிடத்திற்கும் பொதுமையை சிறப்புப் பெயராலும் வினையாலும் நீக்கின.]



**401.** IMPERFECT FORMS ARE FOLLOWED BY THEIR APPROPRIATE SUPPLEMENTARY WORDS.

௪0௧. பெயர், வினை, உம்மை, சொல், பிரிப்பெ'ன, ஒழிஇசை
எதிர்மறை, இசை, எனுஞ் சொல் ஒழிபொன்பதும்,
குறிப்புந், தத்தம் எச்சங் கொள்ளும்.

[பெயரெச்சமும், வினையெச்சமும், உம்மையெச்சமும், சொல்லெச்சமும், பிரிநிலையெச்சமும், எனவெச்சமும், ஒழியிசையெச்சமும், எதிர்மறையெச்சமும், இசையெச்சமும் ஆகிய சொல்லெச்சம் ஒன்பதும், குறிப்பெச்சம் ஒன்றும், தத்தம் எச்சங்களைக் கொண்டுமுடியும்.]

(உ-ம்) (1.) செய்த சாத்தன். [பெயர் எச்சம்.]
(2.) செய்து வந்தான். [வினை எச்சம்.]
(3.) சாத்தனும் வந்தான். [முன்னர் கொற்றன் வந்தான் உம்மை எச்சம்.]
(4.) இல்லென்றல் யார்க்கும் வசைஅன்று. [இல்லென்று சொல்லுதல் சொல்லெச்சம்.]
(5.) சாத்தனே கொண்டான். [பிறர் கொண்டிலர் பிரிநிலை எச்சம்.]
(6.) கடல் ஒல்லென ஒலித்தது. [என எச்சம்.]
(7.) உண்ணுதற்கோ வந்தான். [ஒழியிசை எச்சம்.]
(8.) யானோ செய்தேன். [எதிர்மறை.]
(9.) இப்பட்டுச் சேனம் [இசை எச்சம் சேனத்துள்ளது.]

ஆகுபெயர், அன்மொழித்தொகை முதலியன குறிப்பெச்சமாம்.



**402.** ELLIPSIS.

தொகை நிலைத்தொடர்.

௪0௨. பெயரொடு பெயரும், வினையும், வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபிடை
ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோ'னடப்பன தொகைநிலைத் தொடர்சொல்.

[ விஞ 151. ]

[ பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்லும், பெயர்ச்சொல்லோடு வினைச்சொல்லும், வேற்றுமை வினை பண்பெனப் பின்னர் வகுத்துக்கூறும் அறுவகைப் பொருட்புணர்ச்சிக்கண் அவற்றினுருபுகள் இடையே தொக்குநிற்ப இரண்டுமுதலிய பலசொற்கள் தொடர்ந்து ஒருமொழிபோல் நடப்பன யாவை அவை தொகை நிலைத் தொடர் சொற்களாம். ]



**403.** THE SIX KINDS of ELLIPTICAL EXPRESSIONS.

சOணி. வேற்றுமை, வினை, பண் புவமை, உம்மை,

அன்மொழி, எனஅத் தொகை ஆறாகும்.

[ விஞு 151. ]

[ வேற்றுமைத் தொகையும், வினைத்தொகையும், பண்புத்தொகையும், உவமைத்தொகையும், உம்மைத்தொகையும், அன்மொழித்தொகையும் என மேற்கூறிய தொகைநிலைத்தொடர்சொல் அறுவகைப்படும். ]



**404.** ELLIPSIS OF THE CASAL SIGN.

வேற்றுமைத் தொகை.

சOச. இரண்டு முதலா இடையா றுருபும்

வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே.

[ விஞு 152. ]

[ எழுவாய்க்கும் விளிக்கும் இடையே நின்ற இரண்டாவது முதலிய ஆறுவேற்றுமை உருபும் தொக்க தொடர்சொற்கள் வேற்றுமைத் தொகைகள் ஆம். ]

(உ-ம்.) நிலங்கடந்தான். [இருமொழித் தொகைநிலைத்தொடர்.]
யானைக்கோட்டு நுனிக்குறைத்தான். [பன்மொழித்தொகை நிலைதொடர்.]



**405.** ELLIPSIS IN VERBS OF THE SIGNS OF TENSE, PERSON, &c.

**வினைத்தொகை.**

சOரு. காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

[ விஞு 153. ]

[காலம் பற்றிப் புடை பெயர்ச்சி வினை உருபாகிய தம்மிறுதிக்கண் தொக்குநிற்பச் செய்வதாதி அறுபொருட் பெயராகிய தம் எச்சங் கொண்டபெயர் எச்சங்கள் வினைத்தொகைகள் ஆம்.]

(உ-ம்.) ஆடுவேல்.
ஆடிடம்.
திரிதொழில்.
உண்சோறு.
புணர்பொழுது.

---

**406.** ELLIPSIS OF THE ADJECTIVE SIGN: APPOSITION.

சOசு. பண்பை விளக்கு மொழி தொக்கனவும்,
ஒருபொருட் கிருபெயர் வந்தவுங், குணத்தொகை.
[வினா 154.]

[குணப்பெயரோடு குணிப்பெயர் புணருங்கால் அக்குணியோடு குணத்துக்கு உண்டாகிய ஒற்றுமைநயத்தை விளக்குதற்கு ஆண்டு வரும் ஆகிய என்னும் மொழியாகிய பண்புருபு தொக்குநிற்பனவும், அப்பண்புருபு தொக்குநிற்பப் பொதுப்பெயருஞ் சிறப்புப்பெயரும் ஆய் ஒருபொருட்கு இருபெயர்வந்தனவும் ஆகிய இவ்விரண்டும் பண்புத்தொகைகள் ஆம்.]

(உ-ம்) ஆயன் சாத்தன். [இருபெயர் ஒட்டுப்பண்புத்தொகை.]

செந்தாமரை. [செம்மையாகிய தாமரை.]
கருங்குவளை. [கருமையாகிய குவளை.]

---

**407.** ELLIPSIS OF PARTICLE OF COMPARISON.

சOஎ. உவம உருபில துவமத் தொகையே.
[வினா 155.]

[வினை பயன் மெய் உருவு என்பன பற்றிவரும் உவம உருபுகள் தொக்க தொடர்சொற்கள் உவமத்தொகைகள் ஆம்.]

(உ-ம்) மதிமுகம். [மதிபோலும் முகம்.]
பவளவாய். [பவளம் போலும் வாய்.]

---

**408.** PARTICLES OF COMPARISON.

சOஅ. போலப், புரைய, ஒப்ப, உறழ,
மானக், கடுப்ப, இயைய, ஏய்ப்ப,
நேர, நிகர, அன்ன, இன்ன,
என்பவும், பிறவும், உவமத் துருபே.
[வினா 109.]

[காலம் பற்றிப் புடை பெயர்ச்சி வினை உருபாகிய தம்மிறுதிக்கண் தொக்குநிற்பச் செய்வதாதி அறுபொருட் பெயராகிய தம் எச்சங் கொண்ட பெயர் எச்சங்கள் வினைத்தொகைகள் ஆம்.]

(உ-ம்.) ஆடுவேல்
ஆடிடம.
திரிதொழில்.
உண்சோறு
புணர்பொழுது.



**406.** ELLIPSIS OF THE ADJECTIVE SIGN: APPOSITION.

௪௦௬. பண்பை விளக்கு' மொழி தொக் கனவும்,
ஒருபொருட் கிருபெயர் வந்தவுங், குணத்தொகை.
[விஞ 154.]

[குணப்பெயரோடு குணிப்பெயர் புணருங்கால் அக்குணியோடு குணத்துக்கு உண்டாகிய ஒற்றுமைநயத்தை விளக்குதற்கு ஆண்டு வரும் ஆகிய என்னும் மொழியாகிய பண்புருபு தொக்குநிற்பனவும், அப்பண்புருபு தொக்குநிற்பப் பொதுப்பெயருஞ் சிறப்புப்பெயரும் ஆய் ஒருபொருட்கு இருபெயர்வந்தனவும் ஆகிய இவ்விரண்டும் பண்புத்தொகைகள்ஆம்.]

(உ-ம) ஆயன் சாத்தன். [இருபெயர் ஒட்டுப்பண்புத்தொகை.]

செந்தாமரை [செம்மையாகிய தாமரை]
கருங்குவளை [கருமையாகிய குவளை.]



**407.** ELLIPSIS OF PARTICLE OF COMPARISON

௪௦௭. உவம உருபில துவமத் தொகையே.
[விஞ 155.]

[வினை பயன் மெய் உருவு என்பன பற்றிவரும் உவம உருபுகள் தொக்க தொடர்சொற்கள் உவமத்தொகைகள் ஆம்.]

(உ-ம) மதிமுகம். [மதிபோலும் முகம்.]
பவளவாய. [பவளம் போலும் வாய்.]



**408.** PARTICLES OF COMPARISON.

௪௦௮. போலப், புரைய,' ஒப்ப, உறழ,
மானக், கடுப்ப, இயைய, ஏய்ப்ப,
நேர, நிகர, அன்ன, இன்ன,
என்பவும், பிறவும், உவமத் துருபே.
[விஞ 109.]

[போல என்பது முதலிய செய என் எச்சம் பத்தும், அன்ன, இன்ன என்னும் பெயரெச்சக் குறிப்பிரண்டும், இவை போல்வன பிறவும், உவம உருபுகள் ஆம்.]

---

**409.** ELLIPSIS OF உம், THE CONJUNCTIVE PARTICLE.

சOகூ. எண்ணல், எடுத்தல், முகத்த னீட்டல்,
எனுநான் களவையுள் உம்மில தத்தொகை.
[வினா 156.]

[எண்ணல் அளவை, எடுத்தல் அளவை, முகத்தல் அளவை, நீட்டல் அளவை என்னும் நால்வகை அளவைகளால் பொருள்களை அளக்குங்கால் தொடரும் அவ்வளவைப் பெயர்களுள் உம்மையாகிய உருபு தொக்கு நிற்பன உம்மைத்தொகைகள் ஆம்.]

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்) | கபில பரணர் | [எண்ணல்] | (கபிலனும் பரணனும.) |
| | கழஞ்சே கால் | [எடுத்தல்.] | (கழஞ்சும் காலும்.) |
| | கலனே தூணி. | [முகத்தல்.] | (கலனும தூணியும்) |
| | சாணரை. | [நீட்டல்.] | (சாணும அரையும) |

---

**410.** THE ELLIPSIS OF OTHER WORDS: METONOMY.

சகO. ஐந்தொகை மொழிமேற் பிறதொகல் அன்மொழி.
[வினா 157.]

[வேற்றுமைத்தொகை முதலிய ஐவகைத் தொகைநிலைத்தொடர் மொழிகளுக்கும் புறத்து அவை அல்லாத பிறமொழிகள்ஆகிய உருபுகள் தொகுதல் அன்மொழித்தொகை ஆம்.]

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்.) | பூங்குழல் | = | பூவையுடைய குழலினை யுடையாள |
| | பொற்றொடி | = | பொனனினாகிய தாலியினை யுடையாள. |
| | துடியிடை | = | துடியனன இடையினை யுடையாள். |

---

**411.** THE WORD WHICH RENDERS THE ELLIPTICAL EXPRESSION INTELLIGIBLE.

சகக. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள்.

[தொகைநிலைத்தொடர் மொழிகளின் முன்மொழிக்கண் எனும், பின்மொழிக்கண் எனும், அனைத்து மொழிக்கண் எனும், அனைத்து மொழிக்குப் புறத்துமொழிக்கண் எனும், சிறந்துநிற்கும் தொகைநிலைத்தொடர் பொருள்.]

(உ-ம்.) குடம் வனைந்தான். [முன்மொழிக்கண்.]
நிலம் உழுதான். [பின்மொழிக்கண்.]
புலிவிற் கெண்டை. [அனைத்துமொழிகள்.]
தாழ்குழல். [புறமொழிக்கண்.]

---

**412.** TWO ELLIPTICAL FORMS DISTINGUISHED.

௪௧௨. வல்லொற்று வரினே இடத்தொகை ஆகும்;
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை ஆகும்.

[வல்லொற்றிடையே வந்துழி இடத்தின்கண் தொக்க தொகை ஆம் மெல்லொற்றிடையே வந்துழிப் பெயரின்கண் தொக்க தொகையாம்.]

(உ-ம்) வடுகக்கண்ணன். [வடுகநாட்டிற் பிறந்தகண்ணன்.]
வடுகங்கண்ணன். [வடுகனாகிய கண்ணன்.]

---

**413.** THE PLURAL TERMINATION AFTER THE LAST NOUN.

௪௧௩. உயர்திணை உம்மைத் தொகைபலர் ஈறே.

[விரு 156.]

[உயர்திணை ஒருமைப்பாலின்கண் வரும் உம்மைத்தொகைகள் ரவ்வீறும் கள்ளீறும் ஆகிய பலரீற்றனவே ஆம்.]

(உ-ம்) கபில பரணர், தேவன் தேவிகள.

---

நிலநீர் தீ காறருகாயங்கள் } அஃறிணையிலே பன்மைஈறறுலும்,
நிலநீர தீ காற்ருகாயம். } இயல்பான ஒருமை ஈற்றுலும் வந்தன.

---

**414.** AMBIGUOUS ELLIPSIS.

௪௧௪. தொக்குழி மயங்குந இரண்டு முதலேழ்
எல்லைப் பொருளின் மயங்கும் என்ப.

[வேற்றுமைஉருபு முதலிய உருபுகள் தொக்கு நின்ற வழிப்பொருள்களான் மயங்கும் இயல்பினவாகிய தொடர்சொற்கள் இரண்டுமுதல் ஏழீறாகிய பொருள்களால் மயங்கும் என்று சொல்லுவர் புலவர்.]

(உ-ம்.) தெய்வ வணக்கம். [இரண்டுபொருள்: தெய்வத்தை வணங்கும வணக்கம் எனவும்; தெய்வத்துக்கு வணக்கம், எனவும் விரியும்.]
தறசேர்ந்தார். [மூன்றுபொருள்: தன்னைச சேர்ந்தார்; தன்னோடு சேர்ந்தார்; தன்கண்சேர்ந்தார் எனவிரியும்.]
சொல்லிலக்கணம். [நான்குபொருள் ]
பொன்மணி. [ஐந்துபொருள்.]
மாவேலி. [ஆறுபொருள்.]

**415** UNELLIPTICAL EXPRESSIONS.

சசரு. முற்றீ ரெச்சம், எழுவாய், விளிப்பொருள்,
ஆறுரு பிடை, உரி, அடுக்கிவை தொகாநிலை.

[ முற்றும், பெயர்எச்சமும், வினைஎச்சமும், எழுவாயும், விளியும் ஆகிய ஐவகைப்பொருளின்கண் பெயர்வினைகள் புணரும் புணர்ச்சியும்; வேற்றுமைப்பொருளின்கண், அவற்றின் உருபாகிய இரண்டாவது முதலிய ஆறும் இடையே விரிந்துநிற்ப பெயர்வினைகள் புணரும் புணர்ச்சியும், ஏனை இடைச்சொற் புணர்ச்சியும், உரிச்சொற் புணர்ச்சியும், ஒரு சொல் அடுக்கிவரும் புணர்ச்சியும் ஆகிய ஒன்பதும் தொகாநிலைத்தொடர் ஆம். ]

(உ-ம்) உண்டான சாத்தன. [தெரிநிலை வினைமுற்று ]
குழையன கொற்றன். [குறிப்புவினை முற்று ]
உண்ட சாத்தன [பெயர் எச்சம ]
கரிய குதிரை. [குறிப்புப் பெயர் எச்சம். ]
உண்டு வநதான [வினைஎச்சம ]
இன்றி வந்தான். [குறிப்பு வினைஎச்சம் ]
சாத்தன வநதான [எழுவாய. ]
சாத்தவா. [விளி ]

குடத்தை வனைநதான. [வேற்றுமை உருப ]

அதுகொல்தோழி [இடைசசொல் ]

நனிபேதையே [உரிச்சொல் ]
பாமபு பாமபு. [அடுக்குச்சொல் ]

**416.** GRAMMATICAL ERRORS.

சசசு. திணையே, பால், இடம், பொழுது, வினா, இறை,
மரபாம் ஏழு மயங்கின் ஆம் வழுவே.

[ திணைமுதலாக மரபு ஈறாக வரும் ஏழும் தத்தம்நெறி மயங்கின் வழுவாம். ]

(உ-ம்.) அவன வநதது. [திணைவழு ]
அவன வந்தார். [பால்வழு. ]
நேற்று வருவான். [காலவழு. ]
கறக்கினற எருமைபாலோ, சினையோ. [வினாவழு. ]
கடம்பூர்க்கு வழியாது? எனறால் இடம்பூணி எனறுவின கயறனறு [விடைவழு ]
ஆடு மேய்ப்பானைப் பாகன எனபது. [மரபுவழு. ]

**417.** IN QUESTIONS, WORDS OF COMMON GENDER, &C. TO BE USED.

சசஎ. ஐயந், திணை, பால் அவ்வப் பொதுவினும்
மெய்தெரி பொருள்மேல் அன்மையும் விளம்புப.

[ திணைஐயத்தினை அவற்றின் பொதுச்சொல்லானும், பாலையத்தினை அவற்றின் பொதுச்சொல்லானும், துணிந்தப்பொருண்மேல் எலாத தன்மையினை வைத்துங் கூறுவர்புலவர். ]

(உ-ம) (1.)

குற்றியோ, மகனோ அங்ஙனந் தோன்றுகிறது?
தோன்றுகிறவன? எனபது வழு
குற்றியோ, மகனோ அங்ஙனந் தோன்றுகிற உரு?
எனப்பொதுச் சொல்லாற் கூறுக. [திணைஐயம்]

ஆண்மகனோ, பெண்மகளோ, அங்ஙனந் தோன்றுகிறவர் ஆர்? [பால்ஐயம்]

ஒன்றோ, பலவோ, இச்செய்புக்க பெற்றம்? [அஃறிணைப்பால் ஐயம்]

(2.) ஆண்மகன் எனிற் பெண்மகன் அல்லன்.

குற்றிஎனின மகன் அன்று.

பல எனின ஒன்றல்ல.

---

**418.** A NEUTER FOLLOWED BY MASCULINE OR FEMININE: ANOMALY I.

௪௧௮. உயர்திணை தொடர்ந்த பொருள்முதல் ஆறும்
அதனொடு சார்த்தின் அத்திணை முடிபின.
[ விஞ 137. ]

[ உயர்திணையைத்தொடர்ந்த அஃறிணைப்பொருள் ஆகிய ஆறும் உயர்திணையோடு சார்த்தி முடிப்பின் அவ்வெழுவாய்க்குரிய உயர்திணை முடிவினவாம். ]

(உ-ம்) நம்பி { பொன், நாடு, வாளுள், மூக்கு, குடிமை, நடை } பெரியன, கூரியன, நல்லன, கடியன

[நம்பிக்குப் பொன் பெரிது எனபது சிறப்பு.]

---

**419.** HIGH AND LOW CLASS NOUNS SOMETIMES TAKE A COMMON VERB: ANOMALY II.

௪௧௯. திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்,
மிகவினும், இழிபினும், ஒருமுடி பினவே.

[ திணையும்பாலும் வேறுவினைப் பலபொருள்களும் விரவிநின்ற வழியவை பலவும் சிறப்பினாலும், மிகுதியினாலும், இழிபினாலும் ஒருமுடிபினவாம். ]

(உ-ம்.) திங்களும் சான்றோரும் ஒப்பர், ஆமையும் பெரியரும் ஐந்தடக்கி நிற்பார். [சிறப்பு.]
பார்ப்பார், தவரே, சுமந்தார், பிணிப்பட்டார், மூத்தோர், குழவி எனும் இவர்கட்கு. [மிகுதி.]
மூர்க்கனும் முதலையுங் கொண்டதுவிடார். [இழிபு]

### 420. GENDER AND NUMBER CONFOUNDED, FROM JOY AND OTHER CAUSES: ANOMALY III.

**வழுவமைதி.**

சஉ0. உவப்பினும், உயர்வினும், சிறப்பினும், செறலினும்,
இழிப்பினும், பால்திணை இழுக்கினும் இயல்பே.

[ வினா 137. ]

[ உவப்பு முதலிய ஐந்தினும் பாலுந் திணையும் வழுவி வரினும் இயல்பாம். ]

(உ-ம்.) தன் புதல்வனை, "என் அம்மை வந்தாள்" என்பது உவப்பின் ஆண்பால் பெண்பால் ஆயிற்று.

ஓர் ஆவினை "என் அம்மை வந்தாள்" என்பது மகிழ்ச்சியினால் அஃறிணை உயர்திணை ஆயிற்று.

ஒருவனை, "அவர் வந்தார்" [உயர்வு.]

"மாதேய! நீ வேருவருகரு மாயே." [சிறப்பு]

கோத்தமனையர் ஆயினும் என்னோ?
நின்னொடு தோன்ற, பிறனில் புகல். [செறல் ]

பெண்வழிச் செல்வானை நோக்கி, "இவனைப்பேடு." [இழிப்பு]



### 421. NUMBERS AND PERSONS INTERCHANGED. ANOMALY IV.

**வழுவமைதி.**

சஉக. ஒருமையிற் பன்மையும், பன்மையின் ஒருமையும்
ஓர்இடம் பிறஇடம், தழுவலும் உளவே.

[ வினா 137. ]

[ ஒருமைப்பாலின்கண் பன்மைச்சொல்லைத் தழுவிக் கூறுதலும், பன்மைப்பாலின்கண் ஒருமைச்சொல்லைத் தழுவிக் கூறுதலும, ஓரிடத்தின்கண் பிறவிடச்சொல்லைத் தழுவிக் கூறுதலும் உளவாம். ]

(உ-ம்.) (1.) இக்குளத்து நீர் எல்லாங் கொண்டுபெய்த்தான் இவன். [ஒருமையில் பன்மை.]
(2.) இரண்டு கண்ணுஞ் சிவந்தது. [பன்மையில் ஒருமை.]
(3.) அனைத்தைத் தந்தை அம்போரிற் செறியர் [ஒருமையில் பன்மை.]
(4.) சாத்தனதாய் இவை செய்வனோ? [படர்க்கையில் தன்மை.]
(5.) நீயோ, அவனோ யார் இதுசெய்தார்? [இரவி ஓரிடத்திற்குரிய முடிபேற்றது ]



### 422. CERTAIN UNVARYING USES OF THE PERSONS.

சஉஉ. தரல், வரல், கொடை, செலல் சாரும் படர்க்கை;
எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும்.

[இந்நால்வகைச் சொற்களையும் படர்க்கை சாரும்; இவற்றுள் முதற்கண் நின்ற தரல், வரல் என்னும் இருவகைச்சொற்களையும் தன்மைமுன்னிலைகள் ஏற்கும்.]

(உ-ம்) அவனுக்குத் தந்தான்.
அவன்பால் வந்தான்.

எனக்குத் தந்தான்
என்பால் வந்தான்

நினக்குத் தந்தான்
நின்பால் வந்தான

**423.** THE THREE TENSES.

௪௨௩. இறப்பெதிர்வு நிகழ்வெனக் கால மூன்றே.

[வினை 78.]

[முன்னர்க் கூறிய காலம் இறந்தகாலமும், எதிர்காலமும், நிகழ்காலமும் என மூன்றும்.]

**424.** THE PRESENT EXPRESSES ANYTHING SUBSISTING IN THE THREE TIMES: ANOMALY V.

௪௨௪. முக்கா லத்தினும் ஒத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே.

[வினை 146.]

[தந்தொழில் இடை அறாது, முக்காலத்தினும் ஒருதன்மையவாய் இயலும் பொருள்களை நிகழ்காலத்தாற் கூறுவர் புலவர்.]

(உ-ம்) அவனியைத் தாங்கி அரசர் இருக்கின்றார்.
மலை நிற்கிறது, தெய்வம் இருக்கின்றது.

**425.** INTERCHANGE OF TENSES: ANOMALY VI.

௪௨௫. விரைவினு மிகவினும், தெளிவினும், இயல்பினும்,
பிறழவும் பெறூஉமுக் காலமும் ஏற்புழி.

[வினை 146—149.]

[விரைவு, மிகுதி, தெளிவு என்னும் மூன்றுகாரணங்களினாலும், காரணமின்றியும், முக்காலங்களையும் ஒன்றை ஒன்றாகக் கூறப்படும் ஏற்கும் இடத்து.]

(உ-ம்.) "உண்டேன், உண்டேன்." [என்பான் வினைவினுல்]

களவு செய்திகை அறப்புண்டான். [மிகுதி.]

எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறின் மழை பெய்தது. [தெளிவு]
நாம் பண்டு விளையாடுவதிக்காய். [இயல்பு.]



**426.** SEVEN DIFFERENT KINDS OF QUESTIONS

விஞ.

சுஉசு. அறிவறி யாமை, ஐயுறல், கொளல், கொடை,
ஏவல், தரும்விஞ ஆறும் இழுக்கார்.

[அறிவு முதலியன தருதலான் வரும் விஞ ஆறனையும் கடியாது கொள்வர் புலவர்.]

(உ-ம்.) "இச்சூத்திரத்துக்குப் பொருள்யாது."
(1.) ஆசிரியன் மாணுக்கனைநோக்கிக் கேட்பது. [அறிவிஞ]
(2.) மாணுக்கன் ஆசிரியனைநோக்கி அவ்வாறு கூறுவது. [அறியாவிஞ]
(3.) குற்றியோ மகனே. [ஐயவிஞ.]
(4.) பொனனுளதோ, மணியுளதோ. [கொளல்விஞ.]
(5.) சாத்தனுக்கு ஆடையில்லையே. [கொடைவிஞ]
(6.) சாத்தா உண்டாயோ. [ஏவல்விஞ.]



**427.** DIFFERENT MODES OF ANSWERING.

விடை.

சுஉஎ. சுட்டு, மறை, நேர்; ஏவல், விஞதல்,
உற்ற துரைத்தல், உறுவது கூறல்,
இனமொழி எனுமெண் இறையுள், இறுதி
நிலவிய ஐந்தும் பொருண்மையி னேர்ப.

[இவ்விறை எட்டனுள் முன்னைய மூன்றும் செவ்வனிறைஆம். பின்னைய ஐந்தும் இறைப்பொருள் பயத்தலின் இறையாகத் தழீஇக் கொள்வர் புலவர்.]

(உ-ம்.) (1.) "கருவூருக்கு வழியாது"? இது. [சுட்டு.]
(2.) செய்வாயோ? செய்யேன். [மறைவிடை] } செவ்வனிறை.
செய்வேன் [உடன்படல்] }

குறிப்பினுலே இறைபயப்பது.
{ நீ செய [ஏவல்.]
செய்வேனே. [விஞதல் விடை.]
உடம்புநொந்தது. [உற்றதுரைத்தல்.]
உடம்புநோம். [உறுவது கூறல்.]
மற்றையதைச் செய்வேன் [இனமொழி] }

**428.** THE PERSON AND THE MEMBERS NOT TO BE CONFOUNDED.

௪௨௮. வினாவினும் செப்பினும் விரவா சினைமுதல்.

[ வினவுதற் கண்ணும், செப்புதற் கண்ணும் சினைமுதல்கள் ஒற்றுமை கருதி மயங்கக் கூறப்படா. ]

(உ-ம்.) சாத்திகண் பெரியவோ, கொற்றிகண் பெரியவோ
சாத்தன் நல்லனோ, கொற்றனை நல்லனோ?
சாத்திகண் பெரிய, கொற்றிகண் பெரிய.
சாத்தனை நல்லன, கொற்றன் நல்லன.
[ வினவுதலும் விடைகொடுத்தலும் வழாநிலை. ]

கண்ணல்லவோ, அவன் நல்லனோ?
கண்ணல்ல, அவன் நல்லன் [வழு.]



**429.** CLASSICAL USAGE.

மரபு.

௪௨௯. எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே.

[ வினை 163. ]

[ தொன்று தொட்டு, உலகவழக்கிலுஞ் செய்யுள்வழக்கிலும் யாதொரு பொருளை யாதொரு சொல்லால் யாதொரு நெறியால் அறிவுடையோர் சொன்னார்களோ அப்பொருளை அச்சொல்லால் அந்நெறியாற் சொல்லுதல் மரபு ஆம். ]

(உ-ம்.) யானைமேய்ப்பான் பாகன். [வழாநிலை.]
குதிரைக்காரன். [வழு.]



**430.** A NOUN OF MANY SHADES OF MEANING SHOULD HAVE A VERB THAT MAY AGREE WITH ALL.

௪௩௦. வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்,
வேறவற் றெண்ணும், ஓர் பொதுவினை வேண்டும்.

[ வெவ்வேறு வினைகட்குரிய பலபொருள்களையும் ஒருங்கு தழுவி நிற்கும் ஓர் பொதுச்சொல்லும், அவற்றின் சிறப்புச் சொற்களாய் எண்ணிநிற்கும் பலசொல்லும், ஒன்றற்குரிய சிறப்புவினைவேண்டாது எல்லாவற்றிற்கும் உரியதோர் பொதுவினை வேண்டுவனஆம். ]

(உ-ம்.) அடிசில் [எ-து] உண்பன, தின்பன, நக்குவன, குடிப்பனவற்றிற்குப் பொது, ஆதலால், அடிசில் அயின்றார், மிசைந்தார்எனக,
அணி அணிந்தார், படை வழங்கினர்.

**431.** AN EQUIVOCAL WORD DETERMINED BY A WORD IN THE CONTEXT.

[redacted] வினைசார் பினம்இட ' மேனி விளங்காப்
பலபொருள் ஒருசொல் பணிப்பர் சிறப்பெடுத்தே.

[ குறித்த பொருளை விளக்கும் வினையினையும், சார்பும் இனமும் இடமும் முதலியபெயரினையும், பலபொருள் ஒரு சொற்பொருந்தி விளங்கிக் கிடந்ததேல் அதனை வாளாகூறி அவ்வினை பெயர்களைப் பொருந்தாமையால் விளங்காது கிடந்ததனைச் சிறப்பொடு கூட்டிக் கூறுவர்புலவர். ]

(உ-ம்.) மா. [பலபொருள் ஒருசொல்.]
மாப்பூத்தது. [மரம்.]
மாவீழ்மலர். [வண்டு.]
காலரள், கரி, மா, இரதம், காலங்கம். [குதிரை.]
மாமருத்த மலர்மார்பன். [திருமகள ]



**432.** COMPOUND WORDS CAPABLE SOMETIMES OF A TWO-FOLD DIVISION AND INTERPRETATION.

சாஙஉ. எழுத்தியல் திரியாப் பொருடிரி புணர்மொழி
இசைத்திரி பாற்றெளி வெய்தும் என்ப.

[ வி ளு 150. ]

[ எழுத்தினதியல்பு வேறுபடாது பொருள் வேறுபட்டுச் சொல்லும் பொருளும் ஐயுற நிற்குந் தொடர்மொழிகள் அங்ஙனங் குறித்துக் கூறுஞ் சொற்களின் இறுதியும் முதலுந் தோன்ற இசை அறுத்துக் கூறும் வேறுபாட்டால் துணியப்படும் என்று சொல்லுவர் புலவர். ]

(உ-ம்.) செம்பொன் பதின்றொடி.
செம்பொன் பதின்றொடி = செம்பொன் பத்துப்பலம்.
செம்பொன் பதின்றொடி = செம்பு ஒன்பது பலம்.



**433.** WORDS IN APPOSITION MAY HAVE A COMMON VERB, OR EACH ITS OWN.

சாஙங. ஒருபொருள் மேற்பல பெயர்வரின், இறுதி
ஒருவினை கொடுப்ப; தனியும் ஒரோவழி.

[ வி ளு 135 ]

[ ஒரு பொருள் மேல் பலபெயர் வருமாயின் பொருள் ஒன்றே என்பது தோன்ற இறுதிக்கண் ஒருவினைகொடுத்துக் கூறுவர், ஒருபொருளாதல் தவறுத வழிப்பெயர்தோறும் கொடுத்துங்கூறுவர் புலவர். ]

(உ-ம்.) ஆசிரியன், பேரூர்கிழான், இளங்கண்ணன், சாத்தன் வந்தான்.
ஆசிரியன்வருக, பேரூர்கிழான்வருக, இளங்கண்ணன்வருக, சாத்தன் வருக.

### ௪௩௪. EPITHETS SHOULD PRECEDE THE NAME.

௪௩௪. திணை, நிலம், சாதி, குடியே, உடைமை,
குணம், தொழில், கல்வி, சிறப்பாம் பெயரோ
டியற்பெயர் ஏற்றிடில் பின்வரல் சிறப்பே.

[திணைமுதலாகக் கல்வியீறாக விதந்தன முதலிய பற்றிவருஞ் சிறப்புப் பெயருடனே இயற்பெயரை ஒருபொருள் ஒருங்கேற்குமாயின் அவ்வியற்பெயர் பின்வருதல் சிறந்த மரபாம்.]

(உ-ம்,) (1.) குன்றவன் கொற்றவன். [திணை]
(2.) அறிவாளன் அழகன். [நிலம்.]
(3.) பார்ப்பான் பாராயணன். [சாதி.]
(4.) ஊர்கிழான் ஓணன். [குடி]
(5.) பொன்னன பொறையன். [உடைமை]
(6.) கரியன் கம்பன். [குணம்.]
(7.) சாடி நம்பி. [தொழில்.]
(8.) தெய்வப்புலவன் திருவள்ளுவன் [கல்வி.]



### ௪௩௫. A DEMONSTRATIVE PRONOUN AFTER THE NOUN; THE VERB BEFORE OR AFTER.

௪௩௫. படர்க்கை முப்பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்; வினை எனிற்பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடை; செய்யுட் கேற்புழி.

[படர்க்கை இடத்தவாகிய உயர்திணைப்பெயர், அஃறிணைப் பெயர், விரவுப்பெயர் என்னும் மூவகைப் பெயரோடு சுட்டுப்பெயர் சாரின் அச் சுட்டுப்பெயர் அம்மூவகைப்பெயர்க்கும் பின்வரும். அவ்விடத்தே வினையாகிய முடிக்குஞ் சொல்வரும் ஆயின், அம்முடிக்குஞ் சொல்லில்லை ஆயின் அப்பெயர்க்குப் பின்னும் முன்னும்வரும்; இம்மரபு வழக்கின்கண்ணவாம் செய்யுட்கண்ணே எனின் நியதி இன்றி வேண்டியஆறே வரப் பெறும்.]

(உ-ம்.) நம்பி வந்தான், அவனுக்குச் சோறு இடுக. [உயர்திணை]
எருது வந்தது அதற்குப் புல்லிடுக. [அஃறிணை]
சாத்தன் வந்தான அவனுக்கு பலியிடுக. [விரவுப்பெயர்]
வந்தான நம்பி சோறு இடுக.

---

நம்பி அவன், அவன் நம்பி.

---

அவன் அணங்கு நோய் செய்தான், ஆயிழாய், வேலன். [செய்யுள்.]

**436.** WORDS REPEATED.

அடுக்குத் தொடர்.

சா௩௬. அசைநிலை, பொருணிலை, இசைநிறைக் கொருசொல்

இரண்டு, மூன்று, நான் கெல்லைமுறை அடுக்கும்.

[ அசைநிலைக்கும், விரைவு, வெகுளி, உவகை, அச்சம், அவலம் முதலிய பொருள் நிலைக்கும் இசை நிறைக்கும் ஒருசொல் இரண்டு மூன்று நான்களவும் முறையே அடுக்கும். ]

(உ-ம) (1.) அன்றே, அன்றே. [அசைநிலை.]
(2.) வந்தேன், வந்தேன். [விரைவு பொருணிலை.]
(3.) நல்குமே, நல்குமே, நல்குமே நாமகள்! [இசைநிறை.]
(4.) உயயேன், உய்யேன் [அவலம்.]
(5.) தீத்தீதீ. [அச்சம் மும்முறை ]



**437.** REDUPLICATED WORDS MUST NOT BE DIVIDED.

சா௩எ. இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்திசையா.

[ இரட்டைச் சொற்கள் அவ் இரட்டிப்பிற் பிரிந்து தனித்து ஒலியா. ]

(உ-ம) சரு சருத்தது. [இது இரட்டித்துப் பிரியாது நின்றது.]



**438.** ESSENTIAL ADJUNCTS NOT TO BE SEPARATED FROM A NOUN.

சா௩அ. ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார்.

[ ஒருபொருள் மேல் பலபெயர் கூறுங்கால் அப்பொருளினின்றும் பிரிதல் இல்லாதனவற்றை நீக்காது கூறுவர் புலவர். ]

(உ-ம்.) ஆசிரியன் பேரூர்கிழான் இளங்கண்ணன் சாத்தன் வந்தான்.
[மாணாக்கருக்கு நூற்பொருள் உணர்த்தலால் ஆசிரியத்தன்மையும், ஊருரிமையுங் கண்ணின்வேறுபாடும் உடையவன் சாத்தன் ஆதலால் பிரிவில்லன்.]



**439.** REDUNDANT WORDS SANCTIONED BY CUSTOM: ANOMALY VII.

சா௩௯. ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா.

[ ஒருபொருளையே குறித்துவரும் பலசொற்கள் அவ்வாறு வருதற்கு ஓர்காரணம் இன்றேனும் சொல்லின்பந் தோன்றச் சிறந்து நிற்றலின் அவை வழுவென்று நீக்கப்படாவாம். ]

(உ-ம்.) மீமிசை. [மீஎன்பதும், மிசை என்பதும், மேல்.]
உயர்ந்தோங்கும் மலை. [உயர்ந்து, ஓங்கும் இரண்டும் ஒன்று.]
காழிளங்கமுகு. [காழ் இளமை இரண்டும் ஒன்று.]

**440.** உம் TO BE USED IN CERTAIN CASES.

சசo. இனைத்தென் றறிபொருள், உலகின் இலாப்பொருள்,

வினைப்படுத் துரைப்பின் உம்மை வேண்டும்.

[ வினா 113. ]

[ இத்தனையென்று வரையறை உணரப்படும் பொருளும், எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும், அவற்றை வினைப்படுத்துக் கூறுங்கால் முற்றும்மை வேண்டி நிற்கும். ]

(உ-ம்) (1.) தமிழ்நாட்டுமூவேந்தரும் வந்தார். [இனைத்தென்றறிபொருள்.]
(2) பவளக்கோட்டு நீலயானையென்றும் இல்லை. [உலகின இலாப்பொருள்.]
ஒளிமுன்னிருள் என்றும் இல்லை.



**441.** THE OBJECT SOMETIMES MADE THE SUBJECT: ANOMALY VIII.

சசக. செயப்படு பொருளைச் செய்தது போலத்

தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே.

[ வினா 129. ]

[ செயப்படுபொருளையுங் கருவியையும் இடத்தையும் செயலையுங் காலத்தையுங் கருத்தாவைப் போல வைத்து, அதன்மேல் வினைமுதல் வினையேற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம். ]

(உ-ம்.) இம்மாடு நான் கொண்டது.
இச்சோறு நான் கொடுத்தது.
இவ்வெழுத்து நான் எழுதினது.
} [செயப்படு பொருள்.]

இவ்வெழுத்தாணி நான் எழுதியது. [கருவி.]
இவ்வீடுயான் இருந்தது. [இடம்.]
இத்தொழில நான்செய்தது. [செயல்.]
இந்நாள் நான் பிறந்தது. [காலம்.]



**442.** THE FIRST MEMBER OF A COMPOUND NOUN MAY BE EITHER COMMON, OR PECULIAR TO THOSE WORDS.

சசஉ. பொருள்முதல் ஆறும் அடைசேர் மொழிஇனம்

உள்ளவும், இல்லவும், ஆம்இரு வழக்கினும்.

[ வினா 150. ]

[ பொருள் ஆதி ஆறாகிய அடைகள் அடுத்து வருமொழிகள் இனம் உள்ளனவே ஆம், அன்றி இனம் இல்லனவும் ஆம் உலகவழக்கினுள்ளும் செய்யுள் வழக்கினுள்ளும். ]

(உ-ம்.) செந்தாமரை. } [இனம் உள்ளது.]
செயக்குடம்.
உப்பளம். } [இனம் இல்லது உப்பில்லா அளம் இல்லாததினுலே.]
சிறைவண்டு.

**443.** SUCH EPITHETS MAY SUGGEST THE OPPOSITE.

சசங. அடைமொழி இனமல் லதுந்தரும் ஆண்டுறின்.

[மேற்கூறிய அடைசேர்மொழி இனத்தைத் தருதலே அன்றி, அதனோடு இனம் அல்லதனையுந்தரும், அவ்விடத்திற்குப் பொருந்துமாயின்.]

(உ-ம்) அறஞ்செய்தான் மோட்சம் புகுவான் எனின்.
மறஞ் செய்தான் நரகம் புகுவான் எனவரும்.



**444.** SUCH MEMBERS OF COMPOUND WORDS MAY BE ACCUMULATED.

சசச. அடைசினை முதல்முறை அடைதலும், ஈர்அடை
முதலோ டாதலும், வழக்கியல்; ஈர்அடை
சினையொடு செறிதலு மயங்கலும் செய்யுட்கே.

[மேற்கூறிய அடை, முதல் சினைகளை அடுத்து வருங்கால், ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலும் ஒன்றை ஒன்று விசேடித்து வருதலும்; இரண்டடை முதலை விசேடித்து வருதலும், வழக்கு நடையாம்; இரண்டடை சினையை விசேடித்து வருதலும் இவ்வ்ரம்பிறந்து வருதலும் செய்யுள் நடை ஆம்.]

(உ-ம்.) செங்கானாரை. } [ஓர்அடை, ஒருசினை, ஒருமுதல்.]
பழக்குலை வாழை.
முழங்குதிரை கடல்.
மனைசசிறு கிணறு. [இரண்டு அடை.]
சிறுகருங்காக்கை. [இரண்டடை முதல்.]

சிறுபைந்தூவி [ஈரடை, சினை.]

பெருந்தோட் சிறுமருங்குற் பேரமாக்கட்பேதை [மயங்கிவந்தது.]



**445.** LET NATURAL QUALITIES BE SO EXPRESSED.

சசரு. இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்.

[இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் என இருவகைப்படும் பொருள்களுள் இயற்கைப் பொருளை இத்தன்மைத்து என்று கூறுக.]

(உ-ம்.) நிலம் வலிது.

**446.** WHEN ARTIFICIAL QUALITIES ARE SPOKEN OF THE CAUSE MAY BE EXPRESSED OR UNDERSTOOD; SO MAY THE WORD IMPLYING THE ACQUISITION OF THE QUALITY.

௪௪௬. காரண முதலா ஆக்கம் பெற்றும்,
காரணம் இன்றி ஆக்கம் பெற்றும்,
ஆக்கம்இன்றிக் காரணம் அடுத்தும்,
இருமையும் இன்றியும் இயலுஞ் செயும்பொருள்.

[முதல் துணை நிமித்தங்களால் செய்யும் பொருளாகிய செயற்கைப் பொருளைக் கூறுங்கால் காரணச் சொல் முன்வர ஆக்கச் சொல் பின்வரப் பெற்றும் காரணச் சொல் தொக்குநிற்ப ஆக்கச் சொல் வரப்பெற்றும் ஆக்கச் சொல் தொக்கு நிற்பக் காரணச் சொல்வரப் பெற்றும் இவ்விருவகைச் சொல்லும் தொக்கு நிற்கவும் நடக்கும்.]

(உ-ம்) கடுவுங்கைபிழி எண்ணெயும் பெற்றமையான மயிர் நல்லவாயின, [காரணமுதலா ஆக்கம் பெற்றது.]

மயிர் நல்லவாயின. [காரணச்சொல் தொக்கு ஆக்கம் பெற்றது.]

கடுவுங் கைபிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர்நல்ல. [ஆக்கச்சொல் தொக்கு வந்தது.]

மயிர்நல்ல. [இரண்டும் தொக்கு வந்தது]



**447.** METHODS OF NEGATION AND AFFIRMATION.

௪௪௭. தம்பால் இல்ல தில்லெனின், இன்னாய்
உள்ளது கூறியு மாற்றியும், உள்ளது
சுட்டியும், உரைப்பர் சொற்சுருங் குதற்கே.

[ஒருவன் வினவியது தம்பக்கல் இல்லையாயின் அதனை இல்லை என்னல் உறின் அவன் வினவியதற்கு இனமாய்த் தம்பக்கல் உள்ளதனைக்கூறி அக்கூற்றானே அதனை இல்லை என்றும், உள்ளதாயின் இத்துணை உண்டென்றும் கூறுவர் புலவர் வினவுதலும் செப்புதலும் ஆகிய சொற்கள் சுருங்குதற் பொருட்டு.]

(உ-ம்.) பயறுளதோ, வணிகிரே?
உழுந்துளது.
உண்டு.
இவ்வளவுண்டு.

### 448. THE THREE SYNONYMES ஈ, தா AND கொடு.

சசஅ. ஈ, தா, கொடுஎனு மூன்று முறையே
இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை.

[ "ஈ" என்பது இழிந்தோன் உயர்ந்தோன் மாட்டு இரக்குஞ் சொல் ஆம். "தா" என்பது ஒப்போன் ஒப்போன்மாட்டு இரக்குஞ் சொல் ஆம் "கொடு" என்பது உயர்ந்தோன் இழிந்தோன் மாட்டு இரக்குஞ் சொல் ஆம். ]

(உ-ம்.) தந்தை ஈ!
தோழா தா!
மைந்தா கொடு!

### 449. WORDS THAT SUGGEST AN IDEA.

சசகூ. முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே.

[ வெளிப்படையான் அன்றிக் குறிப்பால் பொருள் உணரப்படுஞ் சொற்களும் சில உள ஆம். ]

(உ-ம்.) செஞ்செவியர் = செவிஎல்லாஞ் செம்பொன அணிந்த செல்வத்தினர்.

### 450. WHEN IMPOSSIBLE ATTRIBUTES ARE POETICALLY ASCRIBED USE THE WORDS OF THE LOWER CLASS (NEUTER).

சருO. கேட்குந போலவுங், கிளக்குந போலவும்,
இயங்குந போலவும், இயற்றுந போலவும்,
அஃறிணை மருங்கினும், அறையப் படுமே.

[ கேளாதனவற்றைக் கேட்குவன போலவும், சொல்லாதனவற்றைச் சொல்லுவன போலவும், நடவாதனவற்றை நடப்பன போலவும், இத் தொழில்கள் அல்லன பிறசெய்யாதனவற்றைச் செய்வன போலவும், அஃறிணைஇடத்தும் சொல்லப்படும். ]

(உ-ம்.) இரவெல்லாம் நின்றுய் ஆல் ஈர்ங்கதிர்த்திங்கள்
பகைமையுங் கேண்மையுங் கண்ணறுமாக்கும.
இவ்வழி அவ்வூருக்குப் போம்.
தேன் தேவர்க்கியும் மலே.

**451.** IN POETICAL AND RHETORICAL FIGURES GENDERS AND CLASSES ARE CONFOUNDED [PERSONIFICATION].

௪௫௧. உருவகஉவமையில், திணை,சினை முதல்கள்,
பிறழ்தலும், பிறவும் பேணினர் கொளலே.

[ உருவகத்தின் கண்ணும் உவமைக் கண்ணும் இருதிணை தம்முள் மயங்குதலும் சினைமுதல் தம்முள் மயங்குதலும் இவ்வியலுள் சொல்லாது ஒழிந்தனவும் போற்றிக்கொள்க. ]

(உ-ம்.) மன்னர் மடங்கன், மறையவர் சொன்மாலை,
அன்ன நடையினார்க் காரமுதர், துளனும்.
பரிசிலர்க்குவானம், பனிமலர்ப்பூம்பைந்தார்.
எரிசினவேற்றானெங்கோ?

---

**452.** THE EIGHT METHODS OF CONSTRUCTION.

௪௫௨. யாற்று நீர்,மொழி மாற்று, நிரனிறை, விற்பூண்,
தாப்பிசை, அளைமறி பாப்புக், கொண்டுகூட்
ட்டிமறி மாற்றெனப் பொருள்கோள் எட்டே.

[ யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரனிறைப் பொருள்கோளும், விற்பூட்டுப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறி பாப்புப் பொருள்கோளும், கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடிமறிமாற்றுப் பொருள்கோளும் எனப் பொருள்கோள் எட்டாம். ]

---

(I.) NATURAL CONSTRUCTION.

**453.** WHEN THE CONSTRUCTION FLOWS LIKE A RIVER.

௪௫௩. மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகும்அஃது யாற்றுப் புனலே.

[ மொழிமாற்று முதலிய போல் பிறழ்ந்து செலவேண்டாது யாற்றுப் புனல் ஒழுக்குப்போல் நெறிபட்டு அடிதோறும் வான்பொருள் அற்றற் றொழுகும் அப்பொருள்கோள் யாற்றுநீர்ப் பொருள்கோளாம். ]

(உ-ம்.) சொல்லரும் சூற், பசும் பாம்பின் தோற்றம் போல்
மெல்லவே கரு விருந் தின்ற, மேல் அலர்
செல்வமே போல் தலை நிறுவித், தேர்ந்த நூற்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே.

---

### (II.) TRANSPOSED CONSTRUCTION.

**454.** WHEN A DISTINCT CLAUSE IS INTERPOSED BETWEEN TWO WORDS CLOSELY CONNECTED IN SENSE.

சருச. ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றி, ஓர்அடியுள் வழங்கல் மொழிமாற்றே.

[ இரண்டு மொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையுமாய் வரக் கூறுவார் அந்நான்கனுள் ஏற்ற பயனிலைகட் கியையும் மொழிகளைத் தனித்தனிக் கூட்டி ஓரடியுள்ளே கூறும் பொருள்கோள் மொழிமாற்றுப் பொருள்கோள் ஆம். ]

(உ-ம்.) சுரைஆழ (கெண்டை கயத்தாட) மஞ்ஞை, சுரை (ஆழஅம்மி) மிதப்ப, வரை அனைய யானைக்கு (நீத்துமுயறகு) நிலை, எனப கானக நாடன் சுனை.

---

### (III.) ARTIFICIALLY ARRANGED CORRESPONDING CONSTRUCTION.

**455.** WHEN SEVERAL SUBJECTS ARE STRUNG TOGETHER, AND THEN THEIR SEVERAL PREDICATES FOLLOW IN CORRESPONDING ORDER.

சருரு. பெயரும் வினையும்ஆம் சொல்லையும் பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோ ணிரனிறை மொழியே.

**(௯௧-ம் சூத்திரம் இதற்கு உதாரணம்.)**

[ பெயரும் வினையும் ஆகியசொற்களையும் அவைகொள்ளும் பெயரும் வினையும் ஆகிய பயன் நிலைகளையும் வேறு வேறு நிறையாக நிறுத்தி முறையாய் எனும் எதிராய் எனும் இதற்கிது பயன் நிலை என்பது படக் கூறும்பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோள் ஆம். ]

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| கொடி ... ... நுசுப்பு | மதி ... ... ... முகம் | பிடி ... ... நடை |
| குவளை ... ... கண் | பவளம் ... ... வாய் | பிணை ... நோக்கு |
| கொட்டை ... மேனி | முத்தம் ... ... முறுவல் | மஞ்ஞை ... சாயல் |

### (IV.) THE STRUNG-BOW CONSTRUCTION.

### 456. WHEN THE FIRST AND LAST WORDS CORRESPOND.

சஉசு. எழுவாய் இறுதி, நிலைமொழி தம்முள்
பொருணோக் குடையது பூட்டுவில் ஆகும்.

[செய்யுட்கண் முதலினும் ஈற்றினும் நிற்கு மொழிகள் தம்முள் பொருள் நோக்கமுடைய பொருள்கோள் பூட்டுவிற் பொருள்கோள் ஆம்.]

(உ-ம்) திறந்திடுமின, தீயவை பிற்காண்டு மாதா
இறந்து படிற பெரிதாம் ஏதம் உறந்தையர் கோன
தண்ணாரை மாரபிற தமிழர் பெருமானைக
கண்ணாரக காணக கதவு.

---

### (V.) THE DOUBLE-FACED CONSTRUCTION.

### 457. WHEN THE SUBJECT IS IN THE MIDDLE.

சஉஎ. இடைநிலை மொழியே ஏனைஈர் இடத்து
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை.

[இடை நிற்கு மொழி ஒழிந்த முதலினும் ஈற்றினுஞ் சென்று பொருளைக் கூடும் பொருள்கோள் தாப்பிசைப் பொருள்கோளாம்.]

(உ-ம்) உண்ணாமை உள்ள துயிர்நிலை, ஊன், உண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு.

---

### 458. (VI.) THE INVOLVED CONSTRUCTION.

சஉஅ. செய்யுள் இறுதி மொழிஇடை முதலினும்
எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே.

[செய்யுட்கண் ஈற்றின் நின்ற சொல் இடையினும் முதலினுஞ் சென்ற பொருள்கோள் அளைமறி பாப்புப் பொருள்கோள் ஆம்.]

(உ-ம்.) தாழ்ந்த உணர்வினராய்த் தாள் உடைந்து தண்டேன்றித் தளர்வார் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார்தாமும்
மூழ்த்தபிணி நலிய முன்செய்த வினையென்றே முனிவார்தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதாரே.

**459.** (VII.) THE ENTIRELY DISARRANGED CONSTRUCTION.

௪௫௯. யாப்படி பலவினும் கோப்புடை மொழிகளை
ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டே.

[செய்யுள் அடிபலவினும் இயல்பாகிய யாற்றுநீர்ப்பொருளுக் கேலாது கோத்துக் கிடந்த மொழிகளை எடுத்து அப்பொருளுக்கேற்ற இடத்துக் கூட்டும் பொருள்கோள் கொண்டு கூட்டுப் பொருள்கோள் ஆம்.]

(உ-ம.) (5. தெங்கங்காய போலத் திரண்டுருண்ட) (3. பைங்கூந்தல்)
(6. வெண்கோழி முட்டை உடைத்தனன) (4. மாமேனி)
(2. அஞ்சனத தனன) (7. பசலை தணிவா ரே,)
(1. வங்கத்துச் சென்றார் வரின.)



**460.** (VIII.) THE CONSTRUCTION IN WHICH THE ORDER OF THE LINES MAY BE CHANGED.

௪௬௦. ஏற்புழியெடுத்துடன் கூட்டுறும் அடியவும்
யாப்பீறிடைமுதல் ஆக்கினும் பொருளிசை
மாட்சியு மாறா அடியவும் அடிமறி.

[பொருளுக் கேற்கும் இடத்தெடுத்து நீங்காது கூட்டும் அடியினை உடையவும் யாதானும் ஓரடியை எடுத்து அச்செய்யுட்கண் முதல் இடை ஈறுகளின் யாதானும் ஓரிடத்துக் கூட்டினும் பொருளோடு ஓசை மாட்சியும் ஓசை ஒழியப் பொருள் மாட்சியும் வேறுபடாத அடியினை உடையவும் ஆகிய பொருள்கோள் அடிமறி மாற்றுப் பொருள்கோள் ஆம்.]

(உ-ம்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்,
கொடுத்துத்தா னுய்ப்பினும் ஈண்டுங்கால ஈண்டும்,
இடுக்குற்றுப் பற்றினும நில்லாது செல்வம்,
விடுக்கும் வினை உலந்தக்கால்.

பொதுவியல் முற்றிற்று.

**461.** ALL THINGS OMITTED ARE TO BE INFERRED FROM WHAT HAS BEEN LAID DOWN.

சசுக. சொற்றொறும் இற்றிதன் பெற்றிஎன் றனைத்தும்
முற்ற மொழிகுறில் முடிவில; ஆதலின்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்,
தெற்றென உணர்தல் தெளிவோர்திறனே.

[ சொற்றொறும் இத்தன்மைத்து இதன் இலக்கணம் என்று முற்ற மொழியப்புகின் வரம்பில ஆம் ஆதலின் எடுத்துக் கூறிய சொற்களின் இலக்கணத்தைக்கொண்டு சொல்லாதனவற்றின் இலக்கணங்களையும் ஒப்புமை கருதி இதுவும் அதுஎன முற்ற விளங்க உணர்தல் நூல் ஓதித் தெளிதற்குரிய மாணக்கர்திறன் ஆம். ]

**462.** OBSOLETE FORMS TO BE REJECTED AND NEW ONES RECEIVED.

சசுஉ. பழையன கழிதலும், புதியன புகுதலும்,
வழுவல; கால வகையி னானே.

[ முற்காலத்துள்ள இலக்கணங்களுள் சில பிற்காலத் திறத்தலும் முற்காலத்தில்லன சில பிற்காலத்திலக்கணமாய் வருதலும் குற்றம் அல்லவாம் காலவேற்றுமையது ஆகலான். ]

SUMMARY OF சொல்லதிகாரம்.

இருதிணை, ஐம்பால், நான்மொழி, மூவிடம், அறுதொகை, ஏழ்
அருவழு, எட்டுரு, பொன்பான்மதொகாநிலை, ஆய்ந்தஎச்சம்
ஒருபது, கோள்எட்டு, முப்பொழு திர்இடம், ஓர்இயல்பாய்
வருமொழி மூன்றும், உணரச்சொல வுர்மை வருந்திருவே.

சொல்லதிகாரம் முற்றுப்பெற்றது.

நன்னூல், முடிந்தது முற்றும்.

# PART II. NATIVE AUTHORITIES.

## II. THE ELEMENTS OF PROSODY.

## [II.] யாப்பருங்கலம்.

### (1.) THE COMPONENT PARTS OF VERSE.

### (1.) உறுப்பியல்.

**1.** VERSE: ITS ESSENTIALS.

க. எழுத்தசை, சீர், தளை, அடி, தொடை, தூக்கோ
டிழுக்கா நடைய தியாப் பெனப் படுமே.

[ விரு 167. ]

### க. § எழுத்து.

**2.** LETTERS.

உ. உயிரே, மெய்யே, உயிர்மெய் என்று;
குறிலே, நெடிலே, அளபெடை என்று;
வன்மை, மென்மை, இடைமை என்று;
சார்பிற் றோன்றுந் தன்மைய என்று;
ஐ, ஔ, மகரக் குறுக்கம் என்றுங்
கைம் மூ எழுத்தும் ஆம்அசைக் குறுப்பே.

**3.** AYTHAM AND CONSONANTS HAVE NO DEFINITE QUANTITY.

ஙா. தனிநிலை ஒற்றிவை, தாம்அலகிலவே,
அளபெடை அல்லாக் காலையான.

**4.** THE QUANTITY OF SHORTENED இ AND உ, AND OF PROLONGED VOWELS.

ச. தனிசீர் வண்ணந் தாங் கெடவரினே
குறுகிய இகரமுங், குற்றியலுகரமும்,
அளபெடை ஆவியும், அலகியல்பிலவே.

———«««»»»———

## உ. § அசை.

**5.** METRICAL SYLLABLES.

ரு. நேரசை என்று, நிரையசை என்று,
ஆயிரண்டாகி அடங்கு மன் அசையே.
[ விரு 168. ]

———«««»»»———

**6.** நேரசை: LONG METRICAL SYLLABLES.

சூ. நெடில் குறிறனியே நின்றும்ஒற்றடுத்தும்,
நடை பெறு நேரசை நால்வகையானே.
[ விரு 169. ]

———«««»»»———

**7.** A SHORT LETTER FORMING A SYLLABLE.

எ. குறிப்பேஏவ றற்சுட்டல்வழி
தனிக்குறின் மொழிமுத றனியசையிலவே.

———«««»»»———

**8.** நிரையசை: TWO SHORT, OR A SHORT AND LONG SYLLABLE.

அ. குறிலிணை குறினெடி றனித்தும், ஒற்றடுத்தும்,
நெறிமையினுன்காய் வரு நிரை யசையே.
[ விரு 170. ]

**9.** ஐ IN THE MIDDLE AND END.

௯. ஈறும்இடையும் இணைந்தும் இணையசை
ஆகும்ஐஎன்ப அறிந்திசினோரே.

---

௫. § சீர்.

**10.** METRICAL FEET.

௧௰. இயற்சீர், உரிச்சீர், பொதுச்சீர்என்றும்
மயக்கற வகுத்த சீர்மூன்றாகும்.
[ வினா 172. ]

---

**11.** FEET OF TWO METRICAL SYLLABLES

௧௧. ஈரசைகூடிய சீர் இயற் சீர்;அவை
ஈரிரண்டென்ப இயல்புணர்ந்தோரே.
[ வினா 174. ]

---

**12.** FEET OF THREE METRICAL SYLLABLES.

௧௨. மூவசைச் சீருரிச் சீர்இரு நான்கனுள்
நேரிறு நான்கும் வெள்ளை, அல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட்டனவே.
[ வினா 175. ]

---

**13.** FEET OF FOUR METRICAL SYLLABLES.

௧௩. நாலசைச் சீர் பொதுச் சீர்பதினாறே.
[ வினா 176. ]

**14.** FEET OF ONE METRICAL SYLLABLE.

கச. ஓரசைச் சீருமஃ தோரிரு வகைத்தே.

[ வினா 173. காரிகை II. 5.]



**15.** ANOMALOUS USAGE

கரு. விரவியும் அருகியும் வேறும் ஒரோவழி
மருவியும் பெறுது வழங்குமன் அவையே.



**16.** FEET OF THREE METRICAL SYLLABLES IN WHICH THE SECOND IS A நேர்.

கசா. நிரை நடுவியலா வஞ்சிஉரிச்சீர்
கவியினோடகவலிற் கடிவரையிலவே.



ச. § தளை.

**17.** THE MODE OF COMBINING METRICAL FEET.

கஎ. சீரொடு சீர்தலைப் பெய்வது தளை,அவை
ஏழென மொழிப இயல்புணர்ந்தோரே.



**18.** COMBINATION PECULIAR TO வெண்பா.

கஅ. வெண்சீர் ஒன்றலும், இயற்சீர் விகற்பமும்,
என்றிரண்டென்ப வெண்டளைக்கியல்பே.

[ வினா 179.]



**19.** COMBINATION PECULIAR TO அகவல்.

கக. ஈரசைச் சீர்நின் றினிவருஞ் சீரொடு
நேரசை ஒன்ற னிரையசை ஒன்றலென்
றாயிருவகைத்தே ஆசிரியத்தளை.

[ வினா 178.]

**20.** COMBINATION PECULIAR OF கலிப்பா.

உ0. நிரைஈறில்லா உரிச்சீர் முன்னர்
நிரைவருகாலைக் கலித்தளை ஆகும்.



**21.** COMBINATION PECULIAR TO வஞ்சி.

உக. தன்சீர்இறுதி நிரையொடு நேர்வரின்
வஞ்சித்தளையின் வகைஇரண்டாகும்.



**22.** THE LAWS OF COMBINATION STRICTLY OBSERVED ONLY IN வெண்பா.

உஉ. வெள்ளையுட்பிறதளை விரவா; அல்லன
எல்லாத்தளையு' மயங்கியும் வழங்கும்.



ரு. § அடி.

**23.** METRICAL LINES.

உரு. குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி,
கழிநெடிலடிஎனக் கட்டுரைத்தனரே..
[வினா 180.]



**24.** THE NUMBER OF FEET IN EACH.

உச. குறளடி, சிந்தடி;—இருசீர், முச்சீர்;
அளவடி, நெடிலடி,—நாற்சீர், ஐஞ்சீர்;
நிரனிறைவகையா னிறுத்தனர் கொளலே.
[வினா 180.]

**25.** LINES OF FROM SIX TO TWELVE FEET.

உரு. கழிநெடிலடியே கசடறக்கிளப்பின்,
அறுசீர்முதலா ஐயிரண்டீறு
வருவனபிறவும் வகுத்தனர்கொளலே.
[ விரு 180. ]

**26.** LINES USED IN வஞ்சிப்பா.

உசு. சிந்தடி, குறளடி, என்றிரண்டடியான்
வஞ்சிநடக்கும் என்மனூர் புலவர்.
[ காரிகை 21. வஞ்சி என்னும் ஒண்பா அடி குறள் சிந்தென்றுரைப்ப. ]

**27.** FEET USED IN கலிப்பா, வெண்பா AND அகவல்.

உஎ. கலியொடுவெண்பா அகவல்கூறின்
அளவடி தன்னூல் நடக்குமென்ப.
[ காரிகை 21. வெண்பா அகவல் கலிப்பா அளவடி. ]

**28.** ALL LINES USED IN THE (INFERIOR) SPECIES OF METRE.

உஅ. பாவினம் எல்லா அடியினும் நடக்கும்.

**29.** IN அகவல் LINES ARE FOUND BELONGING TO OTHER METRES.

உகூ. இயற்சீர்வெள்ளடி வஞ்சியடி; அவை
அகப்பட வரூஉம் அகவலும் உளவே.

**30.** IN கலிப்பா AND வஞ்சிப்பா ALSO OTHER LINES ARE FOUND.

௩0. வெள்ளடி கலியினுள் விரவவும் பெறுமே.
வஞ்சியுள் அகவன் மயங்கினும் வரையார்.

**31.** HOW MANY LINES IN EACH KIND OF VERSE.

௩௧. ஈரடிவெண்பாச் சிறுமை; மூவடி
ஆசிரியத்தொடு வஞ்சி; எஞ்சிய
ஈரிரண்டடியே இழிபெனமொழிப.

———«««»»»———

௬. § தொடை.

**32.** DIFFERENT KINDS OF CONNECTION BETWEEN LINES.

௩௨. தொடையே அடியிரண் டியையத் தோன்றும்;
மோனை, எதுகை, முரண் இயைபளபெடை,
பாதமிணையே, பொழிப்போ டொரூஉத்தொடை
சீரியன் முற்றொடு, சிவணும்ஆர் அவையே.
[விஞ 181.]

———«««»»»———

**33.** RECURRENCE OF THE FIRST LETTER IN EACH LINE.

அடிமோனை.

௩௩. ஆதிஎழுத்தே அடிதொறும் வரின்அடி
மோனைத் தொடை என மொழிமனர் புலவர்.
[விஞ 183.]

(உ-ம்) "மாவும் புள்ளும் வதுவையிற் படர,
மாநீர் விரிந்த பூவுங் கூம்ப,
மாலை தொடுத்த கோதையுங் கமழ,
மாலை வந்த வாடை
மாயோன் இன்னுயிர்ப் புறத்திறுத் தறறே."

[அடி தோறும் முதல் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தது.]

———«««»»»———

**34.** INITIAL RHYME.

எதுகை.

௩௪. இரண்டாம் எழுத்தொன் றியைவதேஎதுகை.
[விஞ 182.]

(உ-ம்.) "வடிஏர்கண் ணீர்மல்க வான்பொருட்கட் சென்றார்,
கடிஆர் கனங்குழாய், காணார்கொல் காட்டின்.
இடியின் முழக்கஞ்சி ஈர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை."

[அடி தோறும் இரண்டாம் எழுத்து ஒன்று வரத் தொடுத்தது.]

**35.** DIFFERENT KINDS OF CONSONANTS ADMISSIBLE.

௩௫. வருக்க நெடில்இனம் வரையார் ஆண்டே.

(உ-ம.) "காடாது கட்டலிற் கேடில்லை; கட்டபின்
வீடில்லை கட்பாள் பவர்க்கு." [வருக்கம்.]

"ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான் சாந்துயர் தரும்." [நெடில்.]

"தீயினுற் சுட்டபுண் உள்ளாறும்; ஆறுதே
நாவினுற் சுட்டவடு." [இனம்.]



**36.** ANTITHESIS.

௩௬. மொழியினும் பொருளினு முரணுதன் முரணே

(உ-ம்.) "இருள்பரந் தன்ன மாநீர் மருங்கில்
நிலவு குவித்தன்ன வெண்மணல் ஒருசிறை
இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னின அன்ன நுண்டா திறைக்குஞ்
சிறுகுடிப் பாதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணும் உடையவால் அணங்கே."
[அடி தோறும் முதற்கண்ணே மறுதலைப்படத் தொடுத்தது.]



**37.** DIFFERENT KINDS OF ANTITHETICAL COMBINATION.

௩௭. கடைஇணை, பின்முரண், இடைப்புணர் முரண்என
இவையுங் கூறுப ஒருசாரோரே.



**38.** CONSONANTS IN THE LAST FOOT.

௩௮. இறு வாய் ஒப்பின்அஃ தியைபெனப்படுமே.

(உ-ம்.) "இன்னகைத் துவர்வாய்க்கிளவியும் அணங்கே,
நன்மா மேனிச் சுணங்கும் ஆர் அணங்கே,
ஆடமைத் தோளி கூடலும் அணங்கே,
அரிமதர் மழைக்கணும் அணங்கே,
திருநுதற் பொறித்த திலதமும் அணங்கே."
[அடி தோறும் இறுதிச்சீர் ஒன்றி வரத்தொடுத்த.]



**39.** CORRESPONDENCE OF PROLONGED LETTERS.

௩௯. அளபெடை ஒன்றுவ தளபெடைத் தொடையே.

(உ-ம்.) "ஆஅ! அளிய அலவன்றன் பார்ப்பினோ
டிஇர் இரையுங் கொண் டீர்அளைப்பள்ளியுட்
டேஎர் திரைஅலைப்பத் துஞ்சா திறைவன்றோள்
மேஎ வலைப்பட்ட நம்போ லறநுதால்!
ஓஒ உழக்குந் துயர்"

**40.** COINCIDENCE IN FIRST AND SECOND FEET.

சO. இரு சீர்மிசை வரத் தொடுப்பதிணையே.

(உ-ம்.) "வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்
யாண்டும் இடும்பைஇல."



**41.** COINCIDENCE OF THE FIRST AND THIRD FEET.

சக. முதலொடு மூன்றுஞ் சீர்த்தொடை பொழிப்பே.

(உ-ம்) "வானின் றுலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று."



**42.** COINCIDENCE IN FIRST AND FOURTH.

சஉ. சீரிரண்டிடைவிடத் தொடுப்ப தொரூஉத்தொடை.

(உ-ம்.) "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு."



**43.** COINCIDENCE IN THE THREE FIRST FEET

சஈ. மூவொருசீரு முதல்வரத் தொடுப்பது
கூழைஎன்மனார் குறிப்புணர்ந்தோரே.

(உ-ம்.) "தானந் தவம்இரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்."



**44.** WHEN ALL BUT THE SECOND HAVE THE COINCIDENCE.

சச. முதல்அயற் சீர்ஒழித் தல்லன மூன்றின்
மிசை வரத்தொடுப்பது மேற்கதுவாயே.

(உ-ம்.) "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி."



**45.** WHEN ALL BUT THE PENULTIMATE FOOT HAVE THE COINCIDENCE.

சரு. ஈற்றயற்சீர்ஒழித் தெல்லாந்தொடுப்பது
கீழ்க்கதுவாயின் கிழமையதாகும்.

(உ-ம்) "சொல்லுக சொல்லிற் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்."

**46.** WHEN EVERY FOOT HAS THE CONSONANCE.

௪௬. சீர்தொறுந்தொடுப்பது முற்றெனப்படுமே.

(உ-ம்.) "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பா யதூஉ மழை."

---

**47.** THREE OTHER KINDS OF COMBINATION.

௪௭. செந்தொடை இரட்டையோ டந்தாதி எனவும்
வந்தவகையான் வழங்குமன் பெயரே.

---

**48.** SIMPLE COMBINATION.

௪௮. செந்தொடை ஒவ்வாத் திறத்தன ஆகும்.

(உ-ம்.) "பூத்த வேங்கை வியன்சினை ஏறி
மயிலினம் அகவு' நாடன்,
நன்னுதற் கொடிச்சி மனத்தகத்தோனே!"

---

**49.** DOUBLE COMBINATION.

௪௯. இரட்டை அடிமுழு தொருசீர் இயற்றே.

(உ-ம்.) "ஒக்குமே, ஒக்குமே, ஒக்குமே ஒக்கும்
விளக்கினிற் சீறெரி ஒக்குமே ஒக்கும்
குளக் கொட்டிப் பூவினிறம்."

---

**50.** THE END OF ONE LINE BECOMES THE BEGINNING OF ANOTHER.

௫௦. ஈறு முதலாத் தொடுப்பதந்தாதியென்
றோதினர் மாதோ உணர்ந்திசினோரே.

(உ-ம்.) "உலகுடன் விளக்கும் ஒளிதிகழ் அவிர்மதி,
மதிநலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை,
முக்குடை நீழற் பொற்புடை ஆசனம்,
ஆசனத் திருந்த திருந்தொளி அறிவனை
அறிவுசேர் உள்ளமோ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தர் ஈதெனப்
பன்னருஞ் சிறப்பின விண்மிசை உலகே."

---

**51.** IN MINGLED COMBINATIONS THE NAME OF THE FIRST IS GIVEN.

௫௧. தொடை பல தொடுப்பினுந் தனிபல விரவினு
முதல்வந் ததனான் மொழிந்திசிற்பெயரே.

கொழுநன்=புருடன். வி. 109.
கொள்கை=கருத்து. எண்ணம். சூ. 26. [வி. 94.]
கொள்வோன்=மாணுக்கன். சூ. 3. [வி. 95.]
கொள்ளல்=பிடித்துக் கொளல். வாங்குதல். சூ. 419. 426. வி. 124.
கொள்ளை=மிகுதி. வி. 137.

## கோ

கோ = அரசன், தேவன். வி. 65. சூ. 276.
கோடல்=கொள்ளல். வி. 94. கற்றுக் கொள்ளல். சூ. 3.
கோடற்பொருள் = கொடுத்ததொழிலின் செயப்படு பொருளைத் தனக்கு உரியதாக்கிக்கொள்ளுதலையுடைத்து.
கோடாய் = செவிலித்தாய். வி. 63. [கோள் + தாய். வி. 37.]
கோடு = மரக்கொம்பு. [கோட்டுப்பூ. வி. 26.] வஞ்சனை. வி. 38. விலங்கின்கொம்பு. வி. 121.
கோதை=சேரன். பெண். பூமாலை. சூ. 283, 4. யாப். 33.
கோப்புடைமொழிகள் = கோக்கப்படுதலையுடைய சொற்கள். சூ. 459.
கோமகன்=அரசர் குமாரன். வி. 84. [வி. 152.]
கோலுதல்=சூழ்ந்திடல். சிற. பா. 13.
கோல்=தடி. துலாக்கோல். மரக்கொம்பு. யாப். 68.
கோவலர்=கோபாலர். இடையர். சூ. 390.
கோள் = கொள்ளல். கோட்பாடு. வி. 140. உதாரணம். சூ. 9. [வி.96.]
கோறல்=கொல்லல். வி. 94.
கௌ=கவ்வல். பற்றல். வி. 23.

## ச

சடப்பொருள் = சரீரப்பொருள். உயிரல்லாதபொருள். சூ. 382.
சண்பகம்=ஓர்மரம். வி. 11.
சநகை=ஓர்ஊர். சிற. பா. 20.
சந்தி = நிலைமொழி வருமொழி சந்தித்தலால் உண்டாகிய தோன்றல் திரிதல் கெடுதல் சந்தி. சூ. 133. வி. 21. 22.
சம். வி. 123. (உ.)
சர்ச்சரை=எட்டேறுகளில் ஒன்று. சூ. 386.
சலம்=நீர். நீடிக்கை. வி. 70.
சழக்கெனல=ஒலிக்குறிப்பு. வி. 124.
சனகன்=ஓர்அரசன். வி. 123.
சன்மதி=ஓர்முனி. சிற. பா. 20.

## சா

சா. வி. 82.
சாகாடு=வண்டில். வி. 208.
சாதல்=இறத்தல். வி. 143. 82.
சாதி = அந்தணர்முதலிய நால்வகைச் சாதிகளால் வருபெயர். குலம். சூ. 436. 276.
சாத்தன்=வைரவன். எருதின்பெயர். சூ. 283. 284.
சாயும்உகரம்=குற்றியிலுகரம். சூ. 107.
சாரியை = பகுதி விகுதிகளைச் சார்ந்து இசைந்து நிற்பது சாரியை. சூ. 133. வி. 108. (விகுதிமுதலிய புணர்ப்பைச் சார்ந்து ஆண்டைக்கியைந்து நிற்றலிற் சாரியை.)
சாரியையுருபுகள்=அன் ஆன் முதலிய சாரியையுருபுகள். சூ. 243. 244. வி. 108.
சார்=ஏழன் உருபு. வி. 63.
சார்தல்=சேர்தல். சூ. 246. வி. 93.
சார்பு=புடைநூல். சூ. 58. ஆதரவு. வி. 60.
சார்பெழுத்து=உயிரையு மெய்யையுஞ் சார்ந்துவருவது. சூ. 61. 58. 150. வி. 11.
சால=மிக. வி. 33. [120.] சூ. 272. 388.
சாலுதல்=நிறைதல். வி. 74.
சால்பு = அறிவு. மேம்பாடு, வி. 113.
சாவகம்=ஓர்தேசம். சூ. 273.
சானகி=சீதை. வி. 123.
சான்று = சாட்சி. உதாரணம். (முகவுரை.)
சான்றோர் = அறிவால்நிறைந்தோர். வி. 111. 142. [சால். வி. 95.]

## சி

சிங்களம் = ஓர்தேசம், இலங்கையின் தென்பங்கு. சூ. 273.
சிதல்=கறையான். சூ. 379. சூ. 379.
சித்திரவணி. வி. 197.
சித்திரித்தல். வி. 76. சித்திரஞ்செய்தல்.
சித்துப்பொருள் = ஆத்துமப்பொருள். உயிராகியபொருள். சூ. 376.

சிந்தை = கருத்து. நினைப்பு. வி. 79. [சூ. 147.]

சிலம்பி=சிலந்திப்பூச்சி. வி. 34.

சிலம்புதல்=சத்தித்தல். சூ. 391.

சிலிர்த்தல் = புளகிதமாதல். மயிர்பொடித்தல். வி. 79.

சிலை=வில். வி. 26. கல். வி.123. ஓசை. சூ. 391. [சூ. 147.]

சிலைத்தல்=சத்தித்தல். வி. 391.

சில்வழி=சிலவிடம். சூ. 207.

சிவணல்=பொருந்தல். வி. 28.

சிறத்தல் = விசேஷித்தல். கீர்த்திபெறுதல். சூ. 18. 338.

சிறப்பு=உயர்வு. மேன்மை. சூ.73.129. 276. 355. 357. 434. வி. 59. 82.
இடைப்பொருள் ஒன்று. சூ. 353.

சிறப்புப்பாயிரம்=ஆக்கியோன் முதலிய பதினொருவகையும் உடையது. சூ. 2. 47. 48.

சிறப்புப்பெயர்=ஒரு பொருளை விசேஷித்துக் காட்டுவது. வி. 48.

சிறப்பெழுத்து = ஆரியத்திற்கே உரிய சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்து. சூ. 274.

சிறப்புவிதி=விசேஷிக்கும் விதி.

சிறு. வி. 121. 124.

சிறுபான்மை = அருகல்விதி. ஒரோவிடத்து அரிதாய். வி.112. [சிறு + பால் (வி. 121.) + மை. வி. 94.]

சிறை=புடை. பக்கம். சூ. 8. இறகு. சூ. 391. காவல். வி. 81.

சிற்றின்பம். வி. 121.

சினத்தல்=கோபித்தல். வி. 90. [76.]

சினம்=கோபம். வி. 35. 96.

சினை=உறுப்பு. அவயவம். சூ.282.315. 316. 388.

சினைப்பெயர் = சினையைப் பற்றிவரும் பெயர். சூ. 132. 282.

சினைப்பொருள் = உறுப்புப் பொருள். சூ. 277.

சினைமுதற்பெயர் = சினையையும் முதலையும் பற்றிவரும் பெயர். சூ. 282.

சினையாகுபெயர். வி. 162. சூ. 290.

சினைவினை=அவயவத்தின் றொழிலாகிய வினை. சூ. 345.

சின்னீர = சிறியதன்மையுடையன. வி. 35. [சிறு + நீர் + அ. வி. 93. 121.]

சீ

சீதம்=தமிழ்நாடுகளில் ஒன்று. சூ. 273.

சீர். வி. 171.

சீர்மை=நல்லசீர். வி. 59. கனமாயிருப்பது. [எட்டேறில் ஒன்று. சூ. 386.]

சீயகங்கன்=ஓர் அரசன். சிற. பா. 16.

சீறடி. வி. 121.

சீறுதல்=கோபித்தல். வி. 82. 89.

சீற்றம்=கோபம். வி. 93.

சீனம்=ஓர்தேசம். சூ. 273.

சு

சு=நல். சுய. வி. 123. (உ.)

சுடர்=ஒளி. சூரியசந்திரர் = இருசுடர். வி. 82.

சுடுதல். வி. 96.

சுட்டு = சுட்டெழுத்துக்களால் வருபெயர். சூ. 276. 279. 314. 427. 251.
புறச்சுட்டு=மொழிப்புறத்துச் சுட்டுதல். வி. 5.
அண்மைச்சுட்டு=சமீபச்சுட்டு.
சேய்மைச்சுட்டு=தூரச்சுட்டு.
பொதுச்சுட்டு=தூரஞ் சமீபம் இரண்டிற்கும் நடுவான சுட்டு.

சுட்டுதல்=குறித்தல். குறித்துக்காட்டல். சூ. 366.

சுட்டெழுத்து = சுட்டிக்காட்டுகிறஎழுத்து. சூ. 66. 179. வி. 5. [வி. 153.]

சும்மை=ஓசை. சூ. 391.

சுரன்=சுரம், பாலைநிலம். வி.63. [வி. 17.]

சுருங்கச்சொல்லல் = சொற்சுருங்கச் சொல்லுதல். சூ. 13.

சுருங்கல். சூ. 387.

சுவேதநீர்=சுக்கிலம். சூ. 268.

சுவை=உருசி. அறுசுவை. சூ. 175. 386. வி. 82. 137.
(ஆறு: இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு.)

சுழலல்=சுற்றுதல். வி. 82.

சூ

சூடி=சூடினவன். சூ. 389.

சூத்திரம்=சூத்திரயாப்பு. சூ. 4. 18.

சூது. வி. 82.

சூத்திரநிலை. சூ. 19.

## செ

செங்கோல்=அரசர்செலுத்துஞ் செம்மையான கோல். சிற. பா. 16. [வி. 121. சூ. 135. 136.] சூ. 24.
செஞ்சொல் = செவ்வியசொல். [வி. 121.
செந்தமிழ்=செந்தமிழ் நிலத்து மொழி. சூ. 271.
செந்தமிழ்நிலம்=பாண்டி நாடு.

"சகதனப் பொதியச் செந்தமிழ் முனியும்
சவுந்தர பாண்டியன் எனுந்தமிழ் நாடனும்
சங்கப் புலவரும் தழைத்தினி திருந்த
மங்கலப் பாண்டி வளநா டென்ப"

(கருவூரின் கிழக்கு மருவூரின்மேற்கே, வைகையாற்றின் தெற்கு மருதயாறறின் வடக்கே உள்ளசீமை.) சூ. 271. [வி. 121.]
செப்புதல்=சொல்லல். வி. 89.
செயப்படுபொருள் = வினைமுதற்றொழிற் பயனுறுவதாகிய இரண்டாம் வேற்றுமைப்பொருள். வி. 58. சூ. 320.
செயப்பாட்டுவினை=மூன்றாம் வேற்றுமைக் கர்த்தாவைக்கொண்டு முடிவது. வி. 105. 124.
செயற்கை=செயல். விகாரம். விதி.
செயற்கைப்பொருள் = ஒரு பொருளை மற்றொருபொருளாகச் செய்யப்படு பொருள்.
செயற்கையளபெடை = பாட்டின் இசை நிறைப்பது. சூ. 94.
செயிர்=குற்றம். வி. 142.
செயும்பொருள்=செயப்படு பொருள். சூ. 446.
செய்கைஅளபெடை=விகாரத்தால் வந்த அளபெடை. சூ. 91.
செய்தது=வினையாலணையும் பெயர். சூ. 441.
செய்து=செய்து என்பது முதலியவைகள் வினையெச்சவாய்பாடு. சூ. 343.
செய்பவன்=கர்த்தா. சூ. 320.
இயற்றுதற்கருத்தா.
ஏவற்கருத்தா.
செய்பொருள் = செய்யப்படுபொருள். சூ. 320.
செய்யவள்=செய்யாள். இலக்குமி. சூ. 317.
செய்யாள்=இலக்குமி. வி. 24. [வி. 93.]
செய்யிய=அகரவீற்று வினையெச்ச வாய்பாடு. சூ. 167.
செய்யுமெனெச்சம்=வருங்காலப் பெயரெச்ச வாய்பாடு. சூ. 341.
செய்யுளிடம்=கவிகளின் வழக்கம். சூ. 259.
செய்யுள்=பாட்டு. சூ. 120. 288. 374. 155.
செய்யுள்வழக்கம்=கவிகளில் வழங்கும் வழக்கம்.
செய்யுள்விகாரம்=கவிகளில் உள்ள விகாரம். வி. 41. சூ. 155. 156.
செய்வியென்னேவல் = செய்யென்னும் ஏவலின் மேலோரேவல். வி. 103. சூ. 138.
செரு=போர். வி. 132.
செருக்கு=அகங்காரம். வி. 72.
செருக்குதல்=களித்தல். வி. 82.
செலவு=போனகாலம். சூ. 145. [செல். வி. 91.]
செல்=மேகம். சூ. 232.
செவியறிவு=செவியாற் சத்தத்தை யறிதல். சூ. 381.
செவிலி=தாதி. சூ. 227.
செவ்வனிறை = நேரான பிரதியுத்தரம். சூ. 427.
செவ்வன்=செவ்வையாக. சூ. 18.
செவ்வாய்=சிவந்தவாய். வி. 121. சூ. 290.
செவ்வி=செம்மை. தகுதி. வி. 89. 95.
செவ்வியான்=செம்மையானவன். வி. 124.
[செவ்வி + ஆன். வி. 93.]
செவ்வெண் = செவ்விதாகிய எண். சூ. 359.
செழு=செழுமையான. செழித்த. வி. 32. [121.]
செறல்=கோபம். சூ. 420.
செறிதல்=பொருந்தல். சூ. 71. 78. முடிதல். சூ. 345.
செறித்தல்=அடக்கல். சேர்த்தல். சூ. 18.
செறுதல்=நெருக்குதல். வி. 82.
சென்றுதேய்ந்திறுதல் = செல்லச் செல்லச் சொல்வலி பொருள்வலி இரண்டுந்தேய்ந்து முடியச்சொல்லுதல். சூ. 12.

## சே

சே=இரிடபம். வி. 23.
சிவந்த. வி. 121.

சேண் = தூரம். வி. 17.

சேதாம்பல். வி. 12.

சேயிழை=நூல்நூற்கும் மடந்தை. சூ. 24. [வி. 157.]

சேய்=மகன். வி. 152.
தூரம். நீளம். சூ. 388.

சேய்மை=தூரம். சூ. 313.

சேர்க்கை=சேர்வு. வி. 17. [வி. 94.]

சேர்தல். வி. 96.

சேர்ப்பன்=கரை ஆளும்நாதன். சூ.391.

சேர்ப்பு=கரை.

சேவடி=சிவந்த அடி. வி. 112. [121.]

சேறல்=கெடுதல். சூ. 341. செல்லல். வி. 94.

## சை

சைலம். வி. 123.

## சொ

சொல்=மொழி. வி. 43. (P.)
சொல்லதிகாரம்.=சொல்லினது இலக்கணத்தை யுணர்த்துகிறபங்கு: சூ.258. 259—274. [ஆகுபெயர். 162.]
"சொல்லெனப் படுப பெயரே வினையென் றாயிரண் டென்ப அறிந்திசினோரே; இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும் அவற்று வழி மருங்கிற் றோன்றும் என்ப." (தொல் காப்)

சொல்லணி. வி. 196, 7.

சொல்லாகுபெயர். சூ. 290.

சொல்லிசை யளபெடை = சொல்லிசையை நிறைக்கவருவது. சூ. 91.

சொற்பொருள்=சொல்லுக்குப் பொருளெழுதும் உரை; இதனை, சொற்பொருளுரை, பதப்பொருளுரை, பதவுரை எனவும் வழங்குவர். சூ. 21.

சொற்பொருள்விரித்தல். சூ. 14.

## சோ

சோணாடு=சோழநாடு. சூ. 239.

சோமன்=சந்திரன். வி. 123.

சோம்புதல் = சோம்பலாகத் திரிதல். வி. 27.

சோர்வு=மயக்கம். வி. 74. [94.]

சோலை=வனம், பூஞ்சோலை. வி. 110.

சோழியன்=சோழதேசத்தான். சூ.276.

சோனகம்=ஓர்தேசம். சூ. 273.

## சௌ

சௌமன். வி. 123.

## ஞ

ஞஃகான்=ஞகரம்.

ஞமலி=நாய். மயில். சூ. 14. சூ. 158.

## ஞா

ஞாலம்=பூமி. வி. 35.

ஞாலுதல்=தொங்கல். சூ. 158.

## ஞெ

ஞெள்ளா=மிகா. சூ. 158.

## டு

டு=ஒன்றன் படர்க்கை விகுதி. சூ. 328.
ஒருமைத்தன்மை விகுதி. சூ. 331.

டும்=தன்மைப்பன்மை விகுதி. சூ. 332.

## த

தகவு=தகுதிப்பொருள். 298. தகுதி. சூ. 40.

தகு. வி. 125.

தகுதி=மூவகைத்தகுதி வழக்குச்சொல். சூ. 269. பொறுமை. வி. 23.

தகை=தகுதி. [வி. 96.]

தகைமை=தன்மை. சூ. 190.

தக்கணம் = தென்னாடு. சூ. 391.

தங்கை=இளைய சகோதரி. வி. 74.

தஞ்சம்=அடைக்கலம். வி. 84.

தடம்=பாதை. வி. 86.

தடித்தல்=வீங்கல். கனத்தல். வி. 79.

தணிதல்=ஆறுதல். வி. 96.

தண் = குளிர்ச்சிபொருந்திய. வி. 70. [121.]

தண்டம்=தண்டனை. வி. 216.

தண்டி=போஜராசன் காலத்தில் இருந்த ஓர்புலவன், இவன் அலங்காரத்தைப் பற்றிபநூலைச் செய்தவன்.

தண்மை=குளிர்ச்சி. (எட்டேில் ஒன்று.) சூ. 386.

ததைதல்=நெருங்குதல். வி. 157.

தத்தம். வி. 74.

தத்தம்பொருள்=தத்தமக்குரிய பொருளை உணர்த்தி வருபவை. சூ. 352. வி. 110.

தத்துதல்=தாண்டுதல். வி. 137.
தத்தை=கிளி. சூ. 172.
தந்திரவுத்தி=நூலுத்தி. சூ. 15.
தந்துரை=நூலிற்சொல்லிய பொருளல்லாதனவற்றை அதற்குத் தந்துரைத்தல். சூ. 1.
தந்தை=தகப்பன். வி. 30. 74.
தமர்=தம்முடையவர். சுற்றத்தார். வி. 14. [74. 93. 74.]
தமிழொழிநிலம்=தமிழ்நிலம் அல்லாத நிலம். சூ. 273.
தமிழ். சூ. 225.
தமிழ்ப்பாஷை. முகவுரை. 1.
தமிழ்மொழிஆக்கம். சூ. 128.
தம். சூ. 246. 247. 244.
தம்பால்=தம்மிடம. சூ. 447. [வி. 74.]
தம்பி. வி. 74.
தருதல்=காட்டல்.சூ.343.இதல்.சூ.448.
தரை=பூமி. சூ. 225.
தலை=சிரசு. வி. 61. இடம். தலம். வி. 63. சிற. பா. 1. தலைமை. 143.
தவ=மிக. சூ. 273. 388.
தவம்=தவசு. வி. 95.
தவழ்தல்=பரவுதல். வி. 63.
தவளைப்பாய்த்து=இடம் விட்டுக் குதிக்கின்ற தவளையின்பாய்ச்சல். சூ. 19.
தவிர்தல்=வாராதொழிதல். சூ. 243.
தவ்வணைதல் = தகரம்வந்து புணர்தல். சூ. 229.
தவ்வை=தௌவை. மூதேவி. சூ. 317.
தழுவுதல்=அங்கீகரித்தல். வி. 87. உணர்த்துதல். சூ. 374.
தழை=தளிர். இலை. வி. 64. தளிர். வி. 133.
தளிர்த்தல்=தளிர்விடுதல். வி. 137.
தளை=பாசம். பந்தம். வி. 26. யாப். 17. 22. வி. 177.
தன்னை. சூ. 273.
தற்கிழமைப்பொருள் = தன்னோடொற்றுமையுடையது. வி. 62.
தற்பவம் = ஆரியசிறப்பெழுத்தானும் பொதுவுஞ் சிறப்புமாகிய இரண்டெழுத்தானுந் தமிழிற்சிறந்து வருவது. வி. 43. (P.)
தற்சமம் = ஆரியத்திற்குந் தமிழுக்கும் பொதுவெழுத்தால் வருவது. வி. 43. (P.)
தற்சுட்டளபு = தன்னைக் குறிக்கும் அளவு. சூ. 95.
தற்புகழ்தல் = தன்னைப்புகழ்ந்துகொள்ளுதல். சூ. 52.
தனம்=ஆஸ்தி. வி. 86.
தனிக்குறில்=தனித்துவருங் குற்றெழுத்து. வி. 29.
தனிக்குறில் அணைந்தஒற்று = தனித்துவருங்குறிலைச் சேர்ந்தமெய் (உ-ம்.) மண் எ-ல் ண் என்னும் மெய் ம என்னுங் குறிலைச்சேர்ந்தது.
தனிநிலை=ஆய்தஎழுத்து. (உயிரின்கணத்திலுஞ்சேராது, மெய்யின் கணத்திலுஞ் சேராது தனியே நிற்பதால்.) (அஃகிய) தனிநிலை. சூ. 60.
தனை=அளவு. வி. 87.
தன்=தானென்பது திரிந்தது. சூ. 218. வி. 74.
தன்குறி வழக்க மிகவெடுத்துரைத்தல்= தான்புதிதாகச்சொல்லி வழங்குவதை இடமிடந் தோறும் அதிகப்பட எடுத்துச் சொல்லுதல். சூ. 14.
தன்முகம்=தனக்கெதிர்முகம். தன்னிடத்தில். சூ. 303
தன்மேம்பாட்டுரை அணி. வி. 211.
தன்மை = யான்முதலியதன்மைப்பெயர். சூ. 285. 282. 324. 330. வி. 54. 72.
தன்மைஅணி. வி. 203.
தன்மைச்சொல் = சொல்வோன்றன்னைக்குறிக்குஞ் சொல். வி. 54.
தன்மைப்பன்மை = தன்மைப்பெயரில் அநேகம். வி. 54.
தன்மைப் பன்மை வினைமுற்று = தன்னோடுசேர்ந்த பலர்பால் முற்றுவினை. வி. 77.
தன்மைப் பொருள் = தன்மையிடப்பொருள். வி. 54.
தன்வினை=தன் கர்த்தாவின் தொழில். வி. 102.
தன்னின முடித்தல் = ஒன்றைச் சொல்லுமிடத்து அதற்கினமானதையும் அதனோடு முடித்தல். சூ. 14.

## தா

தாக்கு=பாய்தல். போர். வி. 121.
தாங்கல்=பொறுத்தல். வி. 84.
தாது=பூந்தாது. வி. 110. எழுவகைத்தாதுக்கள். சூ. 268.

## தை

தையல்=பெண். சூ. 277.

## தொ

தொகாநிலை. சூ. 415. வி. 151. [வி. 91.]

தொகுத்தல்=எழுத்தாயினுஞ் சாரியை யாயினுங் குறைத்துச் சுருக்குதல். சூ. 155. வி. 41.
விரிந்துகிடந்ததைத் தொகுத்து முடித்தல். சூ. 50.

தொகுத்துச்சுட்டல் = பலவற்றையுந் தொகையாக்கிச் சொல்லுதல். சூ. 14.

தொகுத்துரை=வேற்றுமை சாரியை முதலிய உறுப்புக்களைத் தொகுத்தெழுதுமுரை, இதைப் பொழிப்புரையென்றும் வழங்குவர். சூ. 21.

தொகை=உருபு மறைதல், தொகைக் குறிப்புச்சொல். சூ. 269.
பலவற்றையுந் தொகுத்துக் கூறுந்தொகைச் சூத்திரம். சூ. 20.
மறைந்துநிற்பவை. சூ. 403.

தொகைக்குறிப்பு = தொகுத்துக் குறிக்குங் குறிப்பு. சூ. 269.

தொகைச்சூத்திரம்=காரியங்களைத் தொகுத்துக்கூறுவது.

தொகைஆறு. சூ. 403. வி. 151.

தொகைநிலை. சூ. 402. வி. 151.

தொகைப்பொருள் = தொகைநிலைத் தொடர்பொருள். சூ. 411.

தொகைவிரி = தொகுத்தும் விரித்தும் முடித்தல். சூ. 50.

தொடக்கம் = ஆதி. (தொடு.) என்றற்றொடக்கத்து=என்றுசொல்வது போலவரும்.

தொடர். வி. 126.

தொடர்கை = தொடர்பு, சிநேகம். வி. 94. 11.

தொடர்ச்சொற்புணர்த்தல் = ஒன்றற்கொன்று சம்பந்தமுடைய சொல்லுகளைச் சேர்த்துவைத்தல். சூ. 14.

தொடர்தல்=இற்றெழுத்திற்கு அயலெழுத்தாகத் தொடர்தல். சூ. 94.

தொடர்பு=செய்யுள். சூ. 173.

தொடர்மொழி. சூ. 259. 260. வி. 150.

தொடி=வளை. வி. 96. [பைந்தொடி. வி. 121. 157.]

தொடை = மோனைமுதலிய தொடை. யாப். 32. வி. 181.

தொல்லை=பழமை. சூ. 98.
துன்பம். வி. 96.

தொல்லோர்=முன்னோர். வி. 145. [93.]

தொழில்உவமை. வி. 204.

தொழில்=வினை. செயல். வி. 342.

தொழிற்பெயா=வினைப்பெயர். சூ. 217. 286. வி. 155.

தொழின்மொழி = வினைச்சொல். சூ. 256.

தொழுதல்=பணிதல். சூ. 265. ஊழியஞ்செய்தல். வி. 82.

தொன்முறை = தொல் + முறை = பழமையானமுறை. சூ. 290.

தொன்றுதொட்டு=பூர்வம் முதற்கொண்டு. சூ. 290.

தொன்னூல்=பழமையானநூல். சூ. 39.

## தோ

தோகை. வி. 162. 23.

தோட்ட=[பகுதி. தோடு. வி. 82. (எ.) தோண்டின.]

தோய்தல்=கலத்தல். வி. 37.

தோரை=சரமணிக்கோர்வை. சூ. 91.

[redacted] = தோழமையுடையவள். சூ. 277. [வி. 96.] வி. 96. (ப.)

தோள்=புயத்தால்வருபெயர். சூ. 276.

தோற்றம்=உருவம், பார்வை. வி. 86.
நெடுந்தூரம் தோன்றுகின்ற உயரம். சூ. 28.

தோன்றல்=விளங்கல். சூ. 342. 387. பிறத்தல். வி. 61. ஓர் விகாரம்: மெய்யாயினும் உயிராயினும் சாரியையாயினும் உயிர்மெய்யாயினும் உண்டாதல். சூ. 154. வி. 20. இராசா. சூ. 276.

தோன்று எழுவாய்=முதலாம் வேற்றுமைத்தொகை. [வி. 91.]

## தௌ

தௌவை=தவ்வை. மூதேவி. வி. 317.

## ந

நகுதல்=சிரித்தல், நகைத்தல். வி. 76.

நகுதிர்=நகைத்தீர். வி. 76. [79.]

நகை=சிரிப்பு, நகைத்தல். வி. 78. [வி. 96].

நகைத்தல்=சிரித்தல்.
நக்கு. [நகு. வி. 82. (சு.)] சூ. 317.
நங்கை=பெண்ணிற்சிறந்தாள். [வி. 47.] சூ. 277.
நஞ்சு=விஷம். வி. 32.
நடித்தல்=கூத்தாடல். வி. 120.
நடுங்கல். சூ. 387.
நடுதல்=பயிர் ஆக்கல். வி. 82.
நடுநிலை=தராசுமுள்ளு ஒருபுறத்துஞ் சாயாமல் நடுவாக நிற்பது, அதுபோல, மாணுக்கன் அறிவுசிறிதாகில் பெரிதாகவும் பெரிதாகில் சிறிதாகவும் உணர்த்தப்புகாமையும், ஒருவனிடத்தில் விருப்பாகவும், ஒருவனிடத்தில் வெறுப்பாகவும், உணர்ந்தப்புகாமையுமாம். சூ. 29.
நடுவன்மை = நடுவு + அன்மை=நீதியல்லாதது. வி. 96.
நட்டல்=சிநேகஞ்செய்தல். வி. 33. 188. [நள். 76.]
நட்பு=சிநேகம். [நள் + பு. வி. 96.] வி. 33.
நணியது=சமீபமுள்ளது. வி. 40.
நண்ணல்=கிட்டல், உண்டாதல். வி. 89. சூ. 210.
நந்து=சங்கு. 378.
நம்பி=ஆணிற் சிறந்தவன். சூ. 276[illegible]. 74.]
நயத்தல்=விரும்புதல். வி. 33.
நயம்=நியாயம். தகுதி. சூ. 383.
நரகர்=நரகவாசிகள். சூ. 261. 381.
நலம். வி. 96.
நலிதலோசை=கலந்தவோசை. சூ. 88.
நலிதல் = வருந்திக்கூறுதல். சூ. 88.
நல்குதல்=அளித்தல். வி. 152. 72.
நல்லினம்=நல்லோர் உறவு. வி. 76.
நவின்றோர்க்கினிமை = படித்தவருக்கு இன்பந்தருதல். சூ. 13.
நவை=குற்றம். வி. 95.
நளன்=ஓரரசன்பெயர். வி. 93.
நறவம்=நறவு=நல்லவாசனை. வி. 63. வி. 79.
நனி=மிக. சூ. 86. 272. 388. பெரும்பால். சூ. 207. வி. 35.
நனை=அரும்பு. வி. 114.
நன் = நன்குக. சூ. 26. 96.
நன்காடு. சூ. 267. (நல்ல.)
நன்கு. வி. 96.
நன்மை. வி. 96.
நன்மொழிபுணர்த்தல்=நல்ல சொற்களைச் சேர்த்துவைத்தல். சூ. 13.
நன்றி=உபகாரம். வி. 95. 96.
நன்று=நன்மையானது. வி. 93. 33.

## நா

நா=நாக்கு. வி. 82. சூ. 74. 376.
நாகு=இளமை, இள மரம். சூ. 93. 94. 317.
நாடுதல்=தேடுதல். வி. 72.
நாட்டம்=கண். சூ. 376.
நாட்டல்=தாபித்தல். சூ. 11.
நாணுதல்=வெட்குதல். வி. 95.
நாதன்=ஆண்டவன். வி. 95.
நாமம்=படர்க்கைப்பெயர்ச்சொல். சூ. 125. பயம். வி. 157.
நாமுடி=நாக்குநுனி. 80.
நாயகம்=சிரேட்டம். வி. 152.
நாயகன்=ஆண்டவன். வி. 95.
நாலறிவுயிர்=தும்பிவண்டு முதலியவை. சூ. 380.
நாழி=ஓர்அளவு. 89.
நாள் = நட்சத்திரஇராசி. சூ. 276. நூர் வாய்பாடு. வி. 74.
நாற்கணம் = வன்கணம் மென்கணம் இடைக்கணம் உயிர்க்கணம், என்னும் நால்வகைக் கூட்டம்.
நாற்றம்=கந்தம். சூ. 386.
நான்=தன்மையொருமைப்பெயர். சூ. 294.
நான்முகன்=நான்கு முகங்களையுடைய அருகன். சூ. 56.
நான்மை=நான்கு.
நான்மொழி = பெயர் வினை இடை உரி என்னும் நான்குசொற்கள். வி. 43.

## நி

நி. வி. 123. (உ.)
நிகர்=நிகர்க்கின்ற; ஒத்த. சூ. 26. வி.
நிகர் (நிகிர)=ஒப்பு. வி. 109. 76. 95.
நிகர்த்தல். வி. 76.
நிகழ்பல்ல = நிகழ்காலமல்லாத இரண்டுகாலம். சூ. 245.
நிகழ்வு=நிகழ்காலம். சூ. 423.
நிதி=திரவியம். வி. 79.
நித்தியப்பொருள் = அழிவில்லாப்பொருள்.

நிமித்து=நிமித்தம்; காரணம். சூ. 49.
நிமிர்தல்=செருக்குதல். வி. 64.
நியதி=நியமம், நிச்சயம்.
நியதிப்பெயர்=நியமமுடையபெயர்.
நிரல்=முறை, வரிசை. வி. 194. சூ. 246.
நிரல்பட=வரிசைப்பட. சூ. 16.
நிரனிறை. சூ. 455.
நிரை=வரிசை. வி. 64.
நிரையசை. வி. 170.
நிர். வி. 166. 123. (உ.)
நிலம்=நாடு. சூ. 273.
நிலவுதல்=விளங்குதல். சூ. 427.
நிலன்=இடப்பெயர். சூ. 276. [நிலம். வி. 17.]
நிலை=இருத்தல். சூ. 456. வி. 61. நிலைமை. உறுதி. வாசல்நிலை. வி. 120.
நிலையியற்பொருள்=நிற்பனவாகிய அசரப்பொருள்.
நிழற்றல்=நிழலைத்தருதல். சூ. 258.
நிறம் = வெண்மை கருமை முதலிய வண்ணங்களால்வரும்பெயர். சூ. 276. வருணம். வி. 60.
நிறீஇ=நிறுத்தி. சூ. 194. [வி. 79. 86.]
நிறுத்தக்குறிப்பு = முற்றுச் சொல்லின் அடையாளம். வி. 165.
நிறுப்பு=நிலைநிறுத்தல். சூ. 11.
நிறுவுதல், நிறுத்தல்=ஸ்தாபித்தல். சிற. பா. 14. வி. 74.
நிறை=சால்பு. வி. 120. மனஅடக்கம். சூ. 384.
நிறைகோல்=துலாக்கோல். தராசு. சூ. 26.
நிற்ப=நிற்க. வி. 32. [86.]
நினைத்தல்=எண்ணல். கருதல். யோசித்தல். வி. 124.
நினைவு=எண்ணம்.
நின்=நீ எனபது திரிந்த நின். சூ. 218. வி. 73.
நின்றுபயனின்மை=சொல்நின்று, அதற்குப் பயனிலாதொழியச் சொல்லல். சூ. 12.

## நீ

நீ. வி. 73.
நீங்கல் = விட்டுநீங்குதல், பிரிவையுண்டாக்குந்தொழிலின்றிப் பிரிவைமட்டுந் தன்னிடத்திலுடைய பொருள். சூ. 299. 387.
நீடு=நெடுங்காலம், என்றைக்கும். 63. [வி. 120.]
நீட்டல்=நீட்டலளவை. சூ. 409. குற்றெழுத்தை நெட்டெழுத்தாக்கல். சூ. 155. வி. 41.
நீதி=நியாயம். வி. 95.
நீத்தம்=வெள்ளம். வி. 82.
நீத்தல்=துறக்கப்படுபொருள். சூ. 296.
நீத்து=நீக்கி. வி. 37. நீந்துவரும்நிலை. சூ. 454.
நீத்து=விட்டு. (தீ.) வி. 124.
நீயிர்=முன்னிலைப்பன்மைப்பெயர். சூ. 294.
நீர்=சலம். குணம். வி. 35. [நீர=குணத்தையுடையன. வி. 93.] முன்னிலைப்பன்மை. வி. 73.
நீலி=அரக்கி. சூ. 389.
நீல்=நீலம். சூ. 156. [வி. 41.]
நீவிர்=முன்னிலைப்பன்மைப்பெயர். சூ. 294.

## நு

நுகர்தல்=உண்ணல். வி. 81.
நுகர்வு=அனுபவித்தல். இன்பம். வி. 111.
நுட்பம்=பொருள்நுணுக்கம். சூ. 18.
நுணுகுதல்=நுட்பமாதல். வி. 87.
நுண்=நுட்பமான. [நுண்மை. வி. 121.]
நுதலிப்புகுதல்=இதனைச்சொல்லுவேன் என்றுசொல்லிப் புகுதல். சூ. 14.
நுதல்=நெற்றி. வி. 154.
நும். வி. 74.
நுவலல் = பாடஞ்சொல்லலின் வரலாறு. சூ. 3. சொல்லல். சூ. 390.
நுவல்வோன் = ஆசிரியனது வரலாறு. சூ. 3.
நுவற்சி=சொல். சூ. 390.

## நூ

நூலாசிரியன்=நூல்செய்தகர்த்தா.
நூலுரையாசிரியன்=நூலைக்கற்பிக்குமாசிரியன். சூ. 26.
நூல் = நூல்வரலாறு. சூ. 3. சாஸ்திரம். சூ. 24. எற்றுநூல். சூ. 25.
நூறுதல்=பொடியாக்குதல். சிற. பா. 12.
நூன்முகம் = முகவுரை. நூலுக்குமுகம் போற் சிறந்திருத்தல். சூ. 1.

## நெ

நெஞ்சம்=நெஞ்சு.மார்பு.மனம். அந்தக் கரணச்சாட்சி. வி. 40. 124.
நெடிய=நெடுமையான். வி. 121.
நெடிலளபெடை=நெட்டெழுத்தளபெடுத்தல்.
நெடில்=நெட்டெழுத்து. சூ. 65. 129. நெடுமை, தீர்க்கம். வி. 4.
நெடும். வி. 121.
நெட்டுயிர் = உயிர்நெடில். சூ. 126. [வி. 121.]
நெய்தல்=ஐந்திணையில் ஒன்று. சூ. 276. கடல்சார்ந்தஇடம். வி. 220.
நெய்யரி=பன்னாடை. சூ. 38.
(நெய்யை உருக்கி வடிகட்டும்பொருட்டு இதன் மேல் விடும்போது சாரமான நெய்யை ஒழுகவிட்டுக் கசட்டைப்பற்றிக்கொள்ளும்.)
நெருநல்=நேற்று. வி. 25.
நெறி=வழி. வி. 95. முறை. சூ. 194. 199. கடன். சூ. 253.

## நே

நேரசை. வி. 169.
நேர்=நேர. வி. 109. உடன்படல். சூ. 427. சமமான. சூ. 16.
நேர்ச்சி=நட்புப்பொருள். சூ. 298.
நேர்தல்=பொருந்தல். சூ. 361.
நேர்ப=தழுவிக்கொள்வர் புலவர். சூ. 427.

## நை

நைதல்=பலவீனம். தளர்ச்சி. வி. 112. தன்மாத்திரையிற் குறுகுதல். சூ. 95. 120.

## நொ

நொடி=ஒருமாத்திரையினளவு.சூ. 100. வி. 16. சொல். சூ. 390.
நொடிதல்=சொல்லல். சூ. 390.
நொய்மை = கனமில்லாதது. இலேசு. [எட்டேரில் ஒன்று. சூ. 386.]
நொய்ய=நொய்மையானவை. வி. 125. [93.]

## நோ

நோகுதல் = வருத்தமடைதல், வி. 82.
நோக்கு=கண். வி. 37.
நோக்குதல்=பார்க்குதல். வி. 37.
நோற்றல்=பொறுத்தல். வி. 27.

## ப

ப=பல்லோர்படர்க்கை விகுதி. சூ. 327.
பகருதல்=கற்பித்தல். சூ. 39. சொல்லல். சூ. 390.
பஃறொடை. யாப். 60.
பகர்ச்சி=சொல். சூ. 390.
பகழி=கணை. அம்பு. சூ. 389.
பகாப்பதம் = பிரிக்கப்படாத பதம். சூ. 128. வி. 122.
பகுதி=முதனிலை. சூ. 133. பிரகிருதி என்னும் ஆரியமொழித்திரிவு, அது தன்னியல்பினால் நிற்கையால் பகுதியாம். சூ. 133. 134.
பகுத்தல்=பிரித்தல். சூ. 281.
பகுத்துணர்தல்=ஆராய்ந்தறிதல்.
பகுபத உறுப்பு = பகுக்கப்படும் பதத்தின் அவயவம். வி. 123.
பகுபதம் = பிரிக்கப்படும் பதம். சூ. 128. 132. வி. 123.
பகை=பகைதொடர்பொருள். சூ. 298.
பக்கம்=விதம். வகை. பட்சம். வி. 32.
பசு=பசும். பசுமையான. 70. 121. (பச்சு, பாசு, பைம்.)
பசை=ஆசை. வி. ୬5. 11.
பச்சரிசி. வி. 121.
பஞ்சி=பஞ்சானது. சூ. 24.
படர்க்கை=படர்க்கையிடம். சூ. 266. 324. பேசுவோனையும் அவன்முன்னிற் போனையும் அல்லாத மற்றப்பொருளைக்குறிக்குஞ் சொல். சூ. 285.
படர்க்கைமுப்பெயர்=படர்க்கையிடத்தையுடைய உயர்திணைப்பெயர், அஃறிணைப்பெயர், விரவுப்பெயர் என்கிற மூவகைப்பெயர்கள். சூ. 435.
படர்க்கையோர் = படர்க்கையிடத்தோரை. சூ. 303.
படர்க்கைவினைமுற்று = படர்க்கைவினைமுற்றுச்சொல். சூ. 295.
படர்ச்சி=நடை. சூ. 46.
படர்தல்=ஏகுதல. சூ. 272. பரவிப்போகுதல். வி. 88.
படலம்=அதிகாரம். சூ. 4. பலபொருள் கொண்டது. சூ. 17.
படாகை=விருது. சூ. 91.
படாஅன் = உடன்படான், கலவான். சூ. 11.
படி,படிக்கு,படியாக,படியால். வி.164.

படு. வி. 105. 124.
படுதொகை. வி. 157. (w.)
படுத்தல் = தாழ்த்திக்கூறுதல். சூ. 88.
ஆக்குதல். வி. 124.
படுத்துதல். வி. 124.
படைக்கலம்=ஆயுதங்கள். வி. 84.
பணி=தொழில். வி. 96.
பணிதல்=வணக்கம். வி. 94.
பணித்தல் = சொல்லுதல், உரைத்தல். சூ. 431. வி. 95. 133.
பணிலம்=சங்கு. வி. 81. 137.
பணை=பெருமை. வி. 27.
வயல். வி. 81.
பணைத்தல்=பெருத்தல். வி. 32.
பண்டமாற்று=விலைகூறுதல். சூ. 101.
பண்டம்=பதார்த்தம். வி. 208.
பண்டு, பண்டை=பழமை. வி. 26.
பண்பிற்பகாநிலைப்பதம். சூ. 135.

(செம்மை முதலியவை சொல்நிலையாற்பகுபதம்; ஆயினும் பொருள்நிலையாற் பகாப்பதம். இவை மை விகுதி இன்றி நடக்காததினால் இவ்விகுதியையும் பகுதியாக வைக்கும்.)

பண்பு = குணத்தோடு குணிக்குண்டாகும் ஒற்றுமைநயம், வண்ணம், வடிவு, அளவு, சுவை முதலியவைப்பற்றி வருவது. சூ. 406. குணம். வி. 76. 143.

(ஐம்பொறிகளால் உணரப்படுவது.)

பண்புத்தற்கிழமை = குண சம்பந்தப் பொருள்.
பண்புத்தொகை = "ஆகிய" முதலிய பண்புருபு தொக்கிநிற்பவை. சூ. 152. 406. வி. 154.
பண்புருபு, "ஆகிய." சூ. 406.
பண்புவமை. வி. 204.
பதடி=பதர். வி. 92. சூ. 338.
பதப்புணர்ச்சி=சொல்லொடுசொல் கூடுதல்.
பதம். சூ. 253. 254. 258. எழுத்தாலாகிய பதத்திலக்கணம். சூ. 57.
எழுத்துகள் பிறபொருளைக்காட்டுஞ் சொல். சூ. 218 பாதம். வி. 79. 81.
பதவுரை = சொற்பொருள். பதப்பொருள். சூ. 21. 22.
பதி=இடம். வி. 41.
பதிகம் = தொகுத்துச் சொல்லுதல். சூ. 1.

"பதிகச் சிவலி பல்வகைப் பொருளைத் தொகுதியாகச் சொல்லுத லுகேர."

பத்தினீற்றுயிர்மெய்=பத்தென்னும்எண்ணின் நிலைமொழியினது இற்றிலுள்ள துகர உயிர்மெய்யெழுத்து. சூ. 198.
பந்தனம்=கட்டுதல். வி. 197. 201.
பந்தி=ஒழுங்கு. வி. 61.
பயத்தல்=விளைதல். வி. 145. பயன். வி. 76.
உண்டாக்கல். வி. 95.
பயம், பயன்=பலன். சூ. 10. வி. 76. 112.
பயனிலை=பொருள்நிலை. சூ. 295. வி. 129.
பயனுரை = இப்படிச் சொன்னதினாலே வந்தபயன் இதுவெனக்காட்டி எழுதுமுரை. சூ. 21.
பயனுவமை. வி. 204.
பயிறல்=சொல்லுதல். சூ. 41.
பரண்=பரணென்னும் பெயர். சூ. 211. (காவற்பரண்.)
பரதன்=பரதராசன். வி. 89.
பரத்தல்=விரித்தல். சூ. 372.
பரத்தை=வேசி. வி. 63.
பரவை=கடல். வி. 37. [பரவுதல். வி. 96.]
பரா. வி. 123. (உ.)
பரிசம்=ஊறு. சூ. 386.

(வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, நொய்மை, சீர்மை, சருச்சரை, பருபருக்கை ஆக: எட்டு.)

பரிதல்=விரும்பல். வி. 86.
பரிதி=சூரியன். சிற. பா. 3.
பரியது=பெரிது. [பரி. வி. 93.] வி. 121.
பருகுதல்=உண்ணுதல். சூ. 40.
பருத்திக்குண்டிகை = பருத்தியடைத்த கிரகம். சூ. 34.
பருந்தின் வீழ்வு=தலைகீழாக விழுகின்ற பருந்தின் வீழ்ச்சி. சூ. 17.
பருபருக்கை=திண்மை. பருத்துக்கொள்ளல். [எட்டிலொன்று. சூ. 586.]
பருவமுயற்சி = காலத்தோடு பொருந்தச் செய்யுமுயற்சி. சூ. 27.
பருவரல்=வருந்தல். சூ. 388.
பல=பலவின்பாற்பெயர். சூ. 240.
பலபொருளொருசொல் = பலபொருளைத் தருகிற ஒருசொல். சூ. 431.
பலர்=பலர்பாற்பெயர். சூ. 240.
பலர்பாற்சொல் = பலரைக்குறிக்குஞ் சொல்.
பலவகைத்தாது=தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீர் என்கிற ஏழுவகைத் தாதுக்கள். சூ. 268.

பிண்டி=அசோகுமரம். வி. 63.
பித்தி=பித்தத்தையுடையவன். வி. 152. [96. 64.]
பிர. வி. 123. (உ.)
பிரதி. வி. 123. (உ.)
பிரிநிலை=இடைப்பொருளுள் ஒன்று, பிரிக்கும்படி நிற்பது. சூ. 354.
(உ-ம்.) சாத்தனே கொண்டான் எ-ல், கொள்ளுதல் வினையாற் சாத்தனின் னொழிந்த பிறர் எல்லாரும் பிரிக்கப்பட்டார்.
பிரிப்பு=பிரிநிலை. சூ. 353. 351. 355.
பிழைபாடு=தப்பு. சூ. 42.
பிளிறல்=ஒலித்தல். சூ. 391.
பிற=சொல்லாதொழிந்தவை. சூ. 451.
பிறநூல்=ஆசிரியவசனம். சூ. 23.
பிறப்பு=எழுத்துகளின் பிறப்பிலக்கணம். சூ. 57. 74. வி. 18. (J.) ஓர் வாய்பாடு. வி. 173.
பிறமுதல்=ஒன்றை மற்றொன்றாகச்சொல்லப்படுதல். 425.
பிறர்தம் மதம் மேற்கொண்டு களைவு = பிறர்மதத்தை அங்கிகரித்துத் தள்ளிவிடுதல். சூ. 11.
பிறர்நூற்குற்றங்காட்டல் = பிறருடைய நூலினுள்ள குற்றங்களை எடுத்துக்காட்டுதல். சூ. 11.
பிறர்நூன்முடிந்ததுதானுடன்படுதல் = பிறநூலிலே சொல்லப்பட்ட விகுதிகளுக்குத் தான் சம்மதப்படுதல். சூ. 14.
பிறவி=பிறப்பு. வி. 95. 96.
பிறவிடைநிலை=வேறு இடைநிலை, அதாவது விகாரப்படல்.
பிறவினை=பிற கர்த்தாவின்றொழில். வி. 103.
பிறழ்தல்=மயங்குதல். சூ. 451. 32.
பிறன்கோட்கூறல்=தன்னூலின் பிறனது கோட்பாட்டைச் சொல்லுதல். சூ.14.
பிறிதின்கிழமை=தன்னில்வேறாயது. சூ. 306. வி. 62.
பிறிது=மற்றையது. பிறர்மதம். சூ. ?1. [பிற. வி. 93.]
பிறிதுவிதி=எய்தியது விலக்கும்விதி.
பிறிதொடுபடா அன்றன்மதங்கொளல்= பிறர் மதத்தோடு கலவாதவனுகித்தன் மதத்தைத் தான் ஆண்டுகொள்வது. சூ. 11.
பின்=எழன்உருபு. வி. 63.
பின்வருநிலைஅணி. வி. 207.
பின்னது நிறுத்தல்=முறை பிறழாமல்முன்வைக்கவேண்டியதைப் பின்வைத்தல். சூ. 14.
பின்னவன்=மகன். வி. 93.
பின்ஞேன்=வழிநூல்செய்வோன். சூ.7.

## பீ

பீ. சூ. 177.
பீலி = மயிற்றோகை. வி. 208.
பீழை=துன்பம்.

## பு

புகறல்=புகலல். சூ. 390. [புகல்+தல். வி. 38.]
புகுதல்=உட்பிரவேசித்தல். வி. 72.
புடை=சார்பு, எல்லை. சூ. 8. எழன் உருபு. வி. 63.
புடைநூல்=சார்புநூல். சூ. 8.
புடைபெயர்ச்சி=அசைவு.
புணரி=கடல். வி. 27. 86. [வி. 96.]
புணரியல்=பதங்கள் ஒன்றோடொன்று புணரும் ஆறு உணர்த்துவது. [வி. 153.]
புணர்ச்சி=புணர்ப்பு. சந்தி. சூ. 151. [வி. 96.] விகாரம் இயல்பு என இருவகை. வி. 19. விகுதி பதம் உருபு என மூன்று வகையும் ஆம்.
புணர்தல்=கூடுதல். சூ. 90.
புணை=மரக்கலம். வி. 96.
புண்டரீகம்=தாமரை. வி. 79.
புதியனபுகுதல் = முற்காலத்தில் இல்லன சிலபிற்காலத்திலக்கணமாதல். சூ. 462.
புதுமை. சூ. 389.
புரத்தல்=பாதுகாத்தல். வி. 79.
புரத்தின்=உடம்பினுள்ளிருக்கின்ற. சூ. 25. (புரம்=சரீரம்.)
புரவி=குதிரை. வி. 153.
புரிதல்=செய்தல். வி. 157.
புரை=புரைய. வி. 109.
புரைதல்=போலுதல். சூ. 156.
புலப்படுத்தல் = உணரச்செய்தல். வி. 210.
புலமை=கல்வி. சூ. 28.
புலம்பல்=அழுதல். சூ. 313.
புலவன்=அறிவுடையோன். சூ. 276. [வி. 93].

புலன்,புலம்=அறிவு. வி. 156. திசை. இடம். வயல். ஐம்புலன். வி. 34. 218. 376.
புளுதம். வி. 14.
புல்லல் = பொருந்தல். கொண்டுமுடிதல். சூ. 246. 319.
புல்விதம்=புறவிதழ். வி. 60.
புல்லியன் = புன்மையுடையோன். வி. 117. 93.
புவி=பூமி. வி. 70.
புழுங்கல்=புழுங்கற்கறி, சோறு, பயறு. சூ. 229.
புள்=பறவை. வி. 17. சூ. 381.
புள்ளி = மெய்யெழுத்திற்குரிய புள்ளி. சூ. 89. ஒற்றெழுத்து.
புறச்சுட்டு. வி. 5.
புறத்திலக்கணம்=எழுத்தாலாகியபதம், பிறபொருளைத் தருகின்றமையால் புறத்திலக்கணம். சூ. 57.
புறப்பாட்டெல்லை = வேறுமொழியினிடம்.
புறப்பொருள். சூ. 220.
புறமொழி = புறத்துவருகிறசொல். சூ. 411. புறப்பொருள். சூ. 220.
புறம், புறன்=இடம். பக்கம். புறத்தால் வருபெயர். சூ. 276. ஏழன் உருபு. வி. 63.
புறவுரை=நூல்சொல்லியபொருள் அல்லாதவைகளைச் சொல்லுதல். சூ. 1.
புறனடை, புறநடை=[புறன்+நடை. சூ. 210. அல்லது புறன் + அடை. சூ. 204. அல்லது, புறம் + நடை. சூ. 219.] வேறு விதமான நடக்கை, அல்லது புறத்து அடையாய் வந்தது. சூ. 20.
புறன்அழிதல்=மற்றவரை நிந்தித்துப்பேசுதல். வி. 78.
புற்கம்=சிறுமை. வி. 140.
புனல்=கடல். வி. 64.
புனனாடு=புனல்நாடு. தண்ணீருள்ளதேச
புனிதம்=பரிசுத்தம்.
புனை=அலங்கரிக்கப்பட்ட. சூ. 56. [வி. 153.]
புனைந்துரை=அலங்கரித்துச்சொல்லல். சூ. 1.
புன்மை=கீழ்மை. வி. 157. [புல்+மை. வி. 96.]
சம். தஞ்சாவூர்சீமை. தமிழநாடுகளில் ஒன்று. சூ. 273

## பூ

பூ. சூ. 30.
பூகம்=கமுகமரம். வி. 110.
பூங்குழல். வி. 157.
பூசல். வி. 96. (o.)
பூட்டுவில். சூ. 456. பூட்டுவிற்பொருள்கோள்.
பூண்=ஆபரணம். வி. 125.
பூத்தல்=மலர்தல். வி. 82.
பூநகை=மொக்குள். (பூ+நகை.) வி.114.
பூந்தடம். சூ. 200.
பூப்பெயர் = பூவென்னும் பல்பொருளொருசொல். சூ. 200.
பூழி=தமிழ் நாடுகளில் ஒன்று. சூ. 273.
பூழ்=காடை. வி. 30.

## பெ

பெண்டீர்=மனைவி. வி. 62.
பெண்ணெழுத்து=நெடில்.
பெண்பாற்பெயர் = உயர்திணை பெண்பால்பெயர். சூ. 277. வி. 52. (s.)
பெண்மை = பெண்தன்மை. சூ. 264. பெண்மைமுதற்பெயர். பெண்மைச்சினைப்பெயர். சூ. 283.
பெண்மைச்சினைமுதற்பெயர். சூ. 283.
பெண்மைமுறைப்பெயர். சூ. 283.
பெயரியல் = பெயர்ச் சொற்பொருளை விளக்குதலால் பெயரியல். [சூ. 258–319.]
பெயரினெச்சம்=அகரவீற்றுப் பெயர்க்குறைவு. சூ. 167.
பெயரெச்சம் = பெயரெச்ச வினைச்சொல். சூ. 322.
பெயரைக்கொண்டு முடிபவை. சூ. 340. வி. 143. 87.
பெயர்எஞ்சு கிளவி.
"காலமும் வினையுந் தோன்றிப் பாலேன்றுத பெயர்கொள் ளும்மது பெயர் எச் சம்மே." (அகத்.)
பெயர்ச்செவ்வெண் = பெயர்களிடத்தேவரும் செவ்விய எண்ணிடச்சொல். சூ. 360.
பெயர்=எழுத்துகளின் பெயரிலிலக்கணம். சூ. 57.
பெயர்ப்ப[illegible]பதம். சூ. 131.
பெயர்த்தொகை = இரண்டு பெயர்கள் சேர்ந்து நிற்பவை. சூ. 152. பெயரின் கண்ணே தொக்கதொகை.

பெயர்ப்பகுபதம் = எட்டுவேற்றுமைக ளிலொன்றையேற்றுவருவது.

பெய்தல்=ஏற்றுதல். வி. 208. திணித் தல், போடுதல், பொழிதல். வி. 95.

பெரும்=பெரிய. பேர். வி. 121.

பெற்றம்=பசு. சூ. 273.

பெற்றி=குணம். தன்மை. சூ. 280.

## பே

பேகன்=தவளை ஆண். சூ. 91.

பேடு=அலி. சூ. 264.

பேணுதல்=காப்பாற்றுதல். வி. 30.

பேதை = பேதைமையுடையவள். பெண். சூ. 388.

பேதைப்படுக்கல்=பேதைமை ஆக்கல். வி. 124.

பேதைமை. வி. 94. 96.

பேர்=பெரிய, பெரும். வி. 121. 219.

பேர்தல் = போகல். வி. 82. பேர்ந்து= போய்.

பேறு=பெறுதல். வி. 89. 96.

## பை

பைம்=பசுமையான. வி. 93. 121.

## பொ

பொங்கு=பொங்குதல். வி. 82.

பொச்சாப்பு=மறப்பு. சூ. 384.

பொதிதல்=மூடுதல். சூ. 290.

பொதியில்=பொதுவில். சூ. 239.

பொது=பலவற்றினையேற்பது. சூ. 275.

பொதுச்சாரியை=விகுதி, பதம், உருபு என்கிறமூன்று புணர்ச்சிகளினுந் தனி மொழிகளினும் வருதல். சூ. 244.

பொதுச்சீர். வி. 176.

பொதுப்படக்கூறல் = பொதுவாகச் சொல்லல்.

பொதுப்பெயர்=இருதிணைக்கும் உரிய பொதுப்பெயர். சூ. 282. 159. விரவுபெயர்.

ஓர்இனத்துக்கெல்லாம்உரியது. வி. 48.

பொதுமை=பொதுத்தன்மை. சூ. 400.

பொதுமொழி=ஒருகால் ஒருபொருளை யும் ஒருகால் பலபொருளையுந் தருகிற பொதுச்சொல். சூ. [illegible]9.

பலபொருள்களை புணர்த்தும் பொ துச்சொல். சூ. 17.

பொதும்பர்=சோலை. வி. 63.

பொதுவியல்=பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொற்களின் ஒழிபையும் பொதுமையையும் உணர்த்தி நிற்றல். [சூ. 393—460.]

பொதுவெழுத்து = ஆரியத்திற்குந் தமிழுக்கும் பொதுவெழுத்து. சூ. 274.

பொதுளல் = நெருங்கல். தழைத்தல். சூ. 368.

பொம்மென = ஒலிக்குறிப்பு. வி. 114.

பொய்கை=குளம். வி. 110.

பொய்த்தல்=பொய்சொல்லல். வி. 40.

பொரிதல்=பொரிந்திடுதல். வி. 41.

பொருட்டு=நிமித்தகாரணப் பொருள். சூ. 298. வி. 60.

பொருட்டுப்பொருள். வி. 60. 140. 164.

பொருட்புணர்ச்சி = பதத்தோடுபதஞ் சேருஞ்சேர்க்கை.

பொருணிலை = விரைவு, வெகுளி, உவகை, அச்சம், அவலம் முதலாகிய பொருணிலைகள். சூ. 436.

பொருண்மை = பொருள்கொள்ளுந் தன்மை. சூ. 427. [வி. 94.]

பொருதல்=சண்டைசெய்தல். வி. 27.

பொருநர்=கூத்தாடிகள். [வி. 95.]

பொருநுதல்=ஒத்தல். ஒருவர் மற்றொருவர் போல வேடங்கொள்ளும் பொருநர் தொழில். சூ. 208.

பொருந்தல்=ஒன்றுதல். அமைதல்.

பொருவு=உவமை. ஒப்பு. வி. 153.

பொருள=பொருளன=பொருளையுடையன. வி. 34. 93. சூ. 272.

பொருளணி. வி. 202.

பொருளாகுபெயர். வி. 162.

பொருளாசிரியர் = நூலுக்கு அர்த்தஞ் செய்பவன்.

பொருள்=பெயர்ப்பொருள். சூ. 291. பொருட்பெயர். 276. அர்த்தம். சூ. 10. வி. 214. 217.

பொருள்ஐந்து=எழுத்து, சொல், பொருள், அணி, யாப்பு. [சிற. பா. 10.]

பொருள்கோள் = அந்வயம், சொற்கள் பொருளைக்கொள்ளுங்குணம். சூ. 452. 460. [வி. 96.]

பொருள்மயக்கம்=பிறிதொன்றன் பொருளொடு தன்பொருள் விடாது தலைமயங்குதல். சூ. 317.

(உ-ம்.) கோட்டின்கண் குறைத்தான்= கோட்டைக் குறைத்தான்.
பொலி=தூற்றுநெல்லின் குப்பை. சூ. 316.
பொழிப்பு. யாப். 41.
பொழிப்புரை=தொகுத்துரை. சூ. 21.
பொழில்=சோலை. வி. 64.
பொழுது=காலம். சூ. 416.
பொறி=ஐம்பொறிகள். வி. 120. சூ. 376.
பொறை=பாரம். வி. 96. பொறுமை. சூ. 27. 388.
பொற்பு=அழகு. வி. 93.
பொன்றல்=சாதல். வி. 82.

## போ

போ. வி. 81.
போக்கல்=போகவிடுதல். வி. 103.
போது=பூ. அலர். வி. 110. சூ. 368. பொழுது, வினைப்பகுதி. வி. 125.
போர் = நெற்போர். யுத்தம். வி. 23. [பொரு. வி. 96.]
போர்த்தல்=மூடுதல். வி. 29.
போலி. வி.17. சூ.57.122.123.239.267.
முதற்போலி = முதலிலே ஓரெழுத்துக்கு மற்றோரெழுத்து வந்துமாறி ஒத்துநடப்பது. சூ. 123.
இடைப்போலி = நடுவிலேமற்றோரெழுத்துவந்துஒத்துநடப்பது. சூ.123. 124.
கடைப்போலி=கடையிலேமற்றோரெழுத்துவந்துஒத்துநடப்பது. சூ.122.
போலுதல்=ஒத்தல். வி. 76.
போல், போல. வி. 109.
போற்றுதல்=காத்துக்கொள்ளுதல், எண்ணுதல். சூ. 9. வி. 35.

## ம

மஃகான்=மகரக்குறுக்கம். சூ. 60. 61. 99. வி. 15. (L.)
மக=குழந்தை. வி. 23.
மகடூஉ=பெண். சூ. 277.
மகரக்குறுக்கம்=தன்மாத்திரையிற்குறைந்த மகரம். சூ. 96. வி. 15. (L.)
மகிதலம்=பூமி. வி. 64.
மகிழ்=ஓர்மரம். வி. 152.
மகிழ்தல்=சந்தோஷித்தல். வி. 85.
மங்கலம்=சுபமாகிய சொற்களைச் சொல்லுதல். சூ. 267.
மச்சை=மூளை. சூ. 268.
மஞ்ஞை=மயில். சூ. 454.
மடக்கு=மடக்கணி. வி. 197.
மடந்தை=பெண். சூ. 277.
மடல்=இலை. வி. 152.
மடற்பனை=மடற்கொண்டபனை. சூ. 33.
மடி=சோம்பல். வி. 95.
மண்ணுங்கட்டி. வி. 124. (S.)
மதம்=மனத்தின்கொள்கை. சூ. 11.
மதி=புத்தி. வி. 125. மாதம். சூ. 276.= திங்கள். வி. 157.
இடைச்சொல். சூ. 372. 444.
மதியம்=சந்திரன். வி. 63.
மது=தேன். வி. 79.
மந்தி=குரங்கு. வி. 389.
மயக்கம்=இணக்கம். கூடுங்கூட்டம். சூ. 110. 113.
மயங்கல்=கூடல். சூ. 115.
வரம்புகடந்து வருதல். சூ. 444.
இணங்குதல்.
மயங்கவைத்தல் = இதுவோ அதுவோ எனத் துணியப்படாமற் சொல்லல். சூ. 12.
மரபு=தன்மை. சூ. 7. பழமை. சூ. 275. (ஆக்கப்பாடின்றி பழைமையாக இருப்பது.) வழி. சூ. 416. 429. வி. 163.
மரப்பெயர்கள். வி. 161.
மரியாதைப்பன்மை. வி. 138. சூ. 420.
மருங்கு=இடம். சூ. 450.
மருதம்=ஐந்திணையில் ஒன்று. சூ. 276. வயலும்வயல்சார்ந்தஇடமும். வி. 220.
மருத்து. வி. 26.
மருவுதல்=வருதல். சூ. 174. தழுவுதல். வி. 133.
மருளல்=மயங்குதல். வி. 113.
மருள்=மயக்கம். வி. 39.
மரூஉ = மரூஉமொழி. இலக்கணமில்லாமற் சொல்லைக்குறைத்துப் பெரியோரால் வழங்குஞ்சொல். சூ. 239. (மருவுதல்.)
◊ ஒருவர் செய்யவேண்டாது தானே நிரந்து நிறைந்தும் சிறப்பொரு செய்கை.
மரை=தாமரை. சூ. 156. வி. 42.
மலங்கு=விலாங்கு. வி. 152.
மலர்=அலர். பூ. ஒருவாய்பாடு. வி. 173.
மலாடு = மலைநாடு [மலையமாநாடு. சூ. 239.] மலையாளம். தமிழ்நாடுகளில் ஒன்று. சூ. வி. 3.

மலி=நிறைந்த. சூ. 56. [வி. 153.]
மல்குதல்=நிறைதல். சிற. பா. 1.
மழ்லல்=செழிப்பு. வி. 119.
மறம்=வறுமை. வி. 60. வீரம். சூ. 384.
மறவன் = பாலைநிலத்தான். படைவீரன். சூ. 276.
மறவி=மறந்துசெய்யுங்குற்றம். சூ. 384.
மறித்தல்=தடுத்தல். வி. 79.
மறிநிலை. வி. 198. [மறிதல். வி. 153.]
மறுகுதல்=மயங்கல். வி. 133.
மறுதலை=எதிரி. சூ. 53.
மறுத்தல்=நீக்கல். இல்லையெனல். வி. 81. 209.
மறை=எதிர்மறுத்தல். சூ. 427. இரகசியம். வி. 109.
மறைதல். சூ. 387.
மற்று=இடைச்சொல். சூ. 365.
மற்றையது. சூ. 366.
மற்றொன்றுவிரித்தல் = சொல்லத் தொடங்கியது சிறுக மற்றொன்றை இடையிலே விரித்துச்சொல்லுதல். சூ. 12.
மனக்கோட்டம்=மனக்கோணல். சூ.25.
மனை=வீடு. வி. 125.
மனையாட்டி=மனைவி. சூ. 298. [மனை+ ஆள + தி. வி. 93.]
மன்=பெரும்பான்மை. சூ. 165. மிகுதி. சூ. 252. 184. 304.
(சிறுபான்மை ஒவ்வாத.)
இடைச்சொல். சூ. 364.
மன்மகன்=அரசனுடைய குமாரன். சூ. 37.
மன்றல்=கலியாணம். சூ. 389.
மன்னுடைமன்றம்=இராசசபை. சூ.53.
மன்னுதல்=நிலைபெறுதல். சூ.53. வி.86.
மன்றே=அசைநிலை. வி. 94.

## மா

மா=குதிரை. வி. 65. இடைச்சொல். சூ. 371. பெரிய.
மாக்கள். வி. 69.
மாசு=குற்றம். வி. 39.
மாடம்=மாளிகை. சூ.55. வி.63.
மாடா=மாடனே. சூ. 158.
மாடு=மாட்டு. வி. 63.
மாட்சி=அழகு. பெருமை. சூ.4. 13. 26. [வி. 96.]
மாட்டு. வி. 125.
மாட்டெறிந்தொழுகல்=இது இதற்கும் ஆம் என மாட்டுதல். இதுவும் அதுவென எடுத்தெறிந்து போதல். சூ.14.
மாண்=மாட்சிமை. வி. 156.
மாண்பு. வி. 96.
மாதர்=பெண்டிர். வி. 114.
மாதவி=வசந்தகாலமல்லிகை. வி. 110.
மாது=பெண். வி. 277.
மாதோ=அசைநிலை. வி. 81. 116.
மாத்திரை=அளவு. மிதம். மட்டு. வரை. எழுத்தின் அளவிலக்கணம். சூ. 57. 99. 100. வி. 16.
மாந்தர்=மனிதர். வி. 5.
மாயம்=மாய்கை. வி. 120.
மாய்தல்=கெடுதல். சூ. 229.
மாய்த்தல்=கெடுத்தல்.
மாரி=மழை, மேகம். வி. 70. 95.
மார், உயர்திணைப் பன்மைப் படர்க்கை விகுதி. சூ. 327.
மார்பு=நெஞ்சத்தால் வருபெயர். சூ. 276.
மாலை=பலவற்றால் தொடுத்ததொடை. வி. 212.
மாள=இடைச்சொல். சூ. 375.
மாளுதல்=இறத்தல். வி. 81.
மாறுகொளக்கூறல் = முன் சொன்னதுக்குப் பின்சொல்லுவது விரோதப்படச் சொல்லல். சூ. 12.
மாறுகோள்=விரோதமாகக் கொள்ளல். சூ. 11.
மாறுதல்=மயங்குதல். சூ. 121.
மாறுபடு புகழணி. வி. 210.
மாற்றம்=சொல். சூ. 390.
மாற்றான்=சத்துரு. வி. 23.
மான. வி. 109.
மானல்=ஒத்தல். சூ. 223.
மான்=மிருகத்தின் பொதுப்பெயர். வி. 157.

## மி

மிகல்=அதிகரித்தல். சூ. 170. 178. 388.
மிகுதி=மிகுதிப்பொருள். சூ. 364. வீண் பெருமை. வி. 23. பெருமை. வி. 109. சூ. 389.
மிகைபடக்கூறல் = அதிகப்படச் சொல்லல். சூ. 12.
மிகைபொற்றுமைஉருவகவணி. வி. 205.
மிக்குமுடிதல். சூ. 158. 92.

மிக்கோன்=உயர்ந்தவன். சூ. 448.
மிசை=மேல். சூ. 90. 96. 149. வி. 63. 162.
[மிசைத்தே=மிசை+த்து+ஏ. வி.93. 111.]
மிடறு=கண்டம். சூ. 75.
மிதிலை=ஓர்தேசம். வி. 81.
மியா = முன்னிலை இடைச்சொல். சூ. 171.
அசைச்சொல். சூ. 93. 372.
மிழற்றல்=பாடுதல். வி. 81.
மிளிர்தல்=கதிர்வீசுதல். வி. 31.
மின்=மின்னல். சூ. 217.
பன்மை முன்னிலை ஏவல் வினைமுற்று விகுதி. சூ. 337.

## மீ

மீ=மேல். சூ. 81. 178.
மீகண்=கண்ணினது மேலிடம். சூ. 178. (இலக்கணப்போலி.)
மீக்கூற்று = புகழ்மேலாகியசொல். சூ. 178.
மீந்தோல்=மேற்றோல். சூ. 178. [வி. 154.]
மீளுதல்=திரும்பிப்போதல். வி. 82.

## மு

முகத்தல் = முகத்தலளவை. வி. 409. மொண்டுகொள்ளல். வி. 89.
முகத்தால்=உறுப்புகளால். சூ. 54.
முகவுரை=நூலுக்கு முகம்போலச் சிறந்திருப்பது. முன்னுரைக்கப்படுவது. சூ. 1.
முகில்=மேகம். வி. 63.
முக்காலம்=இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம் என மூன்றுநேரம். வி. 78. சூ. 423.
முக்குடை=பொன் மணிமுத்து இவைகளாலாகிய குடை. சூ. 258. 343.
முக்கூற்று=ஒருவன், ஒருத்தி, ஒன்று என்கிற மூன்று பால்கள். சூ. 331.
முச்சகம்=மூன்று உலகம். சூ. 258.
முச்சுட்டு=அ, இ, உ என்னும் மூன்று சுட்டிடைச்சொல். சூ. 163.
முடத்தெங்கு = முடங்கியதெங்கு. 35. சூ.
முடிதல்=சாதல். வி. 103.
முடித்துக்காட்டல் = தான் சொல்லிய இலக்கணவிதிகள் இருக்கும்படி இலக்கியங்களை முடித்துக்காட்டல். சூ. 14.
முடிந்தது முடித்தல்=சொல்லி முடிந்ததைத் தொகுத்துமுடித்தல். சூ. 14.
முடிபு=சொல் பொருள் முடிவு. சூ. 7.
முடிவிடங்கூறல்=தான் சொல்லும் இலக்கணத்திற்கு இலக்கியந் தோன்றும் இடத்தைச்சொல்லுதல். சூ. 14.
முடை=கந்தம். வாசனை. வி. 93.
முதலெழுத்து = சார்பெழுத்துக்குக் காரணமான தன்மையானவெழுத்து. சூ. 71.
முதல, முதற்று. வி. 93.
முதல்=ஆதி. சூ. 91. 95. 58. ஏழன் உருபு. வி. 63.
அடைமொழிகளைக்கொள்ளும்பெயர். வி. 444. 282. 283.
முதல்வினை=கர்த்தாவின்றொழில். சூ. 345.
முதற்கருவி = செயப்படு பொருளோடொற்றுமையுடையது.
முதற்காரணம்=ஆதிகாரணம். சூ. 58.
முதற்குறிப்பு=ஒருபாட்டிலே முதல் நிற்குஞ் சொல்லைமாத்திரங் குறித்ததும், ஒருசொல்லில் முதல்நிற்கும் எழுத்தைமாத்திரங் குறித்ததும். சூ. 269.
முதற்குறை. வி. 41.
முதற்பெயர் = முதலைப்பற்றிவரும் பெயர். சூ. 282.
முதற்பொருள்=ஆதிகாரணப்பொருள்.
முதனுவிளிம்பு=அடிநாவின் ஓரம். சூ. 77.
முதனிலை=[illegible] மொழிக்கு முன்னிற்கும் இலக்கணம். சூ. 57. பகுதி. வி. 71.
முதனூல்=ஆதிநூல். சூ. 56.
முத்தகுதி=மூன்றுதகுதிவழக்கு. சூ. 267.
முந்நீர்=கடல். சூ. 391.
முப்பானேழ்=முப்பத்தேழு. சூ. 61.
மும்மை=மூன்று. சூ. 4.
முயற்சி=நால்வகைத்தொழில். சூ. 72.
முயால்=முசல். வி. 63.
முயிறு=மந்தி.
முரசம்=முரசு=பறை. சூ. 391.
முரண=மாற. சூ. 324.
முரணுதல்=திரிக்குதல். சூ. 194. மாறுதல். சூ. 324.

முரண், முரணுதல் = விகாரப்படுதல். யாப். 36.
முரண்கொள் சிந்தை = மாறுதலுள்ள மனம். சூ. 31.
முரள்=இப்பி. சூ. 378.
முருக்குதல்=கெடுத்தல். சூ. 25.
முருந்து=இறகின் அடியிற்குருத்து. வி. 109.
முல்லை=ஓர் பூ. வி. 76. ஐந்திணையில் ஒன்று. சூ. 27. காடுங் காடுசார்ந்த இடமும். இது இடைநிலம். வி. 220.
முழக்கு=ஓசை. சூ. 391.
முழங்கல்=ஒலித்தல். சூ. 391.
முழுமதி=பூரணசந்திரன். சூ. 258.
முழை=குகை, மலையினுட்குகை. சூ. 152.
முறுவல்=நகை. சிரிப்பு. முறுவலித்தல். வி. 76.
முறை=வரிசை, ஒழுங்கு. சூ. 71. முறை நிரனிறை. சூ. 79.
முறைப்பெயர்=முறைமையைப்பற்றிவரும்பெயர். சூ. 282.
முறைமைப் பொருள் சூ. 298 = எழுத்துக்கள் முன்பின்னிற்குமுறையிலக்கணம். சூ. 57.
முறையடைதல் = ஒன்றையொன்று விசேடித்து வருதல். 444.
முறையின்வைப்பு = அதிகாரமுதலான வைகளைக் காரணகாரிய முறையாக வைத்தல். சூ. 13.
முற்றல்=பழுத்தல். வி. 124.
முடித்தல். வி. 81.
முடிதல்.
முற்றிழாய்=பூரணாபரணங்களையுடையவளே. [முற்று. 53. இழை. வி. 64. 157.]
முற்று=முடிவு. முற்றுகரம். சூ. 164. முற்றுவினை. சூ. 167. 171. 397. 415. இடைச்சொல்லின் பொருளில் ஒன்று. சூ. 353.
("தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்; எல்லாரும்வந்தார்." ஈ-து முற்றுப் பொருளில்வந்த உம்.)
முற்றுத்தொடர்=தெரிநிலை தெரியாநிலையாகிய முற்றுத்தொடர். சூ. 322. 323. 152.
முற்றும்மை=முழுவும்மை. சூ. 358.
முற்றுவிகுதி=முடிந்தசொல்லின் கடை

முற்றேல்=முற்று ஆகின். [முற்று+ஏல்.] சூ. 341.
முனிவு=வெறுப்பு. சிற. பா. 37.
முனைவன்=கடவுள். சூ. 6.
முன்=ஏழன்உருபு. வி. 63.
முன்மொழிந்து கோடல்=முன் ஓரிடத்தொன்றைச் சொல்லிப் பின்வேண்டுமிடத்து அதனை எடுத்துக்கொள்ளுதல். சூ. 14.
முன்னதினுணர்தல் = குறிப்பினாற் பொருளறிதல். சூ. 449.
முன்னம்=எண்ணம். குறிப்பு. சூ. 449. வி. 209.
முன்னிலை=முன்னிலையிடம். 324. 266. 282. 285. 330.
முன்னிலைச்சொல் = முன்னிற்பவனைக் குறிக்குஞ்சொல்.
முன்னிலைப்பொருள் = முன்னிலையிடப்பொருள்.
முன்னிலையசை=முன்னிலையிடத்து வருகிற அசைச்சொல். சூ. 372.
முன்னிலை யேவலொருமை = முன்னிற்கின்ற ஒருவனைப்பார்த்து ஏவுதல். வி. 84.
முன்னிலை யேவல்வினை = முன்னிற்பவனுக்குக் கட்டளையிடுந்தொழில். வி. 84.
முன்னின்றமெய்திரிதல் = முன்னிருந்த மெய்மற்றொரு மெய்யாகவிகாரப்படுதல். சூ. 136.
முன்னுருவு = பழையவடிவம். சூ. 89.

## மூ

மூக்கறிவு = கீழ்ப்போன இரண்டறிவுகளையன்றி மூக்காற் கந்தத்தையறிதல். சூ. 379.
மூக்கு=நாசி. சூ. 74. 75. 376. 379.
மூங்கையான்=ஊமையன். வி. 145.
மூட்டுதல்=எழுப்புதல். வி. 81.
மூதூர் = பழமையானஊர். சூ. 391. [வி. 121.]
மூரல்=பல். வி. 109.
மூர்த்தி=உருவம். கடவுள். சிற. பா. 5.
மூவழி=முதல் இடை கடை. சூ. 95. 156.
மூவறிவுயிர்=கறையான் எறும்பு முதலியவை. சூ. 379.

மூவறுமொழி = பதினெட்டுப் பாஷைக ள். சிற. பா. 7. சூ. 273.
மூவிடத்தன = மூன்றிடங்களுக்கும் பொ துவாகின, மூன்றிடங்களிலும் வரும். சூ. 339.
மூவிடம் = தன்மை, முன்னிலை. படர்க் கை. சூ. 142. 266.
மூவினம் = வல்லினம், மெல்லினம், இ டையினம். சூ. 239.
மூவொன்பான் = இருபத்தேழு. சூ. 324.
மூழ்குதல் = முழுகுதல். வி. 41.
மூளுதல் = எழும்பல். வி. 12.
மூன்றும் வேற்றுமைக் கர்த்தா செயப் பாட்டுவினையையாளும் வினைமுதல்.

## மெ

மெய் = உண்மை, நிச்சயம். வி. 95. ஒற் றெழுத்து. சூ. 199. 214. மெய்யெ ழுத்து. சூ. 63. சரீரம். வி. 79. சூ. 376.
மெய்யீற்றுப்புணரியல் = மெய்யீற்றுப் பதம் புணருகிறஇயல்பு. வி. 29. 40. சூ. 204. 237.
மெலி = மெல்லெழுத்து. சூ. 178. 94. 158. வி. 9.
மெலித்தல் = வல்லொற்றை மெல்லொ ற்றுக்கல். சூ. 155. வி. 41.
மெலிகி = கனஞ்செய்யாதிருந்து. சூ. 30.
மெல்லியர் = சிறியோர். வி. 85.
மெல்லெழுத்து = மெலி. மென்மை. மென்கணம். மெல்லினம். வி. 9.
மெல்லினம் = மென்கணம். மெலிவாயுச் சரிக்கப்பட்ட எழுத்துக்கள். சூ. 69. வி. 9.
மென்மை = மெல்லினம். சூ. 124. மெல் லெழுத்து. சூ. 75. வி. 9. மிருது. மெ துத்தன்மை, எட்டீறில் ஒன்று. சூ. 386.
மென்றொடர் = மெல்லெழுத்தைத்தொ டருந்தொடர்ச்சி. வி. 15. சூ. 94.

## மே

மேதினி = பூலோகம். வி. 79.
மேதை = நரம்பு. சூ. 268.
மேதி = எருமை. வி. 137.
மேல் = மிசை, மீ. ஏழன்உருபு. வி. 63.
மேவலது = பொருந்தாதது. சூ. 153. [மேவு + அலது.]
மேவல் = பொருந்தல். சூ. 75. பிறத்தல். சூ. 85. 101.
விரும்புதல். வி. 210.
மேவிடல் = உண்டாதல். சூ. 85. [வி. 124. (டு.)]
மேளம் = ஓர்வாத்தியம். வி. 120.
மேற்கோள் = ஆசிரியவசனம். சூ. 9. உ தாரணம். சூ. 21.

## மை

மை = மசி. கறுப்பு. நிலமை.
ஓர்விகுதி. வி. 94.
மைந்தன் = மகன்.
மையல் = காமமயக்கம். சூ. 384.

## மொ

மொய்த்தல் = கூடுதல். வி. 91. 114.
மொழி = சொல். சூ. 91. 94. 299.
மொழிபெயர்ப்பு = ஒரு பாடைமொழி யை மற்றொரு பாடைமொழியாகத் திருப்பி முடித்தல். சூ. 50.
மொழிமாற்று = எட்டுப் பொருள்கோ ளில் ஒன்று. சூ. 454.
மொழிமுதற்போலி = மொழிக்கு முத லில் வரும்போலியெழுத்துகள். சூ. 123.
மொழியிடைப்போலி = மொழிக்கு நடு வில் வரும் போலியெழுத்துகள். சூ. 123.
மொழியீற்று = மொழியின் கடையில் நின்ற. [வி. 152. 26.]

## மோ

மோ = இடைச்சொல். சூ. 372.
மோனை. வி. 188. (முகனை.)

## மௌ

மௌவல = வனமல்லிகை. சூ. 95.
மௌலி = முடி. வி. 140.

## ய

யகரவுடம்படுமெய் = வருமுயிர்க்கு யகரம் உடம்படுவது. வி. 23.

## யா

யா. வி. 6. (E.)
யாக்கை = சரீரம். வி. 154. [யாத்தல். வி. 96.]
யாங்கணும் = எவ்விடமும். [யாங்கு + அ ண் + உம். வி. 108. 113.]

## வா



## வி



விகுர்தி என்னும் ஆரியமொழித் திரிவு: பகுதிப் பொருளைத் தன்னகப்படப் பின்னின்று விகாரப் படுத்தலால் விகுதி ஆம்.

விக்குள்=விக்கல். வி. 82.
விசும்பு=மேகம். வி. 61.
விசேடம் = சூத்திரத்துட்பொருளன்றி அங்கே வேண்டியிருந்தால் பெய்து ரைப்பது விசேடவுரை. 21.
விசேடித்துநிற்றல்=ஒரு பொருளுக்குரிமையாய் நிற்குதல்.
விசையன் = செயத்தையுடையவன் ஓர் பெயர். வி. 93.
விடலை=ஆண்மகன். சூ. 276.
விடாத ஆகுபெயர் = தத்தம் பொருளை விட்டு நீங்காது நின்று தம்பொருளின் வேறல்லாத பொருளையுணர்த்தல்.
விடுதி. வி. 96.
விடுத்தல்=உத்தரஞ்சொல்லுதல். சூ.41
விடை=உத்தரம். சூ. 21. எதிர்மொழி.
விட்டஆகுபெயர் = பொருத்தமில்லாத மொழியாய் நின்று பிறிது பொருளுணர்த்தல்.
விட்டிசைத்தல்=வெவ்வேறாக வொலித்தல்.
விண்=ஆகாசம். வானம். வி. 86.
விண்ணவர்=வானோர். வி. 32. 93.
விதத்தல்=சிறப்புவிதி கூழ்தல். சூ. 165.
விதப்பு=பின்பு கூறப்படுஞ் சிறப்புவிதி. சூ. 165. [விதம். விதித்தல். விதப்பு. வி. 76. 94.]
விதவாதன = எடுத்துச் சொல்லாதன. சூ. 165.
விதி=செயற்கை. சூ. 165. முறை. சூ. 139. 169.
விதித்தல்=வகுத்தல். சூ. 257.
வித்துனர்=விஷுதத்தார்கள். வி. 85.
விநோதன்=பொழுதுபோக்கி விளையாடுபவன். சிற. பா. 17. [வி. ⁹ .]
விபத்தி=வேற்றுமை. வி. 27. (L.) 55. (T.)
விமானம்=தேர். வி. 86.
விம்முதல்=விம்மி அழுதல். வி. 79. 81.
வியங்கோள் = மரியாதையேவல். சூ 338. 371. வி. 85. சூ. 168. வி. 140.
வியன்=விஸ்தாரமான. வி. 157.
விரவாசினைமுதல்=சினையுமுதலும் ஒற்றுமை கருதிமயங்கச் சொல்லப்படாவாம். 428.
விரவியபொருள்=கலந்தபொருள். சூ. 17.
விரவுதல்=கலத்தல். சூ. 419.
விரவுத்திணை=பொதுத்திணை.
விரி=விரிவு, தொகையின் விரிவு. சூ. 91. [வி. 96.]
விரித்தல்=தொகுத்துக்கிடந்ததை விரித்து முடித்தல். சூ. 50.
ஓசைகுறைந்தால் எழுத்தாயினுஞ் சாரியையாயினும் பெய்து விரிப்பது. சூ. 155. வி. 41.
விரிவு = வேற்றுமையுருபு முதலியன தொக்குநிற்பின் அவற்றை விரித்தெழுதுவது விரியுரை. சூ. 21.
விருத்தம். வி. 193.
விருத்தன்=கிழவன். வி. 120.
விருத்திசந்தி=வடமொழிச்சந்தி. வி. 42.
விரித்தியுரை=விரிவான உரை. பதினறு உறுப்புகளைக் கொண்டுவருவது. சூ. 23.
விரை=வாசனை. மணம். வி. 64. சூ. 272.
விலகல். வி. 14.
விலக்கணி. வி. 209.
விலங்கலோசை=நரமடங்கல், என்பர். ஐகாரம் அவ்வோசையுள்ளது.
விலங்கு=மிருகம். வி. 59. சூ. 381.
விழுமியதுபயத்தல் = சிறந்தபயனைத் தருதல். சூ. 13.
விழுமியார்=நல்லோர் [விழுமை + ஆர். வி. 121. 93.]
விழைவு=ஆசை. வி. 111. விருப்பம். சூ. 353. 363.
விள=விளாமரம். வி. 70. (IV.)
விளக்கு=தீபிகை. வி. 111.
விளக்குதல் = விளங்கச்செய்தல். சூ. 271.
விளங்கவைத்தல் = யாவருக்கும் பொருள் விளங்கித் தோன்றவைத்தல். சூ. 13.
விளங்கல்=பிரகாசம். சூ. 6.
விளங்குதாரணத்தாகுதல்=தெரியத்தக்கவுதாரணங்களையுடையதாதல். சூ. 13.
விளம்புதல்=சொல்லுதல். வி. 93.
விளி=விளித்தொடர், அது எட்டாம் வேற்றுமைத்தொடர். சூ. 152.
விளித்தல்=அழைத்தல். சூ. 304. 314.

விளிப்பெயர் = எட்டாம் வேற்றுமைப் பெயர். சூ. 160.

விளிவேற்றுமை = அழைத்தலாகிய எட்டாம் வேற்றுமை. சூ. 101. 292.

விள்ளுதல்=வேறுபடல். சூ. 82.

விற்பூண். சூ. 452. 456.

வினா=கேள்வி. சூ. 416=கேள்வியைக் கொண்டு முடித்தல். சூ. 295.
வினாவெழுத்துக்களால் வருபெயர். சூ. 276. 279.

வினாதல்=கேள்விகேட்குதல். சூ. 41.

வினாவெழுத்து=முதலிலும் கடையிலும் நின்று கேள்விசெய்கிறவெழுத்து. சூ. 67. வி. 6.

வினை = மூவகைவினைச்சொற்கள். சூ. 395. 6.=வினைச்சொற் பகாப்பதம். சூ. 131.=தொழில். வி. 23.

வினைஇடைச்சொல். வி. 124. (T.)

வினைக்குறிப்பு=வினைக்குறிப்புச் சொல் லிலககணம். சூ. 321.

வினைக்குறிப்புமுற்று=குறிப்பாகக் காலங்காட்டுஞ்சொல். சூ. 321. வி. 93.

வினைக்குறிப்பு முற்றாலணையும் பெயர்ப் பகுபதம்=முக்காலங்களுள் ஒன்றைக்குறிப்பாகக்காட்டி எட்டுவேற்றுமையுள் ஒன்றையேற்றுவருவது. வி. 93.

வினைக்குறை=வினையெச்சம். சூ. 346.

வினைத்தொகை. சூ.152.405.179.வி.153.

வினைப்பெயர்=தொழிற்பெயர். சூ.141. 286. வி. 94.

வினைமாற்று=தொழிலைமாற்றுவது. வினை மாற்றுப்பொருள். சூ. 365.

(வினை ஒழிவு தோன்ற மாற்றலும்,
ஒழிவு தோன்றாது மாற்றலும், என இருவகைப்படும்.

(உ-ம்.) "மற்றறிவாம் நல்வினை" எ-ல், விரைந்தறிவாம், என்னும் வினையைமாற்றி, விரையாதறிவோம் என்பது வினையைத்தரும்.)

வினைமுதல்=கர்த்தா. 321. செய்பவன். 344. வி. 128.

வினைமுதற்பொருள் = தனது புடைபெயர்ச்சியாகிய தொழிலில் சுதந்தரமுடையபொருள்.

வினைமுற்று = தெரிநிலைவினைமுற்றுச் சொற்கள். சூ. 351. 325. வி. 77.

வினையாலணையும்பெயர் = காலம் நின்ற வினையால் உண்டாகுபெயர். வி. 95. சூ. 286.

வினையியல் = வினைச்சொல்லின் பங்கு. சூ. 320-351. வி. 76-106.

வினையின்விகுதி = வினைப்பகுபதங்களின் கடைநிலை. சூ. 140.

வினையுருபு = விகுதிமுதலிய வினையுருபுகள். 352.

வினையெச்சம் = வினைக்குறை. சூ. 322. வினையைக்கொண்டு முடிபவை. சூ. 342. 351. 343. வி. 86. 140.

## வீ

வீக்குதல்=கட்டல். வி. 137.

வீங்குதல்=வீங்கிப்போகுதல். வி. 79.

வீசு=வீச்சு. வி. 96.

வீடு=மோட்சம். சூ. 10. வி. 219. [வீடு. வி. 96.]

வீழ்தல்=விழுதல். வி. 34.

வீற்றிருத்தல் = எழுந்தருளியிருத்தல். வி. 108.

## வெ

வெஃகுதல்=விரும்புதல். வி. 95.

வெகுளி=கோபம். வி. 152.

வெண்=வெண்மை. வி.121.சிற.பா.15. சூ. 135. 136.
வெண்சீர். வி. 175.

வெண்பா. வி. 176. 185. 190.

வெம்=வெம்மையான. வி. 17. [121.]

வெய்து=விரைவாக. வி. 132.

வெருகு- பூனை. வி. 26

வெருவரல்=அஞ்சல். வி. 132.

வெல்லல்=செயித்தல். சூ. 388.

வெல்லுறுதல்=வெல்லல்.செயங்கொள்ளல். சூ. 53.

வெவ்=வெம்மையான. வி. 82. 121.

வெளிப்படவில்லது=மறைந்து நிற்பது. சூ. 404.

வெளிப்படை=விரி. விரிவாகியசொல். சூ. 259. [வி, 96.]

வெள்=வெண்மையான. வி. 76.

வெள்குதல்=அஞ்சல். வி. 81.

வெள்ளுத்தல். வி. 76.

வெற்பு=மலை. சூ. 276.
வெற்றிலை. வி. 162.
வெற்றெனத்தொடுத்தல் = பொருளொன்றுங் கருதிக்கொள்ளாமல் வெளிறுபடச் சொற்களைச் சேர்த்துவைத்தல். சூ. 12.
வென்றி=செயம். சூ. 338. [வெல். வி. 96.]

## வே

வேகுதல்=எரிதல். வி. 87.
வேங்கடம்=வடவேங்கடம், திருப்பதி. நன். சிற. பா. 8.
வேங்கை=ஓர்மரம். வி. 63.
வேட்டல் = ஆசைப்படுதல். வி. 33. [95.]
வேட்டை=வேண்=அவா. வி. 96. (o.)
வேண்டுழி = வேண்டுமிடம். சூ. 155. [வி. 153. 63.]
வேண்டல்=விரும்பல். வி. 82.
வேண்டு. வி. 126.
வேணா = தமிழ் நாடுகளில் ஒன்று. சூ. 273.
வேதனை=உபத்திரவம். வி. 136.
வேத்ரவை. வி. 26.
வேந்தன்=அரசன். வி. 159.
வேந்து=அரசன். வி. 26. [வி. 17.]
வேந்தோன்றி=கார்த்திகைப்பூ. சூ. 290.
வேய்=மூங்கில். சூ. 116.
வேய்ங்குழல்=வேய்க்குழல். [சூ. 116. 224.] மூங்கிலாலான ஊதுகுழல்.
வேர்த்தல்=வியர்த்தல். வேர்வையடைல். வி. 79.
வேல்=கைவேல், ஓர்ஆயுதம். வி. 39.
வேள்=காமன். வி. 93. சூ. 276.
வேள்வி=யாகம். பலி. வி. 81.
வேறல்=வெல்லல். வி. 94.
வேறு. வி. 125. சூ. 339. விரும், கூறு. வி. 125.
வேற்றவினை. வி. 125.
வேற்றுமை=வேற்றுமைப்பொருட்புணர்ச்சி. சூ. 152.
வேறுப்படுத்துவது. சூ. 291. 202. 203. 204. வி. 55.
வேற்று=வேறு. வி. 112.
வேற்றுநிலைமயக்கம் = பிற மெய்ம்மயக்கம். சூ. 110.
வேற்றுமைத்தொகை. சூ. 152. 404. வி. 152.
வேற்றுமையுருபு=ஐமுதலியவேற்றுமையுருபு. சூ. 352.
வேனில் = வேனிற்காலம், ஆறுபருவத்தில் ஒன்று, கோடைக்காலம். சூ. 276. வி. 93.

## வை

வைகலும்=தினந்தோறும். வி. 72.
வைகுதல்=தங்குதல். வி. 63.
வைதல்=நிந்தித்தல். வி. 82.
வைப்பு=இடம். வி. 157.
வையகம்—பூலோகம். (வை + அகம்.) வி. 60.
வையம் = பூமி. வி. 40. (வை + அம்.) வி. 96.

## ஹு

ஹு, ஹும், விகுதிகள். சூ. 145. 272. வி. 77.

---

முடிந்தது முற்றும்.

---